# நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள்



கி. கருணாகரன்
...ா. பாக்கியலட்சுமி

# நாட்டுப்புறவியலாய்வு

## நெறிமுறைகள்

**டாக்டர் கி. கருணாகரன்**
பேராசிரியர் & தலைவர் - மொழியியல் துறை
பாரதியார் பல்கலைக்கழகம்

&

**இரா. பாக்கியலட்சுமி**
ஆய்வாளர் - மொழியியல் துறை
பாரதியார் பல்கலைக்கழகம்

இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம்
அண்ணாமலைநகர்

முதற்பதிப்பு : ஆகஸ்டு 1989



விலை : ரூ. 30-00

அச்சிட்டோர் :

கிராபிஃக் ஆர்ட் பிரிண்ட்
319, பாரதியார் ரோடு, நியூ சித்தாபுதூர்
கோயம்புத்தூர்-641 044

தமிழாய் தத்துவமாய் விளங்கும்

திராவிடப் பண்பின் உறைவிடம்

பகுத்தறிவுப் பாசறையின் புகழிடம்



தமிழகக் கல்வி அமைச்சர்

மாண்புமிகு

பேராசிரியர் **க. அன்பழகன்** அவர்கட்கு

அன்புக் காணிக்கை

டாக்டர் கொ. ம. மாரிமுத்து
துணைவேந்தர்
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர்-641 046

# அணிந்துரை

நாட்டுப்புற இலக்கியமும் கலைகளும் மக்களது வாழ்வோடும் வரலாற்றோடும் பின்னிப்பிணைந்தவை. தொன்று தொட்டே வழங்கியும் வாழ்ந்தும் வருபவை. எளிய, இனிய மொழியமைப்பும் பயன்பாடும் கொண்டவை. கருத்துச் செறிவும் கருத்துப் புலப்பாடும் அமையப்பெற்றவை. கேட்டார்ப் பிணிக்கும் முறையில் அமைந்துள்ளதோடு கேளாரும் மீண்டும் மீண்டும் விரும்பிக் கேட்கும் வண்ணம் அமைக்கப்பட்டிருப்பவை நாட்டுப்புற இலக்கியங்கள் என்றால் அது மிகையாகாது. ஒரு மொழியிலே செவ்விலக்கியங்கள் வளரத் தொடக்க காலத்திலே அடிப்படையாகவும் ஆதாரமாகவும் இருந்தவை இத்தகைய நாட்டுப்புற இலக்கியங்களே என்றும் கருதலாம். இத்தகைய பண்புகளும் சிறப்புக்களும் கொண்ட இலக்கியங்களையும் கலைகளையும் பேணிப் பாதுகாப்பதோடு, அவற்றை ஆய்வு செய்வதும் வெளியுலகிற்கு அறிமுகப்படுத்திப் பரப்புவதும் மிகவும் இன்றியமையாத பணியாகும்.

ஒரு சமுதாயத்தின் பல்வேறு நிலைகளை, அமைப்பினை, இயக்கத்தினை, ஈடுபாட்டினைப் பிரதிபலிப்பவை இவ்வகை இலக்கியங்களும் கலைகளும் என்பதால், இவற்றை வரன்முறைப்படுத்திப் பரப்புவதும் ஆய்வு செய்வதும் இன்றைய இலக்கிய வளர்ச்சிக்கும், மொழி வளர்ச்சிக்கும், இவற்றின் வாயிலாக மேற்கொள்ளப்படும் சமுதாய வளர்ச்சிக்கும் உரமிடும் வகையில் அமையும் என எதிர்பார்க்கலாம்.

இந்த நிலையில் இத்துறையில், அத்துறை சார்ந் தோர் மட்டுமின்றிப் பல்துறையினரும் ஆர்வத்தோடும் ஈடு பாட்டோடும் ஆய்வுகளை மேற்கொள்வது அவசியமானதும் கூட. இந்த அடிப்படையைக் கருத்திற்கொண்டு பாரதியார் பல்கலைக்கழக மொழியியல் துறையும் தமிழ்த்துறையும் ஆய்வு களை மேற்கொண்டு வருகின்றன. '' நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள் '' என்ற தலைப்பில் வெளிவரும் இந்நூல் இவ் வடிப்படையின் விளைவேயாகும். இந்நூலை நல்ல அடிப் படை நூலாகவும் ஆய்வு நூலாக்வும் ஆக்கித் தந்துள்ள பேராசிரியர் டாக்டர் **கி. கருணாகரன்,** திருமதி **இரா. பாக்கியலட்சுமி** ஆகியோரது நன்முயற்சியை நான் பெரிதும் பாராட்டுகிறேன், வாழ்த்துகிறேன். இத்தகைய நல்ல ஆய்வு நூல்கள் இத்துறையில் வெளிவர, இந்நூல் ஆய்வாளர்களிடையே ஆர்வத்தையும் ஊக்கத்தையும் தோற்று விக்கும் எனப் பெரிதும் எதிர்பார்க்கிறேன்.

கோயம்புத்தூர்-46
11 - 08 - 1989

**கொ. ம. மாரிமுத்து**

# நூல் அறிமுகம்

காலங்காலமாக மக்களிடையே வழங்கி வருபவை நாட்டுப்புற இலக்கியங்களும் கலைகளுமாகும். இவற்றைத் தொகுத்தல், எழுத்திற்குக் கொண்டு வந்து அமைத்து ஆராய்தல், பரப்புதல் போன்ற பணிகள் இந்நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து முறையாகவும் வேகமாகவும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இத்துறையில் ஆரம்பகாலப் பணி தொகுப்பியல் சார்ந்ததாகவே இருந்தது. ஆனால் காலஞ்செல்லச் செல்ல இத்தகு இலக்கியங்கள், கலைகள் போன்றவற்றின் வாழ்வியல் தொடர்பும் சிறப்பும் இன்றியமையாமையும் வெளிப்படத் தொடங்கலாயிற்று. அவ்வாறு தொடங்கிய நிலையில் தொகுக்கப்பட்ட இலக்கிய வகைகளையும் கலைகள் போன்றவற்றையும் முறையாகப் பகுப்பாய்வு செய்யத்தலைப்பட்டனர் சிலர். இந்தச் சிலரும் பெரும்பாலும் இலக்கியவாதிகளாகவே இருந்தனர். பின்னர் இத்தகைய இலக்கியம் மற்றும் கலைகளின் பல்துறைச் சார்பினை நன்கு உணர்ந்த நிலையில் இவை பற்றிய பன்னோக்கு ஆய்வுமுறையின் தேவையும் இன்றியமையாமையும் வெளிப்படலாயிற்று. இதனால் இலக்கிய ஆய்வாளர்களோடு சமுதாயவியலார், மொழியியலார், மானிடவியலார் எனப் பிறதுறையினரும் ஈடுபட்டு, தனித்தனியாகவும் ஒருங்கிணைந்தும் நாட்டுப்புறவியலாய்வு மேற்கொள்ள முனைந்தனர்.

இதுபோன்ற ஆய்வுகளுக்கு அடிப்படைத் தேவைகள் சில உள. அவை சிலவே ஆனாலும் அவற்றை முறையாகத் தெளிவுபடுத்தியும் விளக்கியும் அறிமுகம் செய்வது வளர்ந்து வரும் ஒரு துறையின் மேம்பாட்டிற்கு நிச்சயம் தேவையானதும் உதவியாக இருக்கக்கூடியதுமாகும். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டும் நூல்கள் சில வெளிவந்துள்ளன.

'நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள்' எனும் இந்நூல் நாட்டுப்புறவியல்-நாட்டுப்புறவியலாய்வு, நாட்டுப் புறவியலாய்விற்கான தரவு, தரவு சேகரித்தல், சேகரித்த தர வினைத் தொகுத்துப் பகுப்பாய்வு செய்தல், நாட்டுப்புறவிய லாய்வுக்கான பல்வேறு அணுகுமுறைகள் போன்றவற்றை மொழி, இலக்கியம் மற்றும் சமுதாயம் என்பனவற்றின் பின்ன ணியின் ஒருங்கிணைந்த அமைப்பில் வெளிப்படுத்துகிறது. இது நாட்டுப்புறவியல் மற்றும் நாட்டுப்புறவியலாய்வு பற்றிய விளக்க நூலாவும், அறிமுக நூலாகவும் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. பல்துறையினரும் பயன்படுத்தித் தத்தம் ஆய்விற்கு ஏற்பப் பயன்படுத்திக்கொள்ளும் வகையிலும் பயன் பெறும் முறையிலும் இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

இந்நூலில் நாட்டுப்புறவியல் தொடர்பான அனைத் துக் கூறுகளும் இடம் பெற்றிருப்பதாக நாங்கள் கருதவில்லை. ஆனாலும் இன்றியமையாத கூறுகளும் இடம் பெற்றிருப்பது கண்கூடு. இன்னும் பல கூறுகள் பற்றிய கருத்துக்கள் - கோட்பாடுகள் சில இந்நூலில் இடம் பெற்றிருக்க வேண்டும். இத்தகைய சிறு நூலில் பரந்துபட்ட ஒரு துறை குறித்த பல்வ கைக் கருத்துக்களையும் கோட்பாடுகளையும் இடம்பெறச் செய்தல் எளிதானதல்ல என்பதாலும், போதிய காலமின்மை யாலும் நிறைவாக இடம்பெறச் செய்ய இயலவில்லை. எனி னும் இத்துறையின் வளர்ச்சி பிறதுறை வளர்ச்சியோடும் மாற் றத்தோடும் பயன்பாட்டோடும் தொடர்பு கொண்டது என்ப தைக் கருத்திற்கொண்டு ஆய்வுநெறிமுறைகள் ஆங்காங்கே தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. இந்நூலினைப் பயன்படுத்து வோர் ஆர்வம் உந்தப்பெற்று நாட்டுப்புறவியலாய்வு தொடர் பாக இன்னும் அறிந்துகொள்ளவேண்டும் என்ற மனநிலை யைப் பெறுவார்களேயாயின், அதுவே இந்நூலின் நோக்கத் தினையும் பயன்பாட்டினையும் பெற்றுக்கொள்ளச் செய்ததா கக் கருதலாம். இந்நூல் அத்தகைய நிலையினைத் தோற்று விக்கும் என்று பெரிதும் எதிர்பார்க்கிறோம்.

இந்நூல் உருவாக்கத்தில் எங்களுக்கு உதவி புரிந்தோர் சிலர்; ஊக்குவித்தோர் சிலர்; உறுதுணையாக இருந்த நல்லோர் சிலர். இத்தகையோரின் ஊக்குவிப்பும், உறு துணையும், உதவியுமே இந்நூல் வெளிவரக் காரணமாக அமைந்தன என்றால் அது மிகையன்று. சிலரது இத்தகைய செயலை இத்தருணத்திலே நாங்கள் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். இந்நூலிற்குச் சிறப்பானதொரு அணிந்துரை யினை அளித்துள்ள கோவை பாரதியார் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மேன்மைமிகு பேராசிரியர் டாக்டர் **கோ. ம. மாரிமுத்து** அவர்களுக்கு எங்கள் பணிவன்பு கலந்த நன்றியினை உரித்தாக்குகிறோம். எங்களை உற்சாக மூட்டி ஊக்கப்படுத்திய டாக்டர் **மா. சு. திருமலை** தேவையான அடிப்படை மற்றும் ஆய்வு நூல்கள், கட்டுரைகள் தந்தும் நல் யோசனைகளைக் கூறியும் எங்கள் சிந்தனையைத் தூண்டிவிட்ட டாக்டர் **இராம. சுந்தரம்** டாக்டர் **இரா. சந்திரசேகரன்** டாக்டர் **சு. சக்திவேல்** டாக்டர் **ஆறு. இராமநாதன்** இந்நூல் எழுதும்போது எங்களோடு கலந்துரையாடி கருத்துத் தெளிவுபெற உதவிய டாக்டர் **சி. சண்முகம்** டாக்டர் **வ. ஜெயா** திருமதி **வெ. சாரதா** செல்வி **கி. விசயலட்சுமி** ஆகியோருக்கு எங்கள் நெஞ்சுநிறை நன்றியை உரித்தாக்குகிறோம். கையெழுத்துப் பிரதியையும் அச்சுப்பிரதியையும் எங்களோடு சேர்ந்து செப்பம் செய்ய உதவிய டாக்டர் **சி. சிவசண்முகம்** டாக்டர் **வே. தயாளன்** திரு. **ஓ. பாலகிருஷ்ணன்** ஆகியோருக்கு எங்கள் அன்புகலந்த நன்றி உரியது. மிகக் குறுகிய காலத்தில் இந்நூலினை வெளியிட்டுதவிய இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகத்திற்கும், அழகுற அச்சிட்டுத் தந்த கோவை கிராபிஃக் ஆர்ட் பிரிண்ட் நிறுவனத்திற்கும் எங்கள் நன்றியும் பாராட்டும் உரியது.

கோயம்புத்தூர்
11-8-1989

**கி. கருணாகரன்**
**இரா. பாக்கியலட்சுமி**

# உள்ளுறை





இயல் 1

# முன்னுரை

## 1.1 நோக்கம்

ஒரு சமுதாயத்தின் வாழ்வினையும் வளர்ச்சியினையும் குறித்து அறிந்து கொள்வதற்கு மற்றும் ஆய்வு செய்வதற்கு அச் சமுதாயம் தொடர்பான பல்வேறு செய்திகளும் கருத்துக்களும் நமக்குத் தேவைப் படுகின்றன. சமுதாயம் என்பது ஒரு தனிப்பட்ட அமைப்பு என்றாலும்கூட, அதனுடைய இயக்கம் தனிப்பட்டதல்ல. ஏனெனில் சமுதாய இயக்கத்திற்கு மொழி தேவை; பொருளாதாரம் தேவை; கல்விதேவை; செய்தித்தொடர்பு தேவை; அறிவியல் தேவை எனப் பல்வேறு தேவைகள் ஏற்படுகின்றன. ஆகவே சமுதாயமானது மொழி, கல்வி, பொருளாதாரம் போன்ற பல்வேறு கூறுகளின் அல்லது காரணிகளின் அடிப்படையில் செயற்படுகிறது, பாகுபாடு செய்யப்படுகிறது என்பது தெளிவாகிறது.

ஒரு சமுதாயத்தை நன்கு புரிந்துகொள்வதற்கும் அறிந்துகொள்வதற்கும் நமக்குச் சில அடிப்படைச் செய்திகள், கருத்துக்கள் போன்றவை மேலே குறிப்பிடப்பட்ட கூறுகளின் / காரணிகளின் அடிப்படையில் மிகவும் தேவைப்படுகின்றன. இது போன்ற கருத்துக்

களும் செய்திகளும் சமுதாய அமைப்பியல் விளக்கத்திற்கும் சமுதாய வரலாற்று விளக்கத்திற்கும், சமுதாய மாற்றம் - வளர்ச்சி விளக்கத்திற்கும் மிகவும் இன்றியமையாதனவாகவும் அமைந்து வருகின்றன. ஆகவே இவ்விளக்கங்களை நிறைவாகச் செய்துமுடிக்க ஓர் ஆய்வாளனுக்கு இக் கூறுகள் தொடர்பான பல்வேறு செய்திகளும் சிந்தனைகளும் முன் தேவையாக (pre - requisites) அமைகின்றன. இவ்வாறு அமைவதால் இவற்றைப் பல்வேறு மூலங்களின் வாயிலாகப் பல்வேறு இடங்களிலிருந்தும் சமுதாயப் பிரிவினரிடமிருந்தும் பெறவேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது.

சமுதாயத்தின் வாழ்வை, வரலாற்றை, அமைப்பை, மாற்றத்தை, வளர்ச்சியைப் பல்வேறு வகைகளில் பிரதிபலிக்கச் செய்யமுடியும்; வெளிப்படையாக எடுத்துக்காட்ட முடியும். இவ்வாறு பிரதிபலிக்கக் கூடிய, வெளிப்படையாக எடுத்துக்காட்டக்கூடிய சமுதாய வாழ்வியல் கூறுகளுள் ஒன்றுதான் இலக்கியமாகும். ஒரு சமுதாயத்தின் நீண்ட நெடிய வரலாறும் பாரம்பரியமும் இலக்கியத்தின் வாயிலாக வெளிப்படுகின்றன. காலங் காலமாகத் தோன்றிவரும் எழுத்திலக்கியங்கள் இவற்றைத் தெற்றென வெளிக்காட்டி நிற்பதே இதற்குச் சான்றாகும். அது போலவே காலங் காலமாக வாய்மொழி வாயிலாகவே வெளிப்பட்டு வரும் இலக்கிய வகையான நாட்டுப்புற இலக்கியம் என்பதும் சமுதாயத்தின் வாழ்வு, வரலாறு, வளர்ச்சி, மாற்றம், சிறப்பு, அமைப்பு போன்றவற்றை ஏதேனும் ஒரு முறையில் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ உணர்த்தியே வருகிறது எனலாம். இவ்வாறு இரண்டு வகையான இலக்கியங்களும் சமுதாய விளக்கத்திற்கும் சமுதாய மாற்றம் மற்றும் வளர்ச்சி குறித்த விளக்கத்

திற்கும் மிகவும் அவசியமாகின்றன. ஆகவே இத்தகைய இலக்கியங்களை முறையாகவும், தெளிவாகவும், வெளிப்படையாகவும், நிறைவாகவும் தொகுக்கவேண்டியதும் தொகுத்ததை வரன்முறை செய்து வகுக்க வேண்டியதும் அவ்வாறு வகுக்கப்பட்டதை அறிவியல் சார்ந்த அணுகுமுறைகளை அடிப்படையாகக் கொண்டு பகுப்பாய்வு செய்யவேண்டியதும் மொழி மற்றும் சமுதாயவியல் ஆய்வாளர்களது முக்கியமான பணிகளாக அமைகின்றன. இப்பணி தொடர்ந்தும் செம்மையாகவும் நடைபெற்றால்தான் இதன் மூலம் மேலே குறிப்பிட்ட சமுதாயம் குறித்த விளக்கங்கள் சிறப்பாக அமையும் சூழல் எதிர்காலத்தில் உருவாகும்.

தமிழ்மொழி நீண்ட நெடிய வரலாற்றினையும், பாரம்பரியத்தினையும், மரபினையும் பெற்று விளங்கி வரும் மொழி. மொழியமைப்பில், பண்பாட்டில், இலக்கிய உருவாக்கத்தில், வளர்ச்சியில் எத்தனையோ நிலைகளையும் வகைகளையும் பெற்று அவற்றின் வாயிலாக அதனது தொன்மையையும் வளத்தையும் பிற சமுதாயங்களுக்கும் மொழிகளுக்கும் எடுத்துக்காட்டி வரும் செம்மொழி. இத்தகைய பண்பினையும் சிறப்பினையும் பெற்று விளங்கும் இம்மொழி, வாய்மொழி இலக்கியத்தினைத் தொன்று தொட்டே கொண்டிருந்தாலும் அதனைப் பற்றிய முறையான ஆய்வு இந்நூற்றாண்டின் இரண்டாம் பகுதியிலேயே தொடங்கப் பெற்றது என்று குறிப்பிடவேண்டும். அதிலும் குறிப்பாக வாய்மொழி இலக்கிய வகைகளைத் தொகுப்பதே பெரும் ஆய்வுப் பணியாக இருந்து வந்துள்ளதைக் காண்கிறோம். மிக அண்மைக் காலத்திலே தான் தொகுத்த இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு ஆய்வாளர்கள் தமக்குத் தெரிந்த சில அணுகுமுறைகளைக் கொண்டு ஆய்வு மேற்கொண்டனர் - மேற்

கொண்டும் வருகின்றனர் என்பதையும் நம்மால் அறியமுடிகிறது.

பிற ஆய்வுகளைப் போலவே இலக்கிய ஆய்வும் பலதிறப்பட்டது, பல்துறைச் சார்ந்தது, இந்த அடிப் படையில் எழுத்திலக்கியமானது முன்னரே ஓரளவிற்கு முறையாக ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு விட்டது என்றாலும் தமிழ் மொழியின் இரண்டாவது இலக்கிய வகையான வாய்மொழி இலக்கியமானது தற்போதே இதுபோன்ற ஆய்வு அணுகுமுறைகளைக் கொண்டு ஆய்வு செய்யப்பட்டு வருகிறது. அதிலும் குறிப்பாகச் சில இலக்கிய வகைகளே பெரும்பாலும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன. அதைப் போல சில அணுகுமுறைகளே ஆய்வு செய்திடப் பயன்படுத்தப் பட்டு வருகின்றன. இத்தகைய சூழலில் வாய்மொழி இலக்கிய ஆய்வு மேற்குறிப்பிட்டவாறு அமைந்திட எல்லா இலக்கிய வகைகளைக் குறித்த ஆய்வுகள் மேற்கொள்ளப்படவேண்டியதும், அவ்வாறு மேற் கொள்ளப்படும் ஆய்வுகள் இருதுறை மற்றும் பல்துறை சார்ந்த ஆய்வுகளாக அமையவேண்டியதும் இன்றி யமையாததாகின்றன. இத்தகைய சூழல் உருவாக ஆய்வு அணுகுமுறைகள், நெறிமுறைகள், ஆய்வுக்கான முன் தேவைகள், ஆய்வுப் பொருள் பற்றிய முறையான மற்றும் நிறைவான கருத்துக்கள் போன்றவை நமக்கு மிகவும் தேவைப்படுகின்றன. இத் தேவையைக் கருத்திற் கொண்டும் நாட்டுப்புறவியலாய்வு இன்னும் சிறப்பாகச் செம்மைப்படுத்தப்படவேண்டும், நிலைபேறு செய்யப்படவேண்டும் என்ற நோக்கத்திலும் இது போன்ற அடிப்படை நூல் ஒன்று தேவை என்பதை உணர்ந்த நிலையில் உருவாக்கப்பட்டதே இச் சிறு நூல்.

## 1.2 பின்னணி

சமுதாயத்தில் ஏற்படும் எந்தவொரு மாற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் சூழலுக்கும் ஏதேனும் ஒரு பின்னணி (background) இருக்கும். ஒரு சமுதாயத்தின் அமைப்பு இயக்கம் ஆகியவற்றில் ஏற்படும் தாக்கங்களுக்கும் அவற்றின் பிரதிபலிப்புகளுக்கும் கூட ஒரு பின்னணி உண்டு என்று குறிப்பிடுவர். அதாவது எதுவும் தானாக ஏற்படுவதில்லை என்பதே இதனடிப்படைத் தத்துவமாகும். ஒரு நிகழ்ச்சியோ, தோற்றமோ, உருவாக்கமோ, ஏற்படும்பொழுது அதற்கு அடிப்படையாகச் சில காரணங்கள் அமைவது இயல்பானதே. நலிந்த சமுதாயம் முன்னேறுவதும்-முன்னேற முயற்சிப்பதும், கல்வியறிவற்ற சமுதாயம் கல்விபெற முற்படுவதும், பின்தங்கிய நாடு பொருளாதாரத்திலும் பிற துறை வளர்ச்சியிலும் முன்னேற முயல்வதும் அவ்வவற்றின் பின்னணியை ஒட்டியதே என்பது மறுக்க முடியாத உண்மைகளாகும். இவற்றின் முன்னேற்றத்திற்குப் பின்னணியை அடிப்படையாகக் கொண்டே சில கொள்கைகளையும் திட்டங்களையும் வகுத்துக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.

எடுத்துக்காட்டாக மொழி என்று எடுத்துக் கொண்டால் அதன் வளர்ச்சிக்குத் திட்டமிடும் போது அதன் பின்னணியைக் கருத்திற் கொண்டே மொழித் திட்டமிடுதல் (language planning) மேற்கொள்ளப் படுகிறது - மேற்கொள்ளப்பட வேண்டுமெனவும் வலியுறுத்தப்படுகிறது. இலக்கிய வளர்ச்சியும் இத்தகையதே, இன்றைய சமுதாயப் பின்னணியை ஒதுக்கி விட்டு ஆக்கப்படும் இலக்கியங்கள் ஒன்று வரவேற்கப் படுவதில்லை அல்லது பாராட்டப்படுவதில்லை. மற்றொன்று அவை நிலைபேறு (standardization)

பெறுவதில்லை. ஆகவே மொழி மற்றும் இலக்கியக் கல்வி, மற்றும் ஆய்வு, அம்மொழி சார்ந்துள்ள சமுதாயத்தின் உண்மையான பின்னணியைக் கருத்திற் கொண்டும் அதன் எதிர்கால வளர்ச்சியினை மையமாகக் கொண்டும் மாற்றி அமைக்கப்படுதல் வேண்டும் என்பது தெளிவாகிறது. இவ்வாறு மாற்றம் செய்ய நாம் முனையும்போது நமக்குச் சில அடிப்படைத் தேவைகள் இருப்பது தெரியவருகின்றன. அந்த வகையான அடிப்படைத் தேவைகளுள் வாய்மொழி இலக்கியங்கள் பற்றிய செய்திகளும் அவை குறித்த ஆய்வுகளும் அடங்கும்.

இன்றைய நிலையில் நாட்டுப்புற இலக்கியங்கள் மற்றும் கலைகள் தொடர்பான செய்திகளையும், கருத்துக்களையும், ஆய்வுகளையும் ஒரு சேர எடுத்து நோக்கின் அவற்றின் நிறை - குறைகள் நமக்கு நன்கு தெரியவரும். இதன் மூலம் சில இலக்கிய வகைகள் இன்னும் வரையறை செய்யப்படவேண்டிய நிலை, வேறு சில இலக்கிய வகைகள் - கலைகள் போன்றவை தொகுக்கப்படவேண்டிய நிலை, இன்னும் சில இலக்கிய வகைகள் மற்றும் கலைகள் பேணப்படவேண்டிய நிலை - பாதுகாக்கப்பட வேண்டிய நிலை, வேறு சில இலக்கிய வகைகள் மற்றும் கலைகள் போன்றவை தெளிவாகவும் முழுமையாகவும் ஆய்வு செய்யப்படவேண்டிய நிலை, இன்னும் சில இலக்கிய வகைகளும் கலைகளும் பரவலாக்கம் செய்யப்பட்டு, பயன்பாட்டிற்குக் கொண்டுவரப் படவேண்டிய நிலை என இவ்வாறு நாட்டுப்புற இலக்கிய ஆய்வில் மேற்கொள்ளப்படவேண்டிய பணிகள் ஏராளம் இருப்பது தெரியவரும். இதைக்கொண்டு மதிப்பீடு செய்து பார்க்கும் பொழுது இன்றுவரை நடைபெற்றுள்ள பணி - தொகுப்பு - ஆய்வு மிகக் குறைந்த அளவினதேயாகும். ஆகவே இவ்வகை இலக்கிய ஆய்விலும்

மொழியாய்விலும், சமுதாயவியலாய்விலும், மானிடவியலாய்விலும், உளவியலாய்விலும் மேற்கொள்ளப்பட வேண்டிய பணி தமிழ்ச் சமுதாய மற்றும் மொழி இலக்கியப் பின்னணியை ஒட்டி அமைய வேண்டியதும் தமிழ்ச் சமுதாயத்தின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் ஏற்ப மாற்றம் பெறவேண்டிய நிலையில் உள்ளதுமாகும் என்றால் அது மிகையாகாது. இந்நூலின் உருவாக்கம் இத்தகைய பின்னணியையும் அதன் தேவையையும் கருத்திற்கொண்டே அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## 1.3 அடிப்படை

எந்தவொரு அமைப்புக்கும் ஓர் அடிப்படை (basis) உண்டு. இந்த அடிப்படை அதன் இயக்கத்திற்கும் பயன்பாட்டிற்கும் அச்சாணியாக அமைந்துள்ளது. ஓர் அமைப்பின் இயக்கம் காலப் போக்கில் பல்வேறு காரணங்களால் மாறக்கூடியது. அதாவது, நிலைத் தன்மையிலிருந்து (static) மாறி பல கோணங்களில் பல முறைகளில் இயங்கக்கூடியது. இதனால் சில சமயங்களில் அடிப்படையில் சில மாற்றங்கள் நேரலாம்; இன்னும் சில சமயங்களில் அடிப்படை முழுவதுமாகக்கூட மாறலாம். அதன்படி முழுமையான மாற்றத்திற்கும் சில காரணங்கள் இருக்கும்; ஓரளவு மாற்றத்திற்கும் சில காரணங்கள் இருக்கும். எவ்வாறிருப்பினும் அடிப்படையும் மாற்றத்திற்கு உள்ளாவதே என்பதை இதிலிருந்து அறிய முடிகிறது. உலக சமுதாயங்களையும் அவற்றின் பண்பாடுகளையும், மொழிகளையும், தொடர்புகளையும், உறவுகளையும் ஒப்பிட்டு நோக்கும்போது இத்தகைய அடிப்படை மாற்றங்களை, நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது;

ஏற்றுக்கொள்ள முடிகிறது. ஆகவே, இலக்கிய ஆய்விற்கும் இது பொருந்தும் எனலாம்.

வாய்மொழி இலக்கியம் வழிவழியாக வந்தாலும் பல்வேறு காலகட்டங்களில் சமுதாயத்திலே ஏற்படும் மாற்றங்களுக்கும் வளர்ச்சிகளுக்கும் ஏற்ப இவற்றிலும் சில பல மாற்றங்கள் அவ்வப்பொழுது ஏற்பட்டு வந்துள்ளதை ஒப்பியலாய்வு நமக்கு ஓரளவு தெளிவினைத் தருகிறது. இதுபோன்று இந்த வகையான இலக்கியங்களின் அமைப்பு, மாற்றம், வளர்ச்சி, பயன்பாடு போன்றவற்றை ஆய்வு செய்யும்போது அவற்றின் அடிப்படைக் கூறுகளையும் பண்புகளையும் கவனத்தில் கொள்வதும், ஆய்வு முறைகளை அவற்றிற்கேற்ப அமைத்துக்கொள்வதும் எதிர்பார்த்த முடிவுகளைப் பெறுவதில் நிச்சயம் துணை செய்வதாகவே அமையும். இந்நூலில் விளக்கப்பட்டுள்ள ஆய்வு நெறிமுறைகள் வாய்மொழி இலக்கியத்தின் பெரும்பான்மையான அடிப்படைகளை மையமாகக் கொண்டே சொல்லப் பட்டுள்ளன.

## 1.4 அமைப்பு

வாய்மொழி இலக்கியம் கலைகள் போன்றவற்றைப் பொருளாகக் (subject matter) கொண்டுள்ள இந்நூல் கீழ்காணும் அமைப்பினைப் (structure and arrangement) பெற்றுள்ளது. நாட்டுப்புறவியல்பற்றிய பொதுவான - தேவையான கருத்துக்கள் ஓர் இயலாகவும், நாட்டுப்புற இலக்கிய வகைகள், கலைகள் பற்றிய ஆய்வுகள் குறித்த கருத்துக்கள் மற்றொரு இயலாகவும், இவ்வகை இலக்கியங்களையும், கலைகளையும் குறித்த ஆய்விற்கான களப்பணி முறைகள் பற்றிய கருத்துக்கள் - கோட்பாடுகள் போன்றிவை மற்றொரு

இயலாகவும், களப்பணி நிறைவாகவும், ஆற்றல் மிக்க வகையிலும் அமைவதற்குத் தேவையான வினாப் பட்டியல் போன்றவை இன்னொரு இயலாகவும், தரவு சேகரித்து அவற்றை வகுத்தும் தொகுத்தும் வரையறை செய்து பல்வேறு அணுகுமுறைகளைப் பயன்படுத்திப் பகுப்பாய்வு செய்வது குறித்த கருத்துக்கள் மற்றும் நெறிமுறைகள் மற்றொரு இயலாகவும், இவ்வியல் களின் வாயிலாகச் சொல்லப்பட்ட கருத்துக்களின் செறிவுச் சுருக்கம், கோட்பாடுகள் நெறிமுறைகள் போன்றவற்றை எதிர்கால நாட்டுப்புறவியலாய்விற்கு ஏற்ப செம்மைப்படுத்திக் கொள்வதற்கான வழிமுறை கள் போன்றவை முடிவுரையாகவும் அமைக்கப்பட் டுள்ளன.

## 1.5 தேவையும் இன்றியமையாமையும்

எந்தவொரு பொருளுக்கும் கருத்துக்கும் கருத்து வெளிப்பாட்டிற்கும் அமைப்புக்கும் - அதனியக்கத் திற்கும் நோக்கம், பின்னணி, அடிப்படை போன்றவை இருப்பது போலவே அதற்குத் தேவையும் இன்றியமை யாமையும் இருக்கவே செய்கிறது. இத்தகைய தேவை, இன்றியமையாமை நேரடியானதாகவோ (direct) மறைமுகமானதாகவோ (indirect) அமைந்திருக்கும். பொதுவாக மொழி - இலக்கிய ஆய்வுகள் அறிவிய லாய்வுகளைப் போல் நேரடியாகச் சமுதாயத்திற்கு உதவுவதில்லை என்று கருதப்படுகிறது. எனினும் மொழி - இலக்கியம் இல்லாமல் சமுதாயத் தொடர்புகள் சமுதாயப் பணிகள் சிறப்பாக நடைபெறுவதில்லை. ஏனெனில் மொழியில்லாமல் செய்தித் தொடர்பு இல்லை. மொழியில்லாமல் கருத்துப் பரிமாற்றம் நடை பெறுவதில்லை. மொழியில்லாமல் நாகரிகம் இல்லை. ஆகவே மொழியின் சமுதாயப்பாங்கு (social function)

மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். அது போன்றே இலக்கியமும், சமுதாயத்தோடு இரண்டறக் கலந்ததாகும். ஒன்றில்லாமல் மற்றொன்று இல்லை என்றே இதனை விளக்குவர் சமுதாய மொழியியலார்.1

வாய்மொழி இலக்கியங்கள், கலைகள், மருத்துவ முறைகள், விளையாட்டுக்கள், நம்பிக்கைகள் போன்றவை பழமையானவையாகத் தோன்றினாலும் இன்றையச் சூழலுக்கு ஏற்ப பயன்பாட்டிற்குக் கொண்டு வருவதன்மூலம் அவற்றிற்குப் புது மெருகூட்டி வளம் பெறச் செய்ய முடியும். அவ்வாறு செய்வதால் சமுதாய வளர்ச்சியில் அவற்றின் பங்கினை அதிகரிக்கச் செய்யவும் ஆற்றல் மிக்கதாகச் செய்யவும் வழியேற்படும். மேலும் அவ்வாறு செய்வதால் அவற்றின் மறைமுகத் தேவையும் இன்றியமையாமையும் நன்கு வெளிப்படும். இதனால்தான் இன்றைய பல்துறை அறிவு வெளிப்பாட்டிற்கும், பரவலாக்கத்திற்கும், கருத்துப் புலப்பாட்டிற்கும் மரபு வழி வந்த இலக்கியங்கள், கலைகள் போன்றவை பயன்படுத்தப்படவேண்டும் என்றும் இதனால் சமுதாய ஏற்பும் சமுதாயப் பயனும் அதிகமாகக் கிடைக்கும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. ஆகவே நாட்டுப்புறவியலாய்வுகள் இன்றைய சமுதாய வளர்ச்சிக்கு மிகவும் தேவை என்பது இதிலிருந்து உறுதிப்படுகிறது.

## அடிக்குறிப்பு

1. சமுதாய மொழியியல், பக். 14.

இயல் - 2

# நாட்டுப்புறவியல்

## 2.1 முன்னுரை

நாட்டுப்புறவியல் என்ற இப்பகுதி நாட்டுப்புற வியல் என்றால் என்ன, நாட்டுப்புறவியலில் சேர்த்துக் கொள்ளப்படும் இலக்கியம், கலைகள், அவற்றின் வகைகள் யாவை, இவ்வகை இலக்கியங்களையும், கலைகளையும் எந்தெந்தச் சமுதாயப் பிரிவினர் எங்கெங் கெல்லாம் எவ்வாறெல்லாம் நடைமுறையில் பயன் படுத்தி வருகின்றனர் - போற்றி வருகின்றனர், இவ் விலக்கியங்களும் கலைகளும் இன்றைய நிலையில் சமுதாயத்தில் பெற்றுள்ள இடம், இவை எதிர்காலத் தில் எவ்வாறெல்லாம் பேணப்படவேண்டும்-பரப்பப்பட வேண்டும்-பயன்படுத்தப்படவேண்டும் என்பன போன்ற பல்வேறு கருத்துக்களை மையமாகக் கொண்டு அமைக் கப்பட்டுள்ளது.

ஒரு மொழியின் இலக்கியம் நாட்டுப்புறவியல் இலக்கியத்தையும் உள்ளடக்கியது. ஒரு சமுதாயத்தின் கலைகள், நம்பிக்கைகள் போன்றவை நாட்டுப்புறக் கலைகள், நம்பிக்கைகள் போன்றவற்றையும் உள் ளடக்கியது. ஆகவே மக்களது சமுதாய நிலையையும் அவர்களது வாழ்வியல் தொடர்பான பல்வேறு கூறு

களையும் ஒன்றோடொன்று இணைத்துப்பார்க்கும் நிலையில் சில அடிப்படைச் செய்திகளும் கருத்துக்களும் கோட்பாடுகளும் நமக்குத் தெரிய வருகின்றன. ஆகவே நாட்டுப்புறவியலில் இடம்பெறும் இலக்கியங்களையும், கலைகளையும், விளையாட்டுக்களையும், மருத்துவ முறைகளையும், பண்பாடு, சமுதாயவியல் தொடர்பான செய்திகளையும், மொழி சமுதாயம் இவற்றின் அடிப் படையிலும் வரலாறு, உளவியல், பொருளாதாரம், கல்வி, தொழில் போன்ற கூறுகளின் அடிப்படையிலும் தெளிவாக அணுகி ஆய்வது இன்றையச் சூழலில் மிகவும் தேவையாகிறது. இத்தகைய பல்துறை சார்ந்த கல்வியே நாட்டுப்புறவியலாக இன்று பெருமளவில் அமைந்து வருகிறது - உருப்பெற்று வருகிறது.

இன்றைய நாட்டுப்புறவியலாய்வு வெறும் இலக்கிய ஆய்வாக மட்டும் அமையாமல் ஒருபுறம் சமுதாயவியலாய்வாகவும், மற்றொருபுறம் மொழி - இலக்கிய ஆய்வாகவும், இன்னொருபுறம் அறிவியல் ஆய்வாகவும், மற்றொருபுறம் கலையியல் ஆய்வாகவும் அமைந்து வருவதைக் காண்கிறோம். பல்வேறு துறை களில் நடைமுறையில் இருந்துவரும் ஆய்வுக்கொள்கை கள் இத்தகைய ஆய்வுக்கு இன்றைய நிலையில் மிகவும் தேவையாகின்றன. நாட்டுப்புற இலக்கியங்களிலும் கலைகளிலும் காணப்படும் கூறுகளைச் சமுதாய மற்றும் பண்பாட்டு அமைப்பில் இடம்பெறும் கூறுகளோடு பொருத்திப்பார்த்து ஆய்வு மேற்கொள்ளப்படுவது ஓரளவிற்கு முழுமையான நாட்டுப்புறவியலாய்வாக அமையும் என்றும் இன்று பரவலாகக் கருத்துரைக்கப் படுகிறது.

இந்நிலையில் நாட்டுப்புறவியலின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் நாட்டுப்புறவியலாய்வு இன்றியமையாத

தாக உள்ளது. ஆகவே நாட்டுப்புற இலக்கியத்தையும், கலைகளையும், நம்பிக்கைகளையும், மருத்துவ முறைகளையும், விளையாட்டுகளையும் தொகுத்தும் வகுத்தும் அறிவது ஒரு வகை ஆய்வாகவே இன்று கருதப்படுகிறது. இவற்றைத் தனித்தனியாகவும், தொடர்புபடுத்தியும் பல்வேறு கோட்பாடுகளின், கொள்கைகளின் அடிப்படையில் விளக்குவது மற்றொரு வகை ஆய்வாகக் கருதப்படுகிறது. இவ்விரண்டு வகையான ஆய்வுகளும் நாட்டுப்புறவியலின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் தேவையாகின்றன. அதோடு ஒருவகையாய்வு மேற்கொள்ளப்படாத நிலையில் இன்னொரு வகை ஆய்வினை மேற்கொள்வது அவ்வளவு சிறப்பாக அமையாது என்பதுடன் பயனுள்ளதாகவும் முழுமையானதாகவும் அமையாது என்றும் கருதப்படுகிறது.

## 2.2 நாட்டுப்புறவியல்

மனிதன் தன் உணர்ச்சிகளைச் சைகைகளின் மூலமாகத் தெரிவித்து வந்த காலத்திற்குப் பின், சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து ஒலிகள் மூலமாகவும் அதன் படிம வளர்ச்சி நிலையாகத் தன் கருத்துக்களை வாய்மொழி மூலமாகவும் தெரிவிக்க ஆரம்பித்த நிலையிலேயே நாட்டுப்புற இலக்கியங்கள் தோன்றிவிட்டன எனலாம். அவ்வாறு தெரிவிக்க ஆரம்பித்த பேச்சு மொழியும் அதன் வளர்ச்சி நிலையான எழுத்து மொழியும் தோன்றியபின்னர், மனிதனுக்கு மனிதன் வெளிப்படுத்தும் எண்ணங்களில் வேற்றுமைகள், வாய்மொழி - எழுத்து மொழிகளில் நடைவேற்றுமைகள் போன்றவை தோன்றலாயின. தங்களுடைய இன்ப துன்ப உணர்ச்சிகளை வெளிப்படுத்த மக்களிடையே தோன்றிய வாய்மொழி இலக்கியங்களே நாட்டுப்புற இலக்கியம் என்றும் குறிப்பிடப்படுகிறது.[1] இவ்விலக்கியங்களில்

நாம் சந்திக்கும் - அனுபவிக்கும் அன்றாட வாழ்வியல் கூறுகள், மனித இனத்தின் சமுதாயக் கட்டுப்பாட்டிற் காகச் சொல்லப்படும் நம்ப முடியாத நிகழ்ச்சிகள் என்று பல வகையான நவரசங்களை ஊட்டும் நிகழ்ச்சிகளைப் பாடல்களாகவும், கதைகளாகவும், பழமொழிகளாகவும் மக்கள் புனைந்தனர்.2 தங்களின் மகிழ்ச்சிக்காக மட்டு மின்றி சமுதாய மகிழ்ச்சிக்காகவும் பல பாடல்கள், ஆடல்கள், மருத்துவங்கள் என்று பலவித நாட்டுப்புறக் கலைகளும் முறைகளும் தோன்றின.3 இப் பாடல்களின் கரு பக்தி, மருத்துவம், தாலாட்டு, இரங்கல், விளை யாட்டு, கும்மி, கூத்து என்று பல வகைப்படும். இவற் றைப் பற்றிய முழுமையான படிப்பே நாட்டுப்புறவிய லாகிறது.

## 2.3 நாட்டுப்புறவியல் - விளக்கம்

நாட்டுப்புறவியலின் விளக்கம் பற்றி ஆராயுமுன் நாட்டுப்புறவியல் என்றால் என்ன, அது எப்படிச் சமுதாயத்தோடு இரண்டறக் கலந்துள்ளது என்ற வினாக்களுக்கு விடை காண வேண்டும். நாட்டுப்புற இலக்கியமானது முதலில் வாய்மொழி இலக்கியமாகவே இருந்துவந்துள்ளது. பின்னர் இவ்விலக்கியம் ஏடுகளில் எழுதப்பட்டுப் படைப்புக்கு வரும் நிலை தோன்றியது. இவற்றில் இன்னும் சில இலக்கியங்கள் வாய்மொழி இலக்கியங்களாகவே இருப்பதையும் அறியமுடிகிறது. இவற்றைப் பற்றி யாரும் அதிக அக்கறை கொள்ளாத சூழலும் இருந்துவந்தது. ஆங்காங்கே ஒரு சிலர் மட்டுமே அவற்றை எப்போதாவது பாடியும், ஆடியும், செயற்படுத்தியும் ஆய்வு செய்தும் வரலாயினர். அவ்வகைப் பாடல்கள், கதைகள், ஆடல்கள், முறைகள் போன்றவை முறையாகச் செயல் படுத்தப் படாத நிலையில் அவற்றின் கரு மற்றும் அமைப்பு போன்றவை

முழுமையாக வெளிப்படுத்தப்படவில்லை அல்லது வெளியிடப்படவில்லை. இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டுதான் நாட்டுப்புற இலக்கியத்தையும் நாட்டுப்புறக் கலைகளையும் இனங்கண்டு, அவற்றைச் சிறப்பாக வெளிக்கொண்டுவரவேண்டுமென்ற ஆர்வம் தோன்றியது. இதற்காக ஆய்வுகள், களப்பணி போன்றவை பல நிலைகளில் பலரால் மேற்கொள்ளப்படலாயின; இலக்கியங்கள் சில கண்டறியப்பட்டுத் தொகுக்கப்பட்டன; முறையாக அச்சில் கொண்டு வரப்பட்டன. இதன் விளைவாக இவ்விலக்கியங்களைப் படிப்பதற்கு வாய்ப்பு ஏற்படலாயிற்று. ஆய்வு செய்வதற்கு உகந்த சூழலும் வாய்ப்பும் தோன்றியது.4

நாட்டுப்புறவியல் விளக்கம் என்பது ஆங்காங்கே வாழும் மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள், அவர்களது எண்ணங்கள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறை, தொழில், கனவுகள், உறவு முறைகள், ஆசைகள், எதிர்பார்ப்புக்கள், உணர்வுகள் போன்றவற்றை வெளிப்படுத்தும் பல்வேறு இலக்கியங்களையும், கலைகளையும் கண்டறிந்து விளக்கும் ஒன்றேயாகும்.5

நாட்டுப்புற இலக்கியங்கள் இலக்கிய வடிவிலோ, வரிவடிவிலோ வெளிக்கொணரப்படாமலே இருந்து வந்தன. அதாவது மக்களின் வாய்மொழி வாயிலாகவே வாழ்ந்து வந்தன. இதன் காரணமாகவே இதற்கு 'வாய்மொழி இலக்கியம்' என்ற பெயரும் ஏற்பட்டது. இவ்வகை இலக்கியமானது காலத்துக்குக் காலம், நாட்டுக்கு நாடு, மனிதனுக்கு மனிதன், சமுதாயத்திற்குச் சமுதாயம் என்று ஏதேனும் ஒரு வகையில் மாறியே வழக்கில் இருந்து வந்தது. இவை வழிவழியாக மக்களால் சொல்லப்பட்டும், பாடப்பட்டும் வாழும்

இலக்கியங்களாக இன்றும் இருந்து வருகின்றன. இவற்றையே நாம் மரபு வழிப்பட்ட வாய்மொழி இலக்கியங்களாகக் கருதுகிறோம். இவற்றுள் இடம் பெறும் பாடல்கள் போன்றவை மக்களின் உள்ளத்து உணர்ச்சிகளை, உண்மை நிகழ்ச்சிகளை, விருப்பு - வெறுப்புக்களை, இன்ப - துன்பங்களை ஆற்றொழுக்கு போல், அருவி போல் கட்டுப்பாடின்றி எடுத்தியம்பு வதால் இவற்றிற்கென்று தனியான வரையறை இல்லை. மக்கள் நினைவிலிருத்திக்கொள்ளும்வகையில், தாங்களும் பாடுபவர்களுடன் சேர்ந்து பாடும் வண்ணம் எளிமையானவையாகவும் மனத்தை ஈர்ப் பவை யாகவும், இவ்வெழுதப்படா இலக்கியங்கள் திகழ் கின்றன. நாட்டுப்புறப் பாடல்கள் எளிமையாக அமைந் துள்ள காரணத்தால் மக்களும் அவற்றை மறந்து விடாமல் தங்களின் அவ்வப்போதைய உணர்வுகளுக் கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்ற முறையில் தங்களை அறியாது இசையோடு பாடுகின்ற தன்மையையும் அதில் ஒன்றிக் கலந்து விடுகின்ற நிலையினையும் நம்மால் நன்கு காணமுடிகிறது.[6]

## 2.4 நாட்டுப்புற இலக்கியம்

முதன்முதலில் மனித இனம் தோன்றிக் கருத் துக்களைப் பரிமாறிக்கொள்ள ஆரம்பித்த காலத்தில் மனித வாழ்க்கையின் அன்றாட வாழ்வியல் நிகழ்ச்சி களை விளக்கும் பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுகதைகள் போன்றவற்றையே இலக்கியம் என்கி றோம். இலக்கியம் என்பது காலங்கடந்து நிற்கக் கூடியதாக இருக்கவேண்டும். இத்தகைய இலக்கியங் களை இருவகைப் படுத்தலாம். அவை,

1. வாய்மொழி இலக்கியம்

2. எழுத்து மொழி இலக்கியம்

என்று இருவகைப்படும்.

வாய்மொழி இலக்கியங்கள் எனப்படுபவை காலங்காலமாக மக்களிடையே வழங்கி வருபவை. உலகின் எல்லாப் பகுதிகளிலுமே இத்தகைய இலக்கியங்கள் வழங்கி வருகின்றன. மனித வாழ்க்கையில் ஏற்படுகின்ற சாந்தம், கோபம், மகிழ்ச்சி, துக்கம், உயர்வு, தாழ்வு போன்ற நிகழ்ச்சிகளுடன், வீரர்களைப் பற்றியும் அவர்களின் போர் வெற்றி, வாழ்க்கை முறை, வரலாறு பற்றியும் எளிமையான பாடல்களாகப் பாடி வருகின்றனர் நாட்டுப்புற மக்கள். இவை வழிவழியாக எழுதிவைக்கப்படாமல் வாய்மொழியாகவே வாழ்ந்து வருவதால் இவற்றை அரிய இலக்கியங்களாகவே இன்று நாம் கருதுகிறோம். தற்போது ஒரு நூற்றாண்டாக இவற்றை அச்சில் ஏற்றும் முயற்சி ஓரளவிற்கு நடந்து வருகிறது எனலாம்.7 வாய்மொழி இலக்கியங்கள் பாடல் வடிவிலும், கதை வடிவிலும், கலை வடிவிலும் மக்களிடையே உலவி வருகின்றன; வாழ்ந்து வருகின்றன; வளர்ந்துவருகின்றன.

எழுத்துமொழி இலக்கியம் என்பது நம் வாழ்வியல் நிகழ்ச்சிகளுக்கு மெருகூட்டி எழுத்து வடிவில் வடிக்கப்பட்டதே. இதுவும் பெரும்பாலும் பாடல் மற்றும் கதை வடிவங்களில் அமைந்ததே. பழங்கால மொழி நடை கடினமாக இருந்தமையால் பிற்காலத்தார் படிக்க அதற்கு உரை தேவைப்பட்டது. அத்தகைய உரையும் இன்று நமக்குக் கடினமாகத் தோன்றவே மேலும் நாம் அதனை எளிமைப்படுத்தி வருகிறோம். வாய்மொழி

இலக்கியத்தின் கட்டுப்பாடற்ற தன்மை, வடிவம் போன்றவைகளை இந்த வகையான எழுத்திலக்கியங் களில் காண முடியாது. கட்டுக்கோப்பு, நாகரிகம், குறிப்பிட்ட வடிவம் என்ற இன்றியமையாக் கூறுகளின் மூலம் எழுத்திலக்கியம் வளர்ந்து வந்துள்ளது; வளர்ந்தும் வருகிறது. இவை கல்வியறிவு பெற்றவர் களுக்காக மட்டுமே எழுதப்பட்டவை எனலாம்.

நாட்டுப்புற இலக்கியத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது,

"folk literature is the lore chiefly of unlettered peoples transmitted by word of mouth" என்கிறது Encyclopaedia Britanica.[8] இத்தகைய இலக்கியங்களின் மூலம் மக்களின் பழக்க வழக்கங்களை, அவர்களின் வாழ்வியல் அனுபவங் களை, அவர்களின் நம்பிக்கைகளை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. மேலும், இத்தகைய நாட்டுப்புற மக்களை நாம் நேரடியாகச் சந்திப்பதன் மூலமும் இவர் களைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது. நாட்டுப் புறங்களில் மக்களுடன் கலந்து வாழ்வதன் மூலமும் அவர்களின் மரபு வழிப் பாடல்களை - கதைகளை அவற்றின் சமுதாய முக்கியத்துவத்தை நாம் அறிந்து கொள்ளலாம். நாட்டுப்புற இலக்கியங்கள் நமக்குத் தெரியாத பாடல்கள், கதைகள் போன்றவற்றைக் கூறுவதோடு மட்டுமன்றி, எழுத்திலக்கியப் புராணக் கதைகளும் இலக்கியங்களும் நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் வடிவில் மக்கள் மத்தியில் இன்று உலவிவரு வதையும் காட்டுகின்றன என்று குறிப்பிடவேண்டும். எடுத்துக்காட்டாக இராமாயணம், மகாபாரதம், சிலப்பதிகாரம் போன்ற பல கதைப் பாடல்களும், கட்டபொம்மன் கதை, கான்சாகிப் சண்டை, ஐவர்

ராசாக்கள் கதை, வெள்ளைக்காரன் கதை போன்ற வரலாற்று இலக்கியங்களும், முத்துப்பட்டன் கதை, காத்தவராயன் கதை, நல்லதங்காள் கதை, மக்களின் சமுக வாழ்வியல் நிகழ்ச்சிகளைக் கூறும் கதைகளும், நாட்டுப்புற மருத்துவங்களைப் பற்றிய சித்தர் பாடல் களும் காணப்படுகின்றன. மேலும் கூத்து, கும்மி, கரகம், பொம்மலாட்டம், லாவணி, காவடி போன்ற வற்றின் மூலம் நாட்டுப்புற மக்களின் கலை வளர்ச்சி நிலையை வெளிப்படுத்தும் பாடல்களைக் காணமுடி கிறது. இவற்றின் வாயிலாக நாட்டுப்புற மக்களின் பண்பாட்டுக் கூறுகளை அறிந்துகொள்ளவும் முடிகிறது.

வாய்மொழி இலக்கியங்களாக வாழ்ந்துவரும் நாட்டுப்புறப் பாடல்கள் எல்லாமே தன்னுணர்ச்சிப் பாடல்கள். இவர்கள் வாயில் வழங்கிய பாடல்களுக்குச் சூழலுக்கேற்ப, பொருளுக்கேற்ப பெயரிட்டனர். அதாவது, குழந்தையை அமைதிப்படுத்தப் பாடிய பாடல்கள் தாலாட்டுப் பாடல்கள் என்றும் ஏற்றம் இறைத்தபோது பாடிய பாடல்கள் ஏற்றப் பாடல்கள் என்றும் பாடல்களுக்குப் பெயரிடும் பண்பாடு இவர்க ளிடம் இருந்தது. இவ்வாறு தங்களின் பலவகையான உணர்ச்சிகளுக்கேற்ப பாடிய பாடல்களுக்கு ஒட்டு மொத்தமான பெயர் எதையும் இவர்கள் குறிப்பிட்டுச் சொல்லவில்லை என்பதையும் அறியமுடிகிறது.

மேலை நாட்டவருடைய நாட்டுப்புறப் பாடல் களுக்கும், கதைப் பாடல்களுக்கும் நம் நாட்டவரின் நாட்டுப்புறப் பாடல்களுக்கும் கதைப் பாடல்களுக்கும் மொழியளவில் வேற்றுமை இருப்பினும் பாடல்களின் அமைப்பு முறை ஒன்றாகவே இருப்பது தெரிகிறது. கதைப் பாடல்கள் எனப்படுபவை பாடல் அமைப்பும்,

கதையமைப்பும் சேர்ந்த கலவையாகவே இரண்டிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கதைப் பாடல்களில் கதைக் கருவும் நாடக உத்தியும் பயன்படுத்தப்பட்டிருக்கும். சிறு சிறு பத்திகளாகப் பிரிக்கப்பட்டு முதலடி திரும்பத் திரும்ப வரும் உத்தி கையாளப்பட்டிருக்கும். இப்பாடல்களை இசையோடு பாடிக்கொண்டே ஆடுவர். மேலும் நாடகம்போல் பாத்திரங்கள், பின்னணி, நிகழ்ச்சிப் போக்கு போன்றவை அமைந்து பேச்சு மொழியில் பாடப்படும். மேல் நாட்டார் தங்கள் பாடல்களுக்கு 'folk ballad', 'folk song' என்று பல்வேறு பெயர்களையிட்டு அழைத்தபோதிலும் நம் நாட்டுப்புற இலக்கிய அமைப்பியலை ஒட்டிய பாடல் மற்றும் கதை வகைகளாகவே அவை இருப்பதைக் காண்கிறோம்.9

மேலும் எளிய நாட்டுப்புற மக்கள் பிறர் அறிந்து கொள்ளுமாறு பாடும், பேசும் பண்பாடு உடையவர்கள். இவர்களின் பாடல்களில் உள்ளதை உள்ளவாறு ஒளிவு மறைவு இன்றி வெளிப்படையாக உணர்ச்சிகள் விரவிக் கிடக்கக் காண்கிறோம். மனித வாழ்வில் தங்களுக்குள் செய்திகளைப் பரிமாறிக்கொள்ளும் நிலையில் பிறக்கும் உணர்ச்சிப் பரிமாற்றமே பண்பாட்டு இலக்கியங்களாகும். இவர்களுடைய வாய்மொழிப் பாடல்கள் மூலம் ஒருவருடைய அனுபவமும், பிறரை எச்சரிக்கும் முறையும் வெளிப்படுகிறது. பொழுது போகவும், வேலைப்பளு குறையவும், தங்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்தித் தங்களைச் சமப்படுத்திக் கொள்ளவும் இத்தகைய பாடல்கள் அம் மக்களுக்கு உதவியாக இருந்து வருகின்றன. மேலும், இப் பாடல்கள் பாடப்படும்போது நம் கண் முன் நடக்கும் காட்சி போலவே நாம் அவற்றை உணர்வதுடன் முழுமையாகப் புரிந்து கொள்ளவும் முடிகிறது.

பழமொழிகளை எடுத்தாளும் போது அவற்றின் பொருள், அவை கூறப்படுவதற்கான காரணம் போன்றவை எல்லோரும் புரிந்து கொள்ளும்-அறிந்து கொள்ளும் நிலையிலேயே அமைந்துவிடுகின்றன. இப் பழமொழிகளைக் கேட்போர் வேறு சூழலில் இதனைப் பயன்படுத்தும் போது, கேட்போர் சூழலுக்கேற்ப பொருத்தமான பொருளைப் புரிந்து கொள்ளும் நிலையிலேயே இப்பழமொழிகள் அமைந்துள்ளன என்று குறிப்பிட வேண்டும். எடுத்துக்காட்டாக,

''ஆறு போவதே போக்கு
அரசன் செய்வதே தீர்ப்பு''

என்ற பழமொழி, 'திடீர் வெள்ளம் வரும் ஆறு எந்தப்போக்கில் வேண்டுமானாலும் பாயலாம்' என்ற பொருளைச் சுட்டினாலும் 'ஒருவன் தனது சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப எப்படியும் மாறலாம்' என்ற பொருளையே குறிப்பாகச் சுட்டி அமைகிறது. இதைக் குறிப்பிட்ட ஒருவனுக்கன்றி இக்குணமுள்ள யாருக்கும் எங்கும் பயன்படுத்தலாம். இதுபோன்றே தலைவனாக இருப்பவன் எதைக்கூறினாலும் அதையே வேதவாக்காக எடுத்துக்கொண்டு பின்பற்றுவர் குடிமக்கள் என்ற பொருளைப் பழமொழியின் இரண்டாவது அடி சுட்டும். இப் பொருளை ஒரே இடத்தில் மட்டுமல்லாமல் ஒரு வீட்டின் தலைவன், நீதிபதி, அமைச்சர், இயக்குனர் போன்ற தலைமைப் பதவி வகிக்கும் இடங்களிலெல்லாம் சூழல்களுக்கேற்ப பல்வேறு இடங்களிலும் பயன்படுத்தலாம். இவற்றைப் போன்றே நாட்டுப்புறப் பாடல்கள் எல்லாம் எல்லோருக்கும் தத்தம் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு வெவ்வேறு இடங்களில் பயன்படுத்தத்தக்க வகையில் அமைந்துள்ளமை இவற்றின் சிறப்பியல்பு எனலாம்.

எடுத்துக்காட்டாக தாலாட்டுப் பாடல்களை எந்தத் தாயும் தன் குழந்தைக்குப் பாட முடியும். சூழ்நிலைக்கு ஏற்ப சில சொற்களை அல்லது தொடர்களை மாற்றிக் கொண்டால் போதுமானது. இதே போன்று விளையாட்டுப் பாடல்கள், காதல் பாட்டல்கள், திருமணப் பாடல்கள், குடும்பப் பாடல்கள், தொழிற் பாடல்கள், ஒப்பாரி என்ற இவையெல்லாமே யாராலும் யாருக்காகவும் சூழலுக்கேற்ப பாடக்கூடிய சிறப்புப் பெற்றனவாக அமைந்துள்ளன.

இவற்றைப் போன்றே நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் என்பவை சில சமயங்களில் நம்ப முடியாதனவாக, ஏற்றுக்கொள்ள முடியாதனவாக நமக்குத் தோன்றினாலும் இந்நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், மருத்துவ முறைகள் இவையெல்லாம் காலங்காலமாக நம் நாட்டில் பழக்கத்திலிருந்த போதிலும், இம் மருத்துவ முறைகள் புதிதாக இன்று மேலை நாடுகளில் கண்டுபிடிக்கப்பட்டு நம் நாட்டிற்கு வருவனவாகவே அமைந்துள்ளன. நாட்டுப்புறங்களில் வயதானோர் கூறும்போது கேட்காத நாம் மேலை நரடுகளின் கண்டுபிடிப்புக்களாகச் செய்தித் தாள்களில் வந்தால் அவற்றைப் பெரிதாக நினைக்கிறோம் - மதிக்கிறோம். தற்போது மேலை நாடுகளில் மஞ்சள் காமாலை போன்ற பல நோய்களுக்குக் கூறப்படும் மருந்து கீழாநல்லி வேர், வேப்பிலை, துளசி, வில்வ இலை போன்றவற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இவற்றை நம் நாட்டில் காலங்காலமாக நாட்டுப்புறங்களில் செய்யப்படும் இயற்கை மருத்துவ முறைகளில் பயன்படுத்தி வருகின்றனர். நாட்டுப்புற மருத்துவம், மந்திரம் போன்றவற்றை நம்பாத நாம் அதனையே அறிவியல் மருத்துவ முறைகளின் மூலம் விவரிக்கின்ற

போது நம் முன்னோர்களும் காரண காரிய அடிப்படையிலேயே இவற்றைச் செய்திருப்பர் என்று நம்ப மறுக்கிறோம். எனினும் இன்றைய வளர்ந்த சமுதாயத்தினரிடையே சிறுபான்மையினரிடம் மட்டுமே மந்திரம், இயற்கை மருத்துவ முறைகள், வீட்டு வைத்திய முறைகள் போன்றவற்றைப் பின்பற்றும் சூழலைக் காணமுடிகிறது.

## 2.5 நாட்டுப்புறவியல் இலக்கிய வகைகள்

நாட்டுப்புறவியலை நாட்டுப்புற இலக்கிய வகைகள், நாட்டுப்புறக் கலைகள் என்று இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். நாட்டுப்புற இலக்கியங்களைக் கீழ்வருமாறு பிரிக்கலாம்.

### 2.5.1 பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்கள் என்ற முதல் பிரிவில் பாடல்கள் பலவகை உணர்ச்சிகளுக்கு ஏற்ப மாறுபடுகின்ற நிலை காணப்படுகிறது. அதாவது,

1. தாலாட்டு
2. தெம்மாங்கு
3. காதல் பாடல்கள்
4. குடும்பப் பாடல்கள்
5. தொழிற் பாடல்கள்
6. பக்திப் பாடல்கள்
7. கொண்டாட்டப் பாடல்கள்
8. ஒப்பாரி

என்று எட்டு வகையாகப் பாடல்களைப் பிரிக்கலாம்.

### 2.5.2 கதைகள்

கதைகளை
1. பக்திக் கதைகள்
2. அறிவுரைக் கதைகள்
3. பொழுதுபோக்குக் கதைகள்

என மூன்று வகையாகப் பிரிக்கப்படுகின்றன.

### 2.5.3 கதைப்பாடல்கள் (Ballads)

கதைப் பாடல்களை
1. வரலாற்றுக் கதைகள்
2. புராணக் கதைகள்
3. சமுதாயக் கதைகள்
4. வீரக் கதைகள்

என்று நான்கு வகையாகப்பிரிக்கலாம்.

### 2.5.4 பழமொழிகள் (Proverbs)

பழமொழிகளை
1. உவமைத் தன்மையன
2. சிலேடைத் தன்மையன
3. மரபுத் தொடர்த் தன்மையன

என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### 2.5.5 விடுகதைகள் (Riddles)

விடுகதைகளை

1. புதிர்
2. உவமைப்புதிர்
2. நொடிவினா (அ) வினாடிவினா

என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### 2.5.6 நாட்டுப்புறக் கலைகள்

இவற்றை

1. நாட்டுப்புறக் கைவினைகள்
2. நாட்டுப்புறக் கூத்துக்கள்
3. நாட்டுப்புற விளையாட்டுக்கள்
4. நாட்டுப்புற விழாக்கள்
5. நாட்டுப்புற ஆடல்கள்
6. நாட்டுப்புற மருத்துவம்

என்று ஆறு வகையாகப் பிரிக்கலாம்.

## 2.6 நாட்டுப்புறப் பண்பாட்டுக் கூறுகள்

நாட்டுப்புறவியல் என்று ஒருவகையைப் பிரித்து விளக்க அதற்கெனவுள்ள சில தனித்த பண்புகள் தேவைப்படுகின்றன. ஒரு பொருளுக்கு அல்லது ஒரு வருக்கென தனித்த ஒரு குணம் வெளிப்படையாகத் தெரியுமாயின் அதனையே பண்பு என்கிறோம். இங்கு நாட்டுப்புறவியலிற்கென சில தனித்த பண்புகளை நாம் இனங்காண முடியும்.

1. எழுத்து வடிவில் இல்லாமல் வழிவழியாக வாய் மொழியாக வழங்கி வருவது.

2. மரபு வழிப்பட்டது.

3. காலப்போக்கில் (இவ்வகை வாய்மொழி இலக்கியங்கள்) பல்வேறு வடிவங்களாக சூழலுக்கேற்ப திரிந்தமைவது.

4. குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஆசிரியர் இல்லாதது.

5. தனியொரு வ்ரய்பாட்டு அமைப்பினைப் பெற்றுள்ளது—வரையறை செய்ய முடிவது.

என்ற இவ்வைந்து பண்புகளையும் நாட்டுப்புறவியலின் பண்புகளாகக் குறிப்பிடுகின்றனர்.

அறிவியல் விளக்கங்கள், அறிவியல் வளர்ச்சி என்ற இவை அதிகம் தெரிந்திருக்காத நிலையில் நாட்டுப்புற மக்களுக்கென சில தனித்த பண்பாட்டுக் கூறுகள் இருந்தமை இவர்களின் பாடல்கள், கதைகள், மருத்துவ முறைகள், விளையாட்டுக்கள் ஆகியவற்றின் மூலம் தெற்றென அறிந்து கொள்ள முடிகிறது.

பாடல்களின் மூலம் இவர்கள் தங்கள் உணர்ச்சிகளை வெளியிடும் முறையில் இவர்களது பண்பாட்டினை நாம் நன்கு அறிந்து கொள்ள முடிகிறது. தங்களின் கோபதாபங்களை, இன்ப துன்பங்களை, கஷ்ட நஷ்டங்களைப் பிறருக்கு நாசூக்காகத் தெரிவிக்கும் பண்பு தாலாட்டுப் பாடல்களின் மூலம் அறியப்படுகின்

றது. குழந்தையின் அழுகையில், சிரிப்பில் தங்கள் கஷ்டங்களை மறந்து உறவினரின் பெருமையினை உயர்த்திக் கூறும் பண்பாடும் இதன் வாயிலாகப் புலப் படுகிறது. நேரடியாகச் சண்டை சச்சரவு என்ற நிலை யின்றி குழந்தையைத் தாலாட்டும் போதே தங்களின் உணர்ச்சிகளுக்கு வடிகால் தேடும் நிலையும் பண்பும் தென்படுகிறது.

கதைகள், கதைப் பாடல்கள் மூலம் கடமை உணர்வு, வீர உணர்வு, வரலாற்றுச் செய்திகளை மிகைப்படுத்தாமல் அப்படியே கூறும் நிலை, கதைகள், பாடல்களின் மூலம் அறிவுரையை வெளிப்படுத்துதல் என்ற மிதமான ஒரு பண்பாடே இவர்களிடத்தில் பெரி தும் காணப்படுகிறது எனலாம். காதல், வீரம் என்ற எந்த வகையிலும் தங்களின் இயற்கை உணர்ச்சி களையே வெளிப்படுத்தும் பண்பாடு இவர்களுடைய தாக அமைகிறது.

தொழிற் பாடல்கள், ஏற்றப் பாடல்கள் மூலம் வேலை செய்யத் தயங்காத பண்பாடு, கடின உழைப்பு போன்றவை வெளிப்படுகின்றன. பழமொழிகள் மற் றும் விடுகதைகள் மூலம் இவர்கள் தங்கள் இணக்கம், எதிர்ப்பு என்ற இரு வேறு நிலைகளையும் எளிமை யாகத் தெரிவிக்கும் பண்பினையும் மன நிலையினையும் பெற்றுள்ளார்கள் என்பது தெரிகிறது. இவர்களது பழ மொழிகள், விடுகதைகள் போன்றவை எடுத்தாளப் படும்போது யாரைப் பற்றி, எதைப் பற்றி இவர்கள் குறிப்பிடுகிறார்கள் என்று மற்றவர்க்குத் தெற்றெனப் புலப்படுத்தும் வகையில் வெளிப்படையாகவே அமைந் திருக்கக் காண்கிறோம். இவர்களது விளையாட்டுக்கள் மூலம் இவர்களின் கள்ளங்கபடற்ற எளிமையான பண்பாடு வெளிப்படுகின்றது.

## 2.6.1 நாட்டுப் புறவியலின் பண்புகள்

பொதுவாக நம்பிக்கைகளின் வாயிலாகவும், கலைகளின் வாயிலாகவும் மக்களது சமுதாயச் சிறப்பியல்புகள், சமுதாய அமைப்பு, பொருளாதார நிலை போன்றவை வெளிப்படுத்தப்படுகின்றன .இவற்றோடு அவர்கள் வழிபடும் தெய்வங்கள், அவர்கள் கொண்டாடும் விழாக்கள், அதற்கான காரணங்கள் போன்றவையும் வெளிப்படுத்தப்படுகின்றன. இத்தகைய கூறுகள் மக்களது வாழ்க்கைமுறையை ஒரு புறமும், பண்பாட்டினை மற்றொரு புறமும் விளக்குவனவாக அமைந்துள்ளன. இக்கூறுகளை ஒன்றோடொன்று தொடர்பு படுத்திப் பார்க்கும் நிலையில் நம்மால் அவர்களது இலக்கிய அமைப்பின்வழி வெளிப்படும் சமுதாயப் பண்பாட்டு அமைப்பினைத் தெளிவாக அறிந்து கொள்ள முடியும். நாட்டுப்புறவியல் கூறுகளாக நாம் மேற்கொள்வன இலக்கியம், கலை, விளையாட்டுக்கள், மருத்துவம், நம்பிக்கைகள், மனித உணர்வுகள், வரலாறு போன்றவையாகும். இவை மக்களது செயல்களையும், சமுதாய நிலையினையும் ஏதேனும் ஒரு வகையில் தொடர்பு படுத்துவனவாகவும், வெளிப்படுத்துவனவாகவும் அமைந்துள்ளன. இலக்கியங்களில் இடம் பெறும் கருத்துக்கள் மேலே சொல்லப்பட்ட கூறுகளின் வாயிலாக சமுதாய அமைப்பினையும் இயக்கத்தினையும் (Social structure and function) படம் பிடித்துக் காட்டுகின்றன என்றால் அது மிகையன்று.

ஆகவே நாட்டுப்புறவியல் தொடர்பான படிப்பின் மூலம் நாட்டுப்புறவியலின் பண்புகளை நாட்டுப்புற மக்களது பண்பாட்டுச் சூழலோடு ஒப்புமைப்படுத்தி அறியும் தெளிவான நிலை ஏற்படுகிறது.

| நாட்டுப்புறவியலின் பண்புகள் | நாட்டுப் புற மக்களது பண்பாட்டுக் கூறுகள் |
|---|---|
| 1. பெருமளவில் வாய் மொழி இலக்கியம். (எழுதப்படாத நிலை) | பிறரது துன்பத்தில் பங்கேற்று அவர்களது துன்பத்தைக் குறைப்பது. (உணர்ச்சி வழி) |
| 2. வட்டார மற்றும் சமுதாய அமைப்பின் நேரடிப் பிரதிபலிப்பு. | நன்கு உழைக்கும் பாங்கு. அதனால் ஏற்படும் துன்பத்தைப் பாடல்கள் வழி மறந்து விடும் நிலை. |
| 3. பாடல்கள் பெரும்பான்மை வடிவம் பெற்றவை. | நாட்டுப்புற விளையாட்டுக்களின் வாயிலாகப் பிறருக்கு அறிவுரை வழங்கும் பண்பு. அவற்றைத் தாங்களும் கடைபிடித்துக் காட்டும் பண்பு. |
| 4. யாரால் இயற்றப்பட்டது என்று குறிப்பிட்டு சொல்லமுடியாத தன்மை. | சமூகநீதி, சமூக ஒற்றுமை போன்றவற்றை இயல்பான முறையில் விளக்குதல். |
| 5. எளிய மொழியமைப்பையும் கருத்துப் புலப்பாட்டுத் திறனையும் கொண்டவை. | நம்பிக்கைகள், சடங்குகள், நிமித்தங்கள் ஆகியவற்றின் வழி சமுதாய ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் உருவாக்குதல், |
| 6. ஒருவருக்காக பிறர் பாடுவது, தாங்களா | மக்களது சிந்தனையைத் தூண்டி அவர்களது வாழ் |

| | | |
|---|---|---|
| | கவே பாடுவது என்ற இருநிலைத் தன்மை கொண்டுள்ளமை. | விற்கு வழி காட்டுதல் மற்றும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் வெளிப்படுத்துதல். |
| 7. | கருத்துக்களை ஒளிவு மறைவின்றி நேரடியாகச் சொல்லும் பாங்கு. | கருத்துப் புலப்பாட்டிற்கென அமைப்பிலும் செய்முறையிலும் எளிமை ஏற்றுதல். |
| 8. | அதிகமான இலக்கியங்கள் எளிமையான இசையோடு பாடப்படும் பண்பு. | மக்களது பேராற்றல், புனித தன்மை போன்றவற்றை நாட்டுப்புறக் கலைகள் வாயிலாக வெளிப்படுத்துதல். |
| 9. | காலவரையறை, அடிவரையறை இல்லாமை. | சமுதாய உறவு முறைகளைப் பேணுதல் — போற்றுதல். |
| 10. | பொதுவான இலக்கண வரையறை பின்பற்றப்படாத பண்பு. | பலர் பல இடங்களில் பல விதமாகப் பாடும் தன்மை. |

## 2.7 நாட்டுப்புறக் கலைகள்-விழாக்கள் - மருத்துவ முறைகள்-விளையாட்டுக்கள்

### 2.7.1 நாட்டுப்புறக் கலைகள்

மனித இனம் தோன்றி வளர்ந்த இடங்களிலெல்லாம் அவரவரின் இயல்புக்கும், வாழ்க்கை முறைக்கும்

ஏற்றவாறு மக்கள் தம் உணர்வுகளை வாய்மொழி மூலமாகவோ, மொழியின்றி உருவ வெளிப்பாடுகளின் மூலமாகவோ, ஆடல்கள் மூலமாகவோ, இசைக்கருவிகள் மூலமாகவோ, கைவினைகளின் மூலமாகவோ வெளிப்படுத்தி வரலாயினர். இவைகளையே பொதுவாகக் கலைகள் என்று கூறுகிறோம். கலைகள் எனப்படுப்வை நகர்ப்புற மக்களிடையே நிலவாது நாட்டுப்புறங்களில் வாழும் எளிய மக்களிடையே பெருமளவில் நிலவுகின்ற அரிய செயல் திறன்களாக இருக்கின்ற காரணத்தால் இவற்றை நாட்டுப்புறக் கலைகள் என்று வழங்குகிறோம், நாட்டுப்புறக் கலைகளை வாய்மொழிக் கலைகள் (Verbal arts) என்றும் வாய்மொழியல்லாத கலைகள் (Non-Verbal arts)) என்றும் இருவகைப் படுத்தலாம்.

நாட்டுப்புறக் கலைகள்
- வாய்மொழிக் கலைகள் (Verbal arts)
- வாய்மொழியல்லாத கலைகள் (Non-Verbal arts)

வாய்மொழிக் கலைகள் மனிதன் முதன் முதலில் பேசத் துவங்கியபோது, அவனிடம் மொழிச் சிந்தனை ஏற்பட்டபோது தோன்றியவை என்பர்.

நாட்டுப்புறக் கலைகளை விளக்கும் நிலையில் நமக்குப் பல்வேறு கூறுகள் தேவைப்படுகின்றன. அவையாவன :

ஒரு குறிப்பிட்ட கலை பற்றிய வடிவம், வகை,

அமைப்பு, கலையினைச் செயற்படுத்துவதற்குத் தேவையான கருவிகள் (இசை மற்றும் பிற) கலையின் செயற்பாட்டில் பங்கேற்போர் (பங்கேற்கும் ஆண், பெண் - நடிகர், இசையமைப்பாளர், வசன கர்த்தா, திரை அமைப்பாளர், இசைக் கருவிகளை வாசிப்பவர் போன்றோர்), பங்கேற்போரின் பணிகள் (நடிப்பு, இசைத்தல், ஒப்பனை, ஆடல், திரையமைப்பு போன்றவை), குறிப்பிட்ட கலை நிகழ்த்தப் படும் காலம் (திருவிழாக்காலம், அறுவடைக்காலம், கோடைகாலம் போன்றவை) கலை நிகழ்ச்சி நடைபெறும் நேரம் (இரவு, முன்னிரவு, பிற்பகல் போன்று), கலை நிகழ்ச்சி நடைபெறும் இடம் (ஊர்ப் பொது இடம், வீட்டின் முன்வாயில், தெருச்சந்திப்பு, கோயில், களம் போன்று), கலை நிகழ்ச்சி நடத்தப் படும் முறை (பாடல் -|- ஆடல், பாடல் -|- கதை சொல்லுதல், வாய்மொழியல்லாத உணர்வு வெளிப் பாடு, உரையாடல் போன்று), கலை நிகழ்ச்சியின் வாயிலாகச் சொல்லப்படும் முக்கிய / மையக் கருத் துக்கள் (எடுத்துக்காட்டாக சமுதாய ஏற்றத் தாழ்வு, சமுதாய மாற்றம், சமுதாய சிந்தனை, வரலாறு, சமூக நீதி நெறிகள், பெண்டிர் நிலை போன்றவை), இவற்றோடு இது போன்ற கலையமைப்புக்களில் ஈடுபடும் சமுதாயப் பிரிவினர் (குறிப்பிட்ட சமுதாயப் பிரிவைச் சார்ந்தோர், இளைஞர், பெண்டிர், அனைத்துப் பிரிவினர் போன்று), கலை நிகழ்ச்சி களை நடத்துவதற்குத் தேவையான பொருளாதாரம் (ஊர் மக்கள் கொடுக்கும் நன்கொடை, ஊர் பிரமுகர்கள் வழங்கும் கொடை, வரிப்பணம், கோயில் - சொத்துக்களிலிருந்து வரும் வருமானம் போன்று), சமுதாயப் பங்கு (சமுதாயம் எந்த அள விற்கு இத்தகைய நிகழ்ச்சிகளில் பங்கேற்கிறது என்பதும் சமுதாயப் பணியில் கலைகள் எந்த அளவிற் குப் பங்கேற்கின்றன என்பதும்) போன்றவையாகும்.

கலை என்பதை எடுத்துக்கொண்டு அதன் அமைப்பையும் இயக்கத்தினையும் விளக்க வேண்டும். எந்தவொரு கலைக்கும் மேற்கண்ட இரண்டு கூறுகளும் இருக்கும்.

(எ. கா.) கூத்து என்பதை எடுத்துக் கொண்டால் அதை விளக்குவதற்குக் கீழ்வரும் முறையினைப் பின்பற்றலாம். அதாவது அதில் கீழ்வரும் விளக்க உறுப்புக்கள் அமைந்திருக்கும்.

1. பின்னணி
2. வடிவம்
3. அமைப்பு
4. பங்கேற்பு
5. செயல் முறை
6. காலம் / நேரம்
7. இடம்
8. கருத்து
9. சமுதாயப் பணி



இத்தகைய அமைப்பினையும் இயக்கத்தினையும் எந்தவொரு கலையும் கொண்டிருக்கும். சிலவற்றில் ஓரளவு அமைப்பு மாற்றமும், இயக்க மாற்றமும் காணப்படும். ஒவ்வொன்றிலும் பின்னணி ஓரளவு வேறுபட்டிருக்கலாம். சில கலைகள் மொழி இல்லாமலேயே இயங்கும். இன்னும் சிலவற்றில் செய்கையும் இசையும் மட்டும் இணைந்திருக்கும். பலவற்றில் மொழி, இசை, செய்கை மூன்றும் கலந்திருக்கும். எடுத்துக்காட்டாக பொம்மலாட்டத்தில் செய்கையும் இசையும் சேர்ந்திருக்கும். பொய்க்கால் குதிரை, கரகாட்டம் போன்றவற்றில் இசையும் ஆடலும் இணைந்திருக்கும். நாடகத்தில் இசை, மொழி, செய்கை, அனைத்தும் இணைந்திருக்கும். வீர விளையாட்டான சிலம்பாட்டம் வெறும் செய்கை மட்டுமே கொண்டது.

மேலே குறிப்பிட்டவாறு நாட்டுப்புறக் கலைகளை நாம் விளக்கவும் ஆராயவும் முடியும். இவற்றைப் பல்வேறு வகைகளில் பாகுபடுத்தி நாம் விளக்குகிறோம். பரந்த நிலையில் இவற்றை இரண்டாகப் பிரிக்கலாம்.

1. மொழிசார் கலைகள்

2. மொழிசாராக் கலைகள்

இவை ஒவ்வொன்றிலும் பல்வேறு வகையான கலைகள் உள்ளன.

1. நாட்டுப்புற நடனங்கள் (folk dances)

2. நாட்டுப்புறக்கூத்து (folk drama)

3. நாட்டுப்புற ஆடல் (folk play)
(கரகம், பொய்க்கால் குதிரை)

4. நாட்டுப்புறக் கைவினைத்திறன்கள்
(folk crafts)

5. நாட்டுப்புற இசை (folkmusic) - வில்லுப்பாட்டு

இவையனைத்தும் ஒரு குறிப்பிட்ட பிரிவில் இருக்கலாம். ஏதேனும் ஒன்று இல்லாமலும் இருக்கலாம். நாட்டுப்புறக் கலைகளைத் தனித்து விளக்க முடியும் என்றாலும், அவற்றில் பெரும்பான்மையானவை ஏதேனும் ஒருவகையில் நாட்டுப்புற மக்களது வாழ்வோடும், வரலாற்றோடும், உணர்ச்சியோடும் பின்னிப் பிணைந்தவையே. ஆக்வே, கலைகளைப் பற்றி விளக்கும் நிலையில் அக்கலைகள் நடத்தப்பெறும் சமுதாயச் சூழலைக் கண்டறிந்து ஒன்றோடொன்றினை இணைத்துப் பார்த்து விளக்குவது சிறப்பாக அமையுமென நம்பப்படுகிறது. இதன் மூலம் கலைகளின் சிறப்பு இயல்புகள், சமுதாயத்தின் சிறப்பியல்பு, சமுதாய முக்கியத்துவம் போன்றவை வெளிப்படும். எடுத்துக்காட்டாக, இக்கலைகள் பல நாட்டுப்புறங்களில் கொண்டாடப்படும் விழாக்களோடு, பண்பாட்டோடு, நம்பிக்கைகளோடு, அவர்களது தொழிலோடு சார்ந்து நிற்பவை. இவ்விழாக்களின்போது கலை நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன. அல்லது அவர்களது தொழில் அமைப்பில் கலைகள் இடம் பெறுகின்றன. இவையெல்லாம் சமுதாயத்திலே நடைபெறாவிட்டால் இக்கலைகள் இடம் பெறுவதற்கு வாய்ப்பேதும் இல்லை. இன்றும்கூட களப் பணியின்போது ஒருவரை நாம் ஏதேனும் ஒரு கலை

நிகழ்ச்சியைச் செயல்படுத்திக் காட்டச் சொன்னால், அது பிற சமயங்களில் இயற்கையாக அமைவது போல அமையாமல் வேறுபட்டு அமைவதைக் காண முடிகிறது. ஆனால் அதே நிகழ்ச்சி அந்தந்தக் காலங்களில் நடைபெறும்போது மிகவும் இயற்கையாக அமைந்துவிடுகிறது. சமுதாயப் பின்னணி என்பது இக்கலைகளின் அமைப்பில் மிகவும் முக்கியமான இடத்தைப் பெற்றுத் திகழ்கிறது என்பதையே இது காட்டுகிறது. மேலும் இவ்வாறு காலம், நிகழ்ச்சி இரண்டும் இணையும்போது அந்நிகழ்ச்சி உயிரோவியமாக அமைகிறது. அவ்வாறு இணையாத நிலையில் உயிரோட்டம் இல்லாமல் ஏதோ கடமைக்கு நிகழ்த்தப்படுவதாக அமைந்து விடுகிறது. காரணம் இயற்கையான சூழ்நிலையில் ஏற்படும் வேகமும் விறுவிறுப்பும் உற்சாகமும் பிற சமயங்களில் தோன்றுவதில்லை என்பதே.

## 2.7.2 நாட்டுப்புற விழாக்கள்

### 2.7.2.1 நம்பிக்கைகளோடு சேர்ந்த தெய்வங்கள் விழாக்கள்

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மக்கள் இயற்கையினைத் தெய்வமாக நம்பி வழிபட்டனர். இயற்கையின் சீற்றத்திற்கு அஞ்சி வாழ்ந்தபோது இடிசத்தம் அதிகமாகக் கேட்டபோது "அர்ச்சுனா அர்ச்சுனா" என்று இடைவிடாது கூறி அடைக்கலம் தேடும் நிலையினைக் காணலாம். இவ்வாறு கூறும் நிலை வழிவழியாக இன்றும் பின்பற்றப்பட்டு வருகிறது. மிக அதிகமான சத்தத்தைக் கேட்கும்போது செவிப்பறைகள் பழுதடையாமல் பாதுகாக்கப்படும் என்ற அறிவியல் உண்மை பின்பு கண்டுபிடிக்கப்பட்டது. மழை பெய்யவும், அதிக மழையினை நிறுத்தவும் இறைவழிபாட்டினை நாடினர். ஞாயிறு,

திங்கள், நெருப்பு போன்றவற்றினை முறையே சூரியதேவன், சந்திரன், அக்னிதேவன் என்றும் கூறி இயற்கையைத் தெய்வமாக வழிபட்டனர். இவ்வழி பாடுகளெல்லாம் நாட்டுப்புறங்களில் மட்டுமின்றி பழங்குடி மக்களிடையேயும், இன்று ஓரளவிற்கு நகர்ப்புற மக்களிடையேயும் காணப்படுகின்றன. காற்று, நிலம், தீ, ஆகாயம், நீர் என்னும் பஞ்சபூதங் களையும் இறைவனாக நினைத்து வழிபடும் நிலை இதிலிருந்து புலப்படுகிறது.

குலதெய்வ வழிபாட்டோடு எல்லைத் தெய் வங்களை வழிபடும் வழிபாட்டு முறையும் இதில் அடங்கும். எடுத்துக்காட்டாக, மாரியம்மன், காளி யம்மன் போன்றவை மக்களிடையே மிகுந்த செல் வாக்குப் பெற்ற சிறு தெய்வங்கள். அம்மை, காலரா போன்ற கொடிய நோய்களிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள மக்கள் இத்தெய்வங்களை வணங்குகின்றனர். சிறு தெய்வங்கள் தங்கள் சிறு மரபு (little tradition) நிலையிலிருந்து பெருமரபு நிலைக்கு (great tradition) மாறி வருகின்ற தன்மையினை நாம் இன்று கண்கூடாகக் காண்கி றோம். மரபு முறையைப் பற்றிக் குறிப்பிடும் நிலை யில் இரண்டு வகையான மரபுகள் குறிப்பிடப்படு கின்றன. ஒன்று Great tradition [12] என்றும் மற் றொன்று little tradition [13] என்றும் குறிப்பிடப்படு கின்றன. முன்னது தொன்மை நிலை, இலக்கியச் செம்மை போன்றவற்றின் அடிப்படையில் அவ்வாறு அழைக்கப்படுகிறது. பின்னது மக்களுடைய பல்வேறு நம்பிக்கைகளையும், சடங்குகளையும் சிறு தெய்வ வழிபாட்டு முறைகளையும், சமய நிலையையும் பின்

பற்றும் நம்ப முடியாத நிகழ்ச்சிகளையும் கருத்திற் கொண்டு அவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

## பெருந்தெய்வ வணக்கம்

பெருந்தெய்வ வணக்கம் என்பது சைவ, வைணவத் தெய்வங்களையும் வேதத்தோடு தொடர்புடைய தெய்வங்களின் வணக்கத்தையும் குறிக்கும். சிவன், பார்வதி, திருமால், லட்சுமி, சரஸ்வதி, முருகன், பிள்ளையார் முதலிய தெய்வங்கள் மக்களிடம் அதிக செல்வாக்குப் பெற்ற தெய்வங்கள் எனலாம். இத் தெய்வங்களை மேட்டுக்குடி மக்களே வணங்கும் நிலை இருந்து வந்தது. இத்தெய்வங்களுக்குச் செய்யும் பூஜை, திருவிழாக்கள் போன்றவை வரையறுக்கப்பட்டவையாக இருக்கும். பழங்குடி மக்களும் கீழ்ச்சாதி மக்களும் சிறு தெய்வ வணக்கத்தையும், இயற்கை வழிபாட்டு நம்பிக்கைகளையும் கொண்டவர்களாக இருக்கின்றனர். துன்பக் கேணியில் உழலும் மக்கள் தெய்வ வழிபாட்டில் வேறுபாடு காண்பதில்லை. பெருந் தெய்வங்கள் பெரிய கோவில்களில் கர்பகிரஹத்திலும் கோயிலைச் சுற்றிலும் பல பிரஹாரங்களைக் கொண்ட பெருங் கோவில்களிலும் வழிபடப்படுபவை. சிறு தெய்வங்கள் பெரும்பாலும் ஊர் எல்லையிலும் சிறு சிறு மடங்களிலும், சிறிய கோயில்களிலுமே காணப்படும். மேலும், பெருந் தெய்வங்களுடன் அரச மரம், வேப்ப மரம், வில்வ மரம் போன்றவையும் இணைந்தே காணப்படும். சிறு தெய்வங்களின் விழாக்கள் தீச்சட்டி எடுத்தல், தீமிதி, பலியிடுதல், காது குத்துதல், மொட்டையடித்தல், அலகு குத்திக் கொள்ளுதல் என்ற வழிபாட்டு முறைகளுடன் நடந்து வருவதைக் காணலாம்.

வழிபாட்டு முறைகள் ஊருக்கு ஊர் இடத்திற்கு இடம் நாட்டுக்கு நாடு வேறுபடலாம். ஆயின் அடிப்படை நம்பிக்கைகள் பெரும்பாலும் ஒன்றியிருப்பதைக் காணலாம். 14

இன்றைய நிலையில் பெருந் தெய்வங்களை வணங்கி வந்த மேட்டுக்குடி மக்களும் சிறு தெய்வங்களை அம்மன் என்று போற்றி வழிபட்டு வணங்குவதையும் நேர்த்திக் கடன்களைச் செய்வதையும் காணமுடிகிறது. முன்பு சைவ வைணவ ஆலயங்களில் மட்டுமே பூசனை செய்து வந்தனர் பிராமணர்கள். அம்மன் போன்ற சிறு தெய்வ் வழிபாடு இருந்த இடங்களில் பிராமணர் அல்லாதாராகிய பண்டாரம், ஓதுவார் என்று அழைக்கப்படுகின்ற இனத்தாரே பூசை, புனஸ்காரங்களை நடத்தி வந்தனர். ஆனால் தற்போது மேட்டுக் குடிமக்கள் எல்லோருமே சிறு தெய்வ வழிபாட்டில் ஈடுபடுவதோடன்றி பிராமணர்களும் சிறு தெய்வ ஆலயங்களில் பூசை செய்வதையும் அத்தெய்வங்களுக்கேற்ற நியம நிஷ்டைகளைக் கடைபிடிப்பதையும் பெரும்பான்மைக் கோயில்களில் காண்கிறோம். காலப் போக்கிற்கும் மாறுபாடுகளுக்கும் ஏற்ப சிறு தெய்வங்கள் தங்கள் சிறு மரபு (little tradition) நிலையிலிருந்து பெரு மரபு நிலைக்கு உயர்ந்து சிறிது சிறிதாக மாறி வருகின்ற சூழ் நிலையை நாம் இன்று காண்கிறோம்.

சிறு தெய்வ வழிபாட்டின் மூலம் மக்கள் நோய் நொடியிலிருந்து நிவாரணம் பெறுவதும், சமுதாயப் பொருளாதார மாற்றங்கள் காரணமாக உயர் நிலையை அடைகின்ற சூழல்களையும் கண்டு அம்

முறைகளைத் தாங்களும் பின்பற்றிப் பயனடைந்த சூழலும் இந்நிலை மாற்றத்திற்குக் காரணமாக இருக் கலாம் என்று கூற முடியும். நோய் நீங்கவும், பிள்ளை வரம் பெறவும், பேய் பிசாசு ஓட்டவும், மழை வரச் செய்யவும், எடுத்த காரியம் இனிது முடியவும் சமூக நன்மைக்கெனவும், நம்பிக்கையுடன் இறைவழி பாட்டையும், திருவிழாக்களையும் நடத்துகின்றனர். விழாக்களின் மூலம் சமுதாயம் தங்கள் வேற்றுமை களை மறந்து ஒன்றுபட்டு மகிழும் சூழல் ஏற்படும். சமுதாயம் ஒன்றுபடும் நிகழ்ச்சிகள் திருவிழாக்களும் தெய்வ வழிபாடுமே எனலாம். மனிதன் உழைத்துக் களைத்த நிலையில் அதனை மறக்கத் திருவிழாக்களை நடத்துவது இயல்பே. எனவே இத்திருவிழாக்களை

1. நம்பிக்கைகளோடு சேர்ந்த விழாக்கள்
2. தொழிலோடு சேர்ந்த விழாக்கள்
3. பண்பாட்டோடு சேர்ந்த விழாக்கள்

என்று மூன்று வகையாகப் பிரித்து விளக்கலாம்.

## நம்பிக்கைகளோடு சேர்ந்த விழாக்கள்

### சித்திரைத் திருவிழா

மதுரை மீனாட்சிக்கும் சுந்தரேசுவரருக்கும் சித் திரை மாதத்தில் எடுக்கப்படும் விழா சித்திரைத் திரு விழா. இந்நிகழ்ச்சி நடந்ததாக நம்பும் நாட்டுப்புற மக்களே அதிகமாகக் கலந்து கொள்ளுகின்றனர். இவ் விழாவின்போது மதுரை நகரமே விழாக்கோலம் பூண்டி ருக்கும்.

## கார்த்திகை தீபம்

இத்திருவிழாவினை நகர்ப்புற மக்கள் ஒரு மாதிரியும், நாட்டுப்புற மக்கள் இன்னொரு மாதிரியும் கொண்டாடுகிறார்கள். நகர்ப்புற மக்களிலும் சைவ வைணவப் பிரிவிற்கேற்ற முறையில் விழாவின் தன்மை மாறுபடுகிறது.

நாட்டுப்புற மக்கள் கார்த்திகை மாதத்தில் பௌர்ணமியின்போது குறிப்பிட்ட மூன்று நாட்களுக்கு மட்டும் தீபம் ஏற்றி வைப்பார்கள். ஆடவர்களும் சிறுவர்களும் 'சுளுந்து'[15] சுற்றுவார்கள். சோளத் தட்டையை ஒன்றாக வைத்து சுளுந்து சுற்றிப் பின் ஓரிடத்தில் வைத்து நெருப்பு மூட்டி அதனைத் தாண்டுவர். அச்சாம்பலை எடுத்துத் தங்கள் நிலங்களில் இடுவர். அப்படிச் செய்தால் நிலம் நன்கு விளையும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர் நாட்டுப்புற மக்கள்.

நகர்ப்புறங்களிலும் தீபங்கள் கார்த்திகைப் பௌர்ணமியின்போது மூன்று நாட்களுக்கு மட்டும் வைக்கப்படுகின்றன. பிராமணர் வீடுகளில் மட்டும் ஐப்பசி மாதத்தின் கடைசி நாளும், கார்த்திகை மாதம் முழுவதும், மார்கழி மாதத்தில் ஒரு நாளும் ஆக மூன்று மாதங்கள் கணக்கிற்குத் தினமும் இரண்டு தீபங்களை வாயிற்படியில் ஏற்றி வைக்கும் வழக்கத்தினை இன்றும் அனுசரிக்கின்றனர். பிரேஸர் இதனைத் 'தூய்மைப்படுத்தும் கோட்பாடு' (purification theory) என்று குறிப்பிடுவார்.[16] இவை எல்லாமே சமுதாயத்தில் கொண்டாடப்படும் நம்பிக்கை அடிப்படையான விழாக்கள். மேலும் சில நம்பிக்கை அடிப்படை விழாக்கள் சமுதாயப் பின்னணியில் சமுதாய நம்பிக்கைகளின் அடிப்படையில் நிகழ்வன எனலாம்.

குழந்தைகளை வேண்டி நிற்கும் சமுதாயம் அக் குழந்தைகளைப் பெறாத பெண்களுக்கு மதிப்பளிப்ப தில்லை. குழந்தையில்லாதவளை 'மலடி' என்று சொல்வதும் அவள் எந்த விதமான சமுதாயச் சடங்கு செய்வதற்கும் தகுதியில்லாதவள் என்ற நம்பிக்கையும் காலங்காலமாக இருந்து வருகிறது. அரசமரத்தினை ஈர உடையுடன் சுற்றுவதும் பாம்புப் புற்றுக்குப் பால் ஊற்றி வணங்குவதும், சஷ்டி விரதமும், வெள்ளிக் கிழமை விரதமும் மாற்றத்தை உண்டு பண்ணும் என்று நினைக்கின்றனர். சஷ்டி விரதத்தன்று விரதம் இருந்து நிலத்தின் மீது சோறு பறிமாறிச் சாப்பிட்டால் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கையுடன் இந்நோன் பினை நோற்கின்றனர்.

சிறு குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் வாரத்தில் இரு நாட்கள் மிளகாய் சுற்றுவதன் மூலம் கண்ணேறு கழிக்க முடியும் என்ற நம்பிக்கையும் தெளி வாகின்றது. புதுமனைப் புகுவிழாவின் போது வீட்டிற் குத் திருஷ்டி கழிக்க பூசணியைக் கட்டி விடும் பழக்கமும் இருந்து வருகிறது. விளைந்த நிலங்களில் துணி வைக்கோல் இவற்றால் உருவம் செய்து கரும்புள்ளி இட்டு நிலங்களில் வைக்கின்றனர்.

''கல்லடி பட்டாலும் கண்ணடிப் படக்கூடாது'' என்று வழங்கும் பழமொழிகளின் மூலம் மக்களது இத் தகைய நம்பிக்கையினை அறிய முடிகிறது.

''அழகான குறையில்லாத குழந்தையை எமன் தூக்கிச் செல்வான்'' என்ற நம்பிக்கையின் அடிப்படை யிலேயே காது குத்தும் வழக்கம் ஏற்பட்டது எனலாம். 'குழந்தை கொடி சுற்றிப் பிறந்தால் மாமனுக்கு ஆகாது' என்ற நம்பிக்கையும், இரண்டு திருமணங்கள்

ஒரே வீட்டில் ஒரே சமயத்தில் நடந்தால் ஆகாது என்ற நம்பிக்கையும் வெளிப்படுத்தப்படுகின்றன. 17

## தொழிலோடு சேர்ந்த விழாக்கள்

### ஆடிப்பெருக்கு

ஆடி மாதத்தில் பதினெட்டுப் படிக்கு நீர் செல்லும், அப்போது விழா கொண்டாடுகின்றனர். அது விளைச்சலுக்கு உன்னதமான நேரம். இதனால் தான் 'ஆடிப்பட்டம் தேடி விதை' என்ற பழமொழி வழக்கில் உள்ளது. ஆகவே இது போன்றவை தொழிலோடு சேர்ந்த விழாக்கள் என்பது தெளிவு. விவசாயத்தில் நல்ல பலன் கிடைக்க வேண்டும் என்ற முக்கிய நோக்கமே இப்பழமொழியாக முகிழ்ந்துள்ளது என்றும் கூறலாம்.

### பொங்கல் விழா

நம் நாட்டிலும் மற்றும் உலகின் வேறு சில பகுதிகளிலும் கொண்டாடப்படும் இவ்விழாவினை 'உழவர் திருநாள்' என்றே குறிப்பிடுவர். பொங்கல், போகி, மாட்டுப் பொங்கல், காணும் பொங்கல் என்று நான்கு நாட்களுக்கு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. வீட்டை சுத்தப்படுத்திக் காப்புக் கட்டி, சூரியனுக்குப் பொங்கலிட்டு, பின்னர் மாட்டுப் பொங்கலன்று ஜல்லிக் கட்டு நடத்தித் தமிழர்கள் அனைவரும் கொண்டாடும் ஒரே விழா பொங்கல் விழாவாகும். தமிழர் மட்டுமின்றி அசாம் மக்கள் 'பிஹூ' என்றும், பிரிட்டன் (Britain) நாட்டில் நவம்பர் மாதம் முதல் தேதியில்

கொண்டாடப்படும் விழாவினை 'சாமென்' (Samain) என்றும் குறிப்பிடுகிறார்கள்.[18]

மேற்கூறிய இவ்விரண்டு விழாக்களும் நாட்டுப் புறத் தொழிலோடு சம்பந்தப்பட்ட விழாக்களாக அமைந்துள்ளன.

## பண்பாட்டோடு சேர்ந்த விழாக்கள்

பண்பாட்டோடு இணைந்த விழாக்களை நான்கு வகையாகப் பாகுபடுத்தலாம். கீழ்க்கண்ட வரைபடம் இதனை விளக்குகிறது.




## பொது விழாக்கள்

பொது விழாக்களாக வைகாசி விசாகம், தீபாவளி, சித்திரைத் திருவிழா என்று பல விழாக்களைக் குறிப்பிடலாம்.

## வைகாசி விசாகம்

இது விசாக நட்சத்திரத்தில் கொண்டாடப்படுவது. இச்சமயம் எல்லா முருகன் கோயில்களிலும் விசாக விழா விமரிசையாகக் கொண்டாடப்படும். இந்

நாளன்றே புத்தர் பிறந்ததும், போதி மரத்தடியில் ஞானம் பெற்றதும் ஆகிய இரு பெரு நிகழ்ச்சிகள் நடந்தேறின. அதன் காரணமாக இந்நாளை 'புத்த பூர்ணிமா' என்று எல்லா இடங்களிலும் கொண்டாடுவது குறிப்பிடத்தக்கது.

## தீபாவளி

அசுரனைக் கொன்ற நாள் தீபாவளி. இது அமாவாசை அன்று கொண்டாடப்படுகிறது, இந்தியாவில் இதனைத் தீப நாளாக மிக விமரிசையாகக் கொண்டாடுவர். தமிழ் நாட்டில் புத்தாடை உடுத்திப் பட்டாசுகள் கொளுத்தி விருந்துண்பர். வடநாட்டில் இந்நாள் புதுக்கணக்கு (வணிகம்) தொடங்கும் திரு நாளாக விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

## சித்திரைத் திருவிழா

இது சித்திரை மாதத்தில் நடத்தப் பெறும் திருவிழா. மதுரையில் மட்டும் வரலாற்றுச் சிறப்பு இருப்பதனால் அதிக விமரிசையாக நடத்தப்படுகிறது. நகர மக்களை விட நாட்டுப் புற மக்களே இவ்விழாவில் மிகுந்த ஆர்வத்துடன் பங்கு பெறுகின்றனர். சிலப்பதிகாரத்தில் காவிரிப்பூம்பட்டிணத்தில் சித்திரையில் இத் திருவிழா நடந்த செய்தி இங்குக் குறிப்பிடப்படுகிறது.

## பங்குனி உத்திரம்

இது பங்குனி மாதத்தில் கொண்டாடப்படும் விழா, இவ்விழா முருகனுக்காக பத்து நாட்கள் கொண்டாடப்படும். வெயில் அதிகமாக இருக்கும் இச்சமயத்தில் பக்தர்கள் காவடி எடுத்துத் தங்கள்

நேர்த்திக் கடனைச் செலுத்துவர். உழவுத் தொழில் வெயில் காலத்தில் அதிகம் இல்லாத நிலையில் பொழுது போக்கிற்காகவும், நேர்த்திக் கடன் செலுத்தவும் வெயிலின் கடுமையை மறக்கவும் இவ்விழாக்கள் நடைபெறுகின்றன என்லாம்.

## II தெய்வ வழிபாட்டு விழாக்கள்

பங்குனி உத்திரமும் சித்திரைத் திருவிழாவும் தெய்வங்களோடு சம்பந்தப்பட்டிருப்பினும் சிறு தெய்வ வழிபாடு காலப்போக்கில் மாற்றம் பெற்ற நிலையில் சிறு தெய்வங்கள் பெருந் தெய்வங்களாக மாறுகின்ற நிலையில் அம்மன் கோயில்களில் தீமிதியும், அலகு குத்திக் கொள்ளுதல், பலியிடுதல் போன்ற பல நம்பிக்கைகளோடு கூடிய விழாக்கள் நடைபெற்று வரலாயின. இதைப்போன்றே தைப்பூசத் திருவிழாவும் விமரிசையாக நடத்தப்படுகிறது.

### அம்மன் கோயில்களில் திருவிழாக்கள்

கோடை கால ஆரம்பத்தில் மக்கள் விழாக்கள் எடுக்கிறார்கள். அந்தச் சமயத்தில் தீ மிதித்தலும், தீச்சட்டி ஏந்தி ஆடி வருதலும் போன்ற பல தெய்வ வழிபாட்டு நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. இவ் விழாக்களின் போது அலகு குத்திச் செல்லுதலும் தேரோட்டத் திருவிழாவும், முளைப் பாலிகை எடுத்துச் செல்லுதலும் நடைபெறும். இச்சமயங்களில் பலி கொடுக்கும் நிகழ்ச்சிகளும் அதிகமாக இருந்தன. எனினும் தற்போது இந்நிகழ்ச்சிகள் வெகுவாகக் குறைந்து விட்டன என்றே குறிப்பிட வேண்டும்.

## தைப்பூசத் திருவிழா

தைப்பூசத்தன்று காவடி ஏந்தி கால்நடையாக முருகன் கோவில்களுக்குச் செல்வதையும், பந்த சேவை ஏந்தி காரமடை ரங்கநாதர் கோவிலுக்குச் செல்லும் நிகழ்ச்சிகளையும் கோவை மாவட்டத்தில் அதிகமாகக் காணலாம். மேலும் சைவ வைஷ்ணவ தெய்வங்களுக்குக் காவடி ஏந்துதலும், நடந்து செல்லுதலும் போன்ற உடலை வருத்தும் செய்கைகளன்றிச் சிறு தெய்வங்களுக்குச் செய்வது போல் தீ மிதித்தலும் அலகு குத்துதலும் பலி கொடுத்தலும் போன்ற செயல்களைச் செய்வதில்லை.

# III மதத் தொடர்பான விழாக்கள்

## திருவாதிரை

இது நடராஜர் கோவிலில் கொண்டாடப்படும் விழா. இது சைவர்கள் விழாவாயினும் மற்ற பெண் தெய்வங்களை வழிபடுவோரும் இவ்விழாவில் கலந்து கொள்வர். ஆயினும் சைவர்கள் இத்னைத் திருவாதிரைக்களி செய்து சிறப்பாகக் கொண்டாடுவர். இதனை ஆருத்ரா தரிசனம் என்றும் கொண்டாடுவர்.

## மகா சிவராத்திரி

மாசி மாத அமாவாசை இரவன்று இவ்விழா கொண்டாடப்படுகிறது. விஷத்தை உண்ட சிவனுக்காக சிவன் கோவில்களில் இரவு முழுவதும் வழிபாடு நடைபெறும். மக்கள் இரவு முழுவதும் கண் விழித்து இருப்பர். சில இடங்களில் வீடு வீடாகச் சென்று தானியங்களைப் பெற்று இறைவனுக்குப் படைப்பர்.

### வைகுண்ட ஏகாதசி

இது மார்கழி மாத வளர்பிறையில் துவங்கும். பொதுவாகவே மார்கழி மாதம் முழுவதும் தினமும் அதிகாலையில் குளிர்ந்த நீரில் குளித்து விஷ்ணுவை திருப்பாவை, திருவெம்பாவை சொல்லி வணங்குபவர்கள் ஏகாதசி அன்று சொர்க்க வாசல் திறக்கும் நிகழ்ச்சியை நடத்துவர். அன்று ஒருநாள் மட்டும் அந்த வாயில் திறந்திருக்கும். இந்நிகழ்ச்சி திருவரங்கத்தில் மிகச் சிறப்பாக நடைபெறும்.

## IV விழாக்கள் - தெய்வ வழிபாடு - சமுதாயப் பாகுபாடு

சமுதாயத்தின் உயர் மட்டத்தில் இருப்பவர்கள் சில விழாக்களை மிகவும் விமரிசையாகக் கொண்டாடுவர். கீழ் மட்டத்தில் இருப்பவர்கள் மாரியம்மன் திருவிழாக்களில் கூத்து, கரகம் போன்ற விழாக்களில் பங்கு கொண்டு மிக விமரிசையாக நடத்துவர். மழை வருவதற்காகவும், அம்மை நோய் வராமல் தடுக்கவும், ஊர்க்காவல் தெய்வங்களுக்காகவும் விழா எடுப்பர். சில குறிப்பிட்ட சமுதாயத்தினருக்குச் சில குறிப்பிட்ட விழா என்ற பாகுபாடும் உண்டு. தற்போது பாகுபாடு இன்றி ஆதிபராசக்தி வழிபாட்டு மன்றங்களின் மூலம் சமுதாய நன்மைக்காக வழிபடும் சமுதாய மாறுபாடு தோன்றியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

மேற்கூறிய இவ் விழாக்கள் நடக்கும் போது கோயில் மைதானங்களிலும் பொது இடங்களிலும் சந்தைகள் (trade fairs) கூடுகின்ற வழக்கம் அன்றும்

இருந்தது; இன்றும் இருந்து வருகிறது. நம் நாட்டில் மட்டுமின்றி பிற நாடுகளிலும் கூட இதுபோன்ற விழாக்கள் நடக்கும் இடமெங்கும் சந்தைகள் கூடுகின்ற பழக்கம் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது. நாட்டுப்புற மக்கள் தாங்கள் விளைவித்த பொருட்களை விற்று விட்டுத் தங்களுக்கு வேண்டியவற்றைப் பெற்றுக் கொள்ளும் வசதிக்காக இச்சந்தைகள் கூட்டப்படுகின்றன.

தற்போது கண்காட்சிகளின் மூலம் (exhibitions) அல்லது பொருட்காட்சிகளின் மூலம் பலதரப்பட்ட உள்நாட்டுப் பொருட்களோடு வெளிநாட்டுப் பொருட்களை வாங்கக்கூடிய வாய்ப்பும் இத்தகைய சந்தைகளின் மூலம் கிடைத்து வருகிறது. வெளிநாட்டுப் பெருட்களுடன் நம் நாட்டில் ஓர் இடத்தில் (ஒரு மாநிலம் - மாவட்டம் போன்ற இடங்களில்) உற்பத்தியாகும் - உருவாக்கப்படும் பொருட்களையும் இது போன்ற சந்தைகளில் - கண்காட்சிகளில் காட்சிக்குக் கொண்டு வந்து அதன் மூலம் விற்பனையைப் பெருக்குதலும் பரவலாக்கலும் இத்தகைய விழாக்களின் வாயிலாகச் செய்யப்பட்டு வருகிறது. இதனால் அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் - உருவாக்கப்படும் பொருட்கள் இறக்குமதியின் மூலமும், ஏற்றுமதியின் மூலமும் அனைவருக்கும் தெரிய வருகின்றன. இதனால் சமுதாயம் மேம்பாடும் அடைகிறது.

> ''கங்கை நகர்ப்புறத்து கோதுமைப் பண்டம்
> காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம''

என்ற பாரதியாரின் கனவும் இன்று இத்தகைய சந்தை

களின் மூலம் நனவாகி வருகிறது எனலாம். மேலும் மலர்க் கண்காட்சி, காய்கறி கண்காட்சி, பழக் கண்காட்சி போன்றவற்றோடு மாட்டுச்சந்தை போல் அமையும் நாய்க் கண்காட்சி, பொறியியல் கண்காட்சி முதலியன மக்கள் அறிவுக்கு விருந்தாகின்றன. ஆகவே மனித வாழ்வில் சந்தைகள் பெரும் பங்கேற்கின்றன. எனவே 'fairs and festivals' என்பவை நாட்டுப்புற மக்களின் வாழ்வில் மட்டுமன்றி நகர்ப்புற மக்களின் வாழ்வோடும் பின்னிப் பிணைந்துள்ளவை என்று கூறலாம்.

## 2.7.3 நாட்டுப்புற மருத்துவம்

*மக்கள் நாட்டுப்புறங்களிலும் மலைகளிலும் கூட்டங்கூட்டமாக* வாழ்ந்த நிலையில், சுத்தமில்லாத சுகாதாரமற்ற சூழலில், விலங்கோடு விலங்காக வாழ்ந்த காலத்தில், தோன்றிய நோய்கள் வேகமாகப் பரவ மருத்துவ அறிவின்மையும் ஒரு காரணம் எனலாம். மேலும் உடல்நிலை கெடுதல் என்பதை அவர்கள் மிகவும் பாதிக்கப்பட்ட நிலையிலேயே நோய் என்று உணர்ந்து கொண்ட நிலை இருந்தது. அவ்வாறு உடல் நிலை சரியில்லாமை என்பதற்குத் தெய்வத்தின் சீற்றமே காரணம், ஆவிகளின் சீற்றமே காரணம் என்ற நம்பிக்கை முழுமையாக இருந்த நிலையில், அதற்குரிய மருத்துவம் செய்யாமையால் சில நேரங்களில் நோய் அதிகரித்தது. அம்மை நோயினை இன்றும் மாரியம்மனின் சீற்றமாகவும், தெய்வ குற்றமாகவும் கருதுகின்ற நிலை பல வளர்ந்த நாடுகளிலும் காணப்படுகிறது. 19

நாட்டுப் புறங்களிலும், மலைகளிலும், காடுகளிலும் வாழுகின்ற மக்கள் மருத்துவ உதவிக்காக எங்கு செல்ல வேண்டும் என்பதையும், நோய்க்கு மருந்து நகர்ப்புறங்களில் மருத்துவர்களிடம் கிடைக்கும் என்பதையும் அறியாத நிலையில் அவர்கள் தாங்களாகவே தங்கள் நோய்களுக்கு மருத்துவம் பார்த்துக் கொண்டனர். தற்கால மருந்துகள் (அலோபதி) சில நாட்டுப்புற மருத்துவத்தில் பயன்படுத்தப்பட்டு வந்த மூலிகைகள் போன்றவற்றைக் கொண்டு தயாரிக்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, காமாலைக்குக் கண்டு பிடிக்கப்பட்ட மருந்தில் கீழாநல்லிச் சாறு சேர்ந்திருப்பதையும், சுடுகாட்டு மல்லியின் வேர் புற்று நோய்க்கு மருந்து செய்ய உதவுவதனையும், வேப்பிலை, துளசி போன்றவை பல நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுவதனையும் கண்டுபிடித்துள்ளனர். நாட்டுப்புற மக்கள் கீழாநல்லி வேரையும், வேப்பிலை, துளசி இலை, வில்வ இலை போன்றவற்றையும், மரப்பட்டைகளையும் பொடியாகச் செய்து நோய்களுக்கு மருந்துகளாகக் காலங்காலமாகப் பயன்படுத்தி வருகின்றனர். மேலும், அலோபதி மருத்துவ முறையினால் நாள்பட்டு குணமாகும் எலும்பு முறிவுகள் போன்றவை எல்லாமே எண்ணெய்களின் மூலமாகக் குணப்படுத்துகின்ற நிலையினை நாம் இன்றும் காண்கிறோம். இத்தகைய நாட்டுப்புற மருத்துவத்தை இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. நாட்டுப்புற மந்திரத்தின் மூலம் நோய்களைத் தீர்ப்பதற்கான முறைகள்

## 2. நாட்டுப்புற மருத்துவத்தின் மூலம் நோய் களைத் தீர்ப்பதற்கான முறைகள்.

இவற்றை விரிவாகக் காண்பதற்கு முன் நோய்கள் தோன்றுவதற்கான காரணங்களையும், அவை குறித்த மக்களின் நம்பிக்கைகளையும் முதலில் காண வேண்டும். மந்திரங்கள், சடங்குகள் எனப்படுபவை தமிழகத்தில் எல்லா சமயத்தினரிடமும் வேறுபாடு இன்றிக் காணப்படுகின்றன எனலாம்.

தெய்வத்தின் சினம் (wrath), தீய ஆவிகளின் செயல், மந்திரவாதிகளின் செயல், தீய பார்வைகள் போன்றவைகளை நோய்களுக்கான காரணங்களாகக் கூறலாம். தெய்வத்தின் சினத்தால் ஏற்படும் நோய் களைத் தீர்க்க முதலில் தெய்வ சினத்தைத் தணிக்க வேண்டும் என்று நம்பப்படுகிறது. தெய்வ சினத்தின் காரணமாக அம்மை நோய், வயிற்றம்மை, இருமல், உடலுறுப்பு நோய்கள், நச்சுக்கடி நோய்கள், பெரு நோய்கள் போன்றவை ஏற்படுகின்றன என்கின்றனர். இந்நோய்களைத் தீர்க்க முடிந்தால் அதற்குக் காரணம் தெய்வ சினம் தணிந்ததே என்றும் நம்பப்படு கிறது.[20] இல்லாவிடில் செய்யக்கூடாத குற்றத்தைச் செய்ததாலோ, சில கட்டுப்பாடுகளை மீறியதன் கார ணமாகவோ இந்நோய்கள் வந்துவிட்டன என்றும் நம்பப்படுகிறது. இதற்குத் தெய்வ சீற்றத்தைத் தணிக்க முடியாது என்றும் காரணம் கூறிவிடுகின் றனர். அம்மை நோயினை மாரியம்மன் என்ற தெய் வத்தின் சீற்றத்தால் விளைவதாகக் கருதுகின்றனர். அம்மை நோயால் பீடிக்கப்பட்டவர்கள் இருக்கும் வீட்டைச் சுத்தம் செய்யக்கூடாது, வாசனை தரும்

பொருட்களைச் சமைக்கக் கூடாது, எல்லோரும் பயன் படுத்தும் படுக்கையில் படுக்கக் கூடாது. வேப்பி லையை வீட்டில் செருகி வைக்க வேண்டும், தலைமாட் டிலும் வைத்துக்கொள்ள வேண்டும், வீட்டில் இருப்ப வர்களும் கால்களைச் சுத்தம் செய்த பிறகே வீட்டினுள் நுழைய வேண்டும், வேறொருவருக்கு ஒன்றும் கொடுக்கக் கூடாது, மருந்துகளை உட்கொள்ளக் கூடாது என்ற பல கட்டுப்பாடுகள் சொல்லப்படுகின் றன — கடைபிடிக்கப்படுகின்றன. இவற்றை மீறி னால் தெய்வ சீற்றம் அதிகமாகும் என்ற நம்பிக்கை யும் நில்வுகிறது. ஊரில் பெரும்பாலோருக்கு நோய் உண்டாகுமாயின் ஊரார் பெரும்பாலோர் தவறு செய்திருக்க வேண்டும் ¸ என்றும் நம்பப்படுகிறது. இதனை அறிந்துகொள்ள தெய்வத்தை வேண்டும் போது தெய்வம், சிறு குழந்தைகள், பூசாரி, பெண்கள் போன்றவர்களின் மீது இறங்கி காரணத்தையும் அதற் கான பரிகாரத்தையும் கூறும் நிலையும் நாட்டுப்புறங் களில் காணப்படுகிறது.

இருமல் சிறு குழந்தைகளுக்கு அதிகமாகிவிட் டால் காய்ச்சல் போன்ற பல நோய்கள் உண்டாகும். அப்போது மூச்சு விடமுடியாத நிலை ஏற்படும். இதனை நீக்க மந்திர உச்சாடனம் செய்து திருநீரைப் பூசி விளக்கெண்ணெய் குடிக்கக் கொடுப்பர். கண்டங் கத்தரி, வெள்ளைப் பூண்டு ஆகியவற்றை நல்லெண் ணெயில் இட்டுக் காய்ச்சி மந்திரித்துத் தலையில் பற்றுப் போடுவர். கக்குவான் இருமலும் தெய்வ சினத்தால் தோன்றியதாகவே கருதி இதற்குப் பனை ஓலை நறுக்கில் மந்திர மொழிகளை எழுதி குழந்தையின் இடுப்பிலோ கழுத்திலோ கைகளிலோ

கட்டும் பழக்கமும் உள்ளது. இதன் மூலம் தெய்வ சினம் தணிவதாகவும் கருதப்படுகிறது. 21

முடக்கு வாதம், கண்ணில் பூ விழுதல் போன்ற நோய்களும் தெய்வ சினத்தால் விளைவதாகவே கருதப் படுகின்றன. இதற்குப் பரிகாரமாக மண், செம்பு அல்லது வெள்ளி போன்றவற்றாலாகிய உடலுறுப்பு உருவங்களைச் செய்து தெய்வத்திற்குப் படைக் கின்றனர்.

பருக்கள், பாலுண்ணிகள் போன்றவை தோன் றின் மாரியம்மனை வேண்டிக் கொண்டு சர்க்கரையோ, மிளகாயோ, மிளகோ, உப்போ கோயிலில் விழாச் சமயத்தில் செலுத்தும் பழக்கம், பூவோடு (தீச்சட்டி) எடுக் கும் பழக்கம் போன்றவை காணப்படுகின்றன. இவை யெல்லாம் தெய்வ சினத்தை அகற்றுவிப்பனவாகவே கருதப்படுகின்றன. நாக தேவதையின் சினத்தால், சீற்றத்தால் பாம்பு கடிக்கிறது என்று நம்பப்படுகிறது. பாம்பு கடித்தால் மந்திர உச்சாடனம் மூலம் நஞ்சினை இறக்குகின்றனர். கடித்த பாம்பினைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டு வாயில் கீறி இரத்தம் ஒழுகும் போது விஷம் இறங்குவதாக நம்பப்படுகிறது. சிலர் பாத்திரத்தில் நீரை வைத்து மந்திர உச்சாடனம் செய்து அந்நீரை நோயாளியைப் பருகச் செய்து நஞ்சை இறக்குவர். இதற்குத் ‘ த ண் ணீ ர் ம ந் தி ரி த் த ல் ’ என்று பெயர். 22 தோஷம் உள்ளவர் கள் நாகர் உருவம் செய்து கோயிலில் வைத்து வணங் குதலும் விஷக்கடியிலிருந்து பிழைத்தவர்கள் புற்றுக் கருகில் வெள்ளிதோறும் பால் பழம் வைத்து வணங்கு தலும் உண்டு.

வீட்டில் சுத்தமாக இருக்காவிடில் தேள், பூரான் போன்றவை கடிக்கும் என்று நம்பப்படுகிறது. தீட்டுப் பட்டவர்கள் வீட்டினுள் நுழையக் கூடாது என்றும், இதனாலேயே தேள், பூரான் கடிப்பதாகவும் நம்புகின்றனர். இதனையும் தெய்வ சீற்றமாகவே கருதி வீட்டினுள் துப்புரவு செய்து கோயிலுக்குச் சென்று வரும் வழக்கமும் காணப்படுகிறது. இதற்காக மந்திரிப்பதற்குப் பூசாரிகளையே தேடிச் செல்கின்றனர். சில பகுதிகளில் கயிறு மந்திரித்துக் கொடுப்பர். சில இடங்களில் தண்ணீர் மந்திரித்து முகத்தில் அடிக்கும் பழக்கமும் உள்ளது.

## கெட்ட ஆவி

இயற்கை மரணம் அடையாத ஆண் பெண்கள், தங்கள் விருப்பம் நிறைவேறாது இறந்தவர்கள் என்ற இவர்களுடைய ஆவிகளே உயிருள்ள மனிதர்களுள் புகுந்து கொள்ளும் தன்மை பெற்றவை என்று நம்பப் படுகிறது. மனிதன் உடல் நலம் இன்றி இருக்கும் பொழுது அவனுடைய ஆவி வெளியில் சுற்றுவதாக மக்கள் நம்புகின்றனர். ஆவி திரும்பவும் உடலை அடைந்தால் அவன் நலம் பெற்றதாகவும் திரும்ப வரா விட்டால் அவன் இறந்து விட்டதாகவும் கருதப்படு கிறது. இத்தகைய ஆவி மனித உடலை விட்டு விருப்பமின்றி வெளியேறியபின் மனிதருடன் கூடி வாழ விரும்பியோ, இறைச்சி, இரத்தம் இவற்றின் மீது விருப்பம் கொண்ட காரணமாகவோ, தன்னைப் பிறர் மதிக்க வேண்டும் என்ற விருப்பம் காரணமாகவோ, சிலர் மீது தோன்றும் விருப்பம் காரணமாகவோ, விரோதம் காரணமாகவோ அலையும். இருட்டான

இடங்களிலும், சுடுகாடுகளிலும், மரங்களிலும் இவை குடியிருக்கும். அமாவாசை பௌர்ணமி இரவுகளிலோ, பகலும் இரவும், இரவும் காலையும் சந்திக்கின்ற சந்தியா சமயங்களிலோ ஆவிகள் பிடிக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.[23]

பேய் பிடித்ததனை அறியச் சில குறிகள் தென்படும். அடிக்கடி எச்சில் கூட்டி விழுங்குதல், கழுத்து நரம்புகள் புடைத்து ஒருவிதமாகத் துடித்தல், அதிக நேரமும், இரவு மட்டுமன்றி எந்த நேரத்திலும் நீண்ட உறக்கத்தில் ஆழ்தல், மலை மீது ஏறுதல், மின்னலைப் பிடிப்பது போல் ஓடுதல், உடுக்கைச் சத்தம் கேட்டவுடன் தலை விரித்து ஆடுதல், வாசனைப் பொருட்களை நுகர்ந்தவுடன் ஆடுதல், குரல் மாற்றம் பெற்றுத் தெரியாத மொழியையும் சரளமாகப் பேசுதல் போன்ற எல்லாமே பேய் பிடித்ததின் அறிகுறிகளாகும்.

இந்தப் பேய்களை ஓட்டுவதற்குச் சாம, பேத, தான, தண்டம் என்ற முறைகளை ஒவ்வொன்றாகப் பயன்படுத்துவர். சில சமயங்களில் நல்ல ஆவியாக இருப்பின் இன்ன காரணத்திற்காக குறிப்பிட்டவரைப் பிடித்ததாகவும், குறிப்பிட்ட காரியம் முடிந்ததும் தான் விலகி விடுவதாகவும் கூறும். சில ஆவிகள் தங்களுக்கு வேண்டியதைக் கொடுத்தால் போய் விடுவதாகக் கூறும். இன்னும் சில பயமுறுத்தல்களுக்கு அஞ்சி ஓடும். வேறு சில தண்டனை பெற்ற பிறகே தாங்க முடியாமல் விலகி விடுவதாகக் கூறும். சில தலையில் கல் சுமத்தி அடித்து ஊருக்கு வெளியில் உள்ள மரத்தில் தலை முடியையும், ஆடையையும் மனிதத்

தோலினையும் வைத்து மரத்தில் ஆணியடித்த பிறகே செல்லும். 24

இதுமட்டுமன்றி இந்த ஆவிகளினால் சில நோய்களும் ஏற்படும். நாட்டுப்புற மக்கள் பிறந்த குழந்தை அழகாக இருந்தால் ஆவி பிடிக்கும் என்று நம்பி அதற்குச் சூடு போடுவர். பெண்களின் கரு எதிர்பாராமல் கலைவதையும் தீய ஆவியின் செயலாகவே இவர்கள் கருதுகின்றனர். சில குழந்தைகள் பயந்துவிட்டால் ஆ வி யி ன் துன்புறுத்தல் என நினைத்துச் சிகிச்சை அளிக்கிறார்கள். சிறு குழந்தைகளுக்கு உண்டாகும் பாலாரிஷ்ட தோஷத்தையும் தீய ஆவிகளின் செயலெனவே நம்புகிறார்கள். இ த ன் காரணமாகக் குழந்தைகள் பசியின்றி மெலியும். இதற்கு மந்திரித்து சீட்டு எழுதிக் கட்டுதலே சிகிச்சை முறையாகும்.

பெண்கள் எதிர்பாராமல் உடல் நிலையாலும் மன நிலையாலும் பாதிப்படைவதன் காரணத்தை ஆவியின் செயல் என்று கூறுவர். பேய் பிடித்த நிலையிலிருப்பவர்களை மீட்க மந்திர உச்சாடனம் செய்யப்படுகிறது. அச்சமயம் வெற்றிலை, பாக்கு, எலுமிச்சம் பழம், தேங்காய், ஊதுபத்தி ஆகியவற்றை வைத்தே பூசை துவக்கப்படுகிறது. பூசையின் முடிவில் ஆவி பிடித்த பெண்ணின் தலையில் கல்லை வைத்து ஊரெல்லையில் ஒரு மரத்தடியில் போடச் செய்து மரத்தில் ஆணியடித்து முடிக் கற்றை, ஆவி விரும்பிய பொருள்கள் என்று கட்டித் தொங்க விடுவர். ஆவி திரும்பவும்

பிடிக்காதபடி அதனிடம் வாக்குறுதி பெற்றே திரும்புவர். ஆவிபிடித்தவர் உணவு உண்ணும் போது இரண்டு மூன்று நபர் உண்ணும் அளவு உணவைச் சாப்பிடுவது கண்டறியப்படுகிறது. கிருத்துவ, முஸ்லீம் சமயங்களிலும் கூட இந்நம்பிக்கை உண்டு. மனிதக் கண்ணுக்குத் தெரியாத ஆவி மிருகங்களின் கண்களுக்குத் தெரியும் என்ற நம்பிக்கை உண்டு. மாடு மிரள்வதும் நாய் குரைப்பதும் இதன் காரணமாகவே என்பர்.

## மந்திரம்

நாட்டுப்புற மக்களின் நம்பிக்கையில் ஆவிகளைப் போன்றே மந்திரவாதிகள் செய்யும் மந்திரச் சடங்குகளை நம்புதலும் பரவலாகப் பழக்கத்தில் உள்ளது. தங்களுக்குப் பிடிக்காத ஒருவரைக் கஷ்டப்படுத்தவும், கொலை செய்யவும் மந்திரம் போடப்படுவதாக நம்பும் பழக்கம் நாட்டுப்புற மற்றும் மலை சாதி மக்களிடையே காணப்படுகிறது. மந்திரம் என்பது தகடு மந்திரித்தல் பில்லி சூனியம் என்ற முறையில் நடத்தப்படுகிறது. தகடு மந்திரித்து, தமக்குப் பிடிக்காதவர்கள் வசிக்கும் இடங்களில் புதைத்து விடுதல் அல்லது அவர்கள் படுக்கும் படுக்கையில் மறைத்து வைத்தல் போன்ற பழக்கங்கள் கடைபிடிக்கப்படுகின்றன. இதன் காரணமாக இவர்கள் நோய்வாய்ப்படவும் கஷ்டப்படவும் செய்கிறார்கள் என்று நம்பப்படுகிறது. 25 மேலும் எலுமிச்சம்பழம், தலைமுடி, எலும்பு போன்றவற்றையும் மந்திரித்து வைத்து விடுவர். சில இடங்களில் உண்ணும் உணவிலும் குடிக்கும் பானங்களிலும் மருந்து கலந்து கொடுத்து விடுதலும் உண்டு. இதனைக் குடித்தவர்கள்

சிறிது சிறிதாக மெலிந்து நோய்வாய்ப்பட்டு இறந்து விடுவர் அல்லது பயித்தியம் பிடித்து அலைவர் என்றும் நம்பப்படுகிறது. முட்டை, பல்லி போன்றவற்றின் உருவத்தைச் சிதைத்துத் தமக்குப் பிடிக்காதவர் நடக்கும் இடங்களில் புதைத்து விடுவதும் உண்டு. இதன் காரணமாக எதிரி நோய்வாய்ப்பட்டு இறந்து விடுவர் என்றும் கருதப்படுகிறது. இதனையே 'பில்லி சூனியம்' என்பர்.

கடவுளரின் சீற்றத்தால் உண்டாகும் நோய்களாகக் கருதப்படும் அம்மை, இருமல், நச்சுக்கடி போன்றவற்றைத் தீர்க்க நாட்டுப்புற மக்கள் பலவகையான தீர்வுகளைக் காண்கின்றனர். அம்மை நோய் என்பது கோடை காலத்தில் 'வயிரஸ்' என்ற நுண்கிருமிகளால் வருவதால் இதனைத் தீர்க்க அறிந்தோ அறியாமலோ தகுந்த மருத்துவத்தையே இவர்கள் செய்து வருகின்றனர். உடல் உஷ்ணம் அதிகமாவ்தால் அதைத் தணிக்க வேண்டி இளநீரையும், பூவன்பழம், பனங்கல்கண்டு, மோர், தயிர் சாதம் போன்றவற்றையும் ஆகாரமாகக் கொடுக்கின்றனர். உணவில் உப்பினைச் சேர்த்துக் கொண்டால் உடலில் அரிப்பு அதிகமாகும் என்ற காரணத்தால் உப்பில்லாமல் சாப்பிட வேண்டும் என்ற விதியினைக் கடைபிடிக்கின்றனர். மேலும் பச்சை வெங்காயத்தினைத் தயிர் சோற்றுடன் சேர்த்துச் சாப்பிடுவர். வெங்காயத்தின் சாறு கிருமிகளைக் கொல்லவல்லது. பூவன் பழமும் பனங்கல்கண்டும் சேர்த்துச் சாப்பிட்டால் வயிற்றிலுள்ள கிருமிகள் வெளியேற வழி பிறக்கும். உடம்பின் மேல் வேப்பிலையை அரைத்துத் தேய்ப்பதால் உடம்பு தூய்

மையடையும் என்று கருதப்படுகிறது. இன்றும் இத்தகைய மருத்துவமுறை அம்மைநோய் வந்தவர்களுக்குப் பயன்படுத்தப்படுவதைக் காணலாம்.

இருமல், தோஷம் போன்ற நோய்களுக்கு மருத்துவர்கள் தரும் மருந்துடன் பத்தியம் இருத்தல், நோய்த் தணிப்பு மந்திரம், வீட்டு வைத்தியம் ஆகியவற்றையும் செய்கின்றனர். நோய் சரியானால் ஊரில் மாரியம்மன் விழாவைக் கொண்டாடுவதாக நேர்ந்து கொள்கின்றனர். அதோடு விழாவில் தீச்சட்டியை ஏந்தி கோயிலுக்கு வருவதாகவும் நேர்ந்து கொண்டு அதை நிறைவேற்றவும் செய்கின்றனர். விஷக்கடிக்கு அலோபதி மருத்துவத்துடன் பாடம் அடித்தல் போன்ற முறைகளையும் நாடுகின்றனர். நாகம் தீண்டிய கடிவாயில் கோழிக் குஞ்சை வைத்து விஷத்தை உறிஞ்சும் பழக்கமும் உண்டு. சில இடங்களில் மிகவும் தைரியசாலியாக இருப்பவர் கடிவாயில் வாயை வைத்து இரத்தத்தை உறிஞ்சித் துப்பி விடுவர். இவ்வாறு செய்பவர் வாயில் புண் இருக்கக் கூடாது. விஷமானது இரத்தத்தில் கலப்பதற்கு முன் விஷத்தை வெளியேற்றி விட வேண்டும் என்ற அறிவுடன் இவ்வுத்தியைப் பயன்படுத்தியமை புலப்படுகிறது. கடிவாயில் ஐஸ் கட்டியினை வைப்பதும், வெங்காயத்தைத் தேய்ப்பதும் உண்டு.

கெட்ட ஆவிகளை ஓட்ட அவை வேண்டுவனவற்றைக் கொடுத்து, நயத்தால் வெளியேற்றுவர். சிலவற்றைப் பயத்தால் வெளியேற்றுவர். திண்மையான மனது இல்லாத மக்களுக்கு ஆவிகளை நம்பும்

மக்களுக்கு அச்சத்தால் விரைவில் மனமாற்றம் ஏற்படும். இதனையே ஆவி பிடித்தல் என்கின்றனர். இதனை அறியும் அறிவியலறிவு இருந்த போதிலும் சில நம்ப முடியாத நிகழ்ச்சிகளின் மூலம் ஆவிகள் இருப்பதை இன்றும் மக்கள் நம்பியே வருகின்றனர். சில இடங்களில் ஆவிகள் வருவதும் வெளியேறுவதும் சில இயற்கைச் சீற்றங்களின் மூலம் அறிவுறுத்தப்படுகிறது. அதாவது காற்று வேகமாக குறிப்பிட்ட இடத்தில் மட்டும் சுழன்றடித்தல், கட்டிடம் அல்லது நிலம் அதிர்தல், மின்னல், விளக்கு அணைதல் போன்ற மாற்றங்களின் மூலமும், உடம்பில் மயிர் குத்திட்டு நிற்றல், கண்களை வெறித்தல் போன்ற சில மெய்ப்பாடுகளின் மூலமும் ஆண் குரல் அல்லது பெண் குரல் என்று பரிச்சயமான குரல் மாற்றத்தை உணர்தல் போன்றவற்றின் மூலமும் ஆவியிருக்கிறது என்ற நம்பிக்கை வலுவடைகிறது. மந்திரித்தல் மூலம் நோய்வாய்ப்பட்டவர்கள் வேறொரு மந்திரவாதியை அணுகி அவர் மூலம் முன்னவர் வைத்த மருந்தை வெளியேற்றி விட்டால் நோய் நீங்கி விடும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவி வருகிறது. சில இடங்களில் அந்நிலையைக் கண்கூடாகக் காணவும் முடிகிறது. தலைப்பிள்ளை ஆண் குழந்தையாகப் பிறந்து விட்டால் மந்திரவாதிகள் குழந்தையைக் குறிப்பிட்ட சில நாட்களுக்குள் கவர்ந்து சென்று அதற்கு ஊறு விளைவிப்பதும் மேற்குறிப்பிட்ட நிலையில் உள்ள குழந்தைகள் இறந்துவிட்டால் புதைத்த இடத்தில் அவற்றைத் தோண்டி எடுத்து அவற்றின் மண்டையோட்டைக் கொண்டு மந்திரங்கள் செய்வதும் நாட்டுப் புறங்களில் இன்றும் நடந்தே வருகின்றன.

மேலும் மனிதர்கள் நோய்வாய்ப்படின் இயற்கை வைத்தியங்களின் மூலம் நாட்டு வைத்தியர்களைக்

மூலம் நாட்டு வைத்தியர்களைக் கொண்டு பல் நோய் களைக் குணப்படுத்தி வருகின்றனர். நாட்டுப்புற மக்கள் நாம் அன்றாடம் உபயோகிக்கும் கீரை வகை கள் மூலமும் கை வைத்தியத்தின் மூலமும் பல நோய் களைக் குணமாக்கும் நிலையினைப் பரவலாகக் காண முடிகிறது. எடுத்துக்காட்டாக சளி, அஜீர்ணம் ஜுரம் போன்றவற்றிற்கு மிளகு, சீரகம், இஞ்சி, ஓமம் போன்றவற்றைக் கொண்டு நோயினை எளிதாக நீக்கிக் கொள்கின்றனர். மணத்தக்காளிக் கீரையின் மூலமும் குணம் பெறுகின்றனர். வயிற்று நோய் களுக்கும் இவை பொருந்தும். விளக்கெண்ணெயின் மூலமும் சூட்டினால் ஏற்படும் வயிற்று வலியினைத் தீர்க்கின்றனர். தலை வலி, கண் வலி போன்றவற் றிற்குத் தலையில் பற்றுப் போடுவதன் மூலமும், கண் களில் பால் விடுவதன் மூலமும் நோயிலிருந்து விடுபடு கின்றனர்.

தீராத சரும நோய்களையும் வில்வ இலையை அரைத்து தேய்ப்பதன் மூலம் குணப்படுத்துகின்றனர். உடம்பில் காயம்பட்டால் தூதுவளை இலையின் சாற்றைப் பிழிந்து காயத்தை ஆற்றிவிடுகின்றனர். வேப்பிலை, துளசி போன்றவற்றை உட்கொள்வதன் மூலமும் குணம் காணுகின்றனர். கற்பூரவல்லி இலை யின் சாற்றினைக் குழந்தைகளுக்குக் கொடுப்பதன் மூலம் நெஞ்சுச் சளியினை குணப்படுத்து கின்றனர். உடம்பில் நின்றுவிடும் வடுக்களை மீன் எண்ணெய், நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயைத் தினமும் பூசுவதன் மூலமும் குணப்படுத்துகின்றனர். மூட்டு வலியினைக் கசாய மருந்துகளின் மூலம் குணப்படுத்தும் முறை வழக்கில்

உள்ளது. வாத நோயினை எண்ணெய் தடவி நீவு வதன் மூலம் குணப்படுத்துகின்றனர். மூட்டு விலகல் களையும், அலோபதி மருத்துவத்தால் தீர்க்க முடியாத எலும்பு முறிவுகளையும் கட்டுக்கட்டி எண்ணெய் தடவுவதன் மூலம் குணப்படுத்துகின்றனர். காமாலை நோய்க்கு கீழாநல்லி வேர் சாப்பிடுகின்றனர். சீத பேதிக்கு மாதுளம் பிஞ்சினை அரைத்து உட்கொள்கின் றனர்.

இதுகாறும் மந்திரம், நாட்டுப்புற மருத்துவம் என்ற இரண்டையும் தனித்தனியே கண்டோம். இனி மக்கள் வாழ்வில் நம்பிக்கைகளின் அடிப்படையில் இவை இரண்டும் இணைந்த நிலையில் செயல்படு வதைக் காணலாம். 'கண்படுதல்' என்ற நம்பிக்கை நாட் டுப்புற மக்களிடையேயும் சில நகர்ப்புறக் குடும்பங்களி லும் இன்றும் நிலவி வருவதாகும். பிறருக்கு தீங்கு விளைவிக்கும் பார்வையினைக் கொண்ட மனிதர்கள் குழந்தைகளை விளையாடும்போதோ, உண்ணும் போதோ, உறங்கும்போதோ பார்த்தால் பார்வைக்குள் ளானவர்கள் நோய்வாய்ப்படுவர் என்பது நம்பிக்கை. நோய்வாய்ப்பட்டவர்கள் பசியின்மை, உணவுண்ண முடி யாமை, வாந்தியெடுத்தல், மெலிதல், அழகழிதல் போன்ற பல தீங்குகளுக்கு ஆளாவர். இதற்கு மிளகாய் சுற்றுதல், ஆரத்தி சுற்றுதல், திரி சுற்றுதல் போன்ற நாட்டுப்புறப் பரிகாரங்களையே பெரும்பாலும் செய்வர். இது போன்றே அதிகமாகப் பால் கொடுக்கும் பசுக்களைச் சிலர் பார்த்துவிட்டாலும் கண்படும் என்பர். இதற்குப் பரிகாரமாக ஐந்து பெண்கள், சாம்பலை முறங்களில் இட்டு மாட்டைச் சுற்றிப் புடைப்பர். மாடு மேய்ந்து விட்டு வரும் மாலை நேரங்களில் ஞாயிற்றுக்

கிழமைகளில் வீட்டு வாயிலில் உலக்கையும் துடைப்பமும் போட்டு அதனை மாடு தாண்டு மாறு செய்யும் பழக்கம் இன்றும் இருந்து வருகிறது. இதுபோன்றே குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் வியாழன் அன்றும் ஞாயிறு அன்றும் மாலையில் மிள காய், உப்பு, தலைமுடி, கண்இமை முடி, முச்சந்தி மண் என்று எல்லாவற்றையும் சேர்த்துச் சுற்றி முச்சந் தியில் போட்டு விட்டுத் திரும்பிப் பார்க்காமல் மௌன மாய் வீட்டிற்கு வரும் பழக்கமும் உள்ளது. சிலரிடம் வெறும் மிளகாயைச் சுற்றி வீட்டுக்கு வெளியில் அல்லது எரியும் அடுப்பில் போடும் பழக்கமும் உள்ளது. மிகச் சிறிய குழந்தைகளுக்கு முகத்தில் கறுப்புப் பொட்டு திருஷ்டிக்காக வைக்கும் பழக்கம் உள்ளது. சிறு குழந்தைகள் மருண்டு அழுதால் கறுப்புக் கயிறு மந்திரித்துக் கட்டுதலும் தாயத்துக் கட்டுதலும் சீட்டு மந்திரித்துக் கட்டுதலும் வழக்கமாகக் காணப்படுகிறது.

மனிதர்களின் பார்வை மட்டுமன்றி சில விலங்கு களின் பார்வையும் தீமை செய்யும் என்ற நம்பிக்கையும் இருக்கக் காண்கிறோம். உடல் மிக மெலிந்து பசி யின்றி வாடிக் கிடந்தால் தேரையின் பார்வை குழந் தையின் மீது பட்டதே இதற்குக் காரணம் என்று கூறுவர். இந்நோயைப் போக்கத் தேரையை மாட்டுத் தோலில் அடைத்துத் தைத்து குழந்தையின் கழுத்தில் கட்டுவர். இதனால் தேரை சாக நோயும் சாகும் எனவும், குழந்தை குணமடையும் என்றும் நம்புவர்.[26]

இரவு நேரங்களிலும் குறிப்பாகத் திருஷ்டி சுற்றிப் போட்ட பிறகும், சந்தி நேரங்களிலும், பறவைகள்

கூட்டிற்குத் திரும்பும் நேரங்களிலும் குழந்தைகளை வெளியே தூக்கிக் கொண்டு சென்றால் குழந்தைகளுக்கு நோய் உண்டாகும் என்பது நம்பிக்கை. கூகையின் பார்வை விழுந்து குழந்தை நலக்கேடுறும் என்ற நம்பிக்கையும் உள்ளது. பூசாரிகளைக் கொண்டு வேப்பிலை அடித்தல், திருநீறு பிடித்தல் போன்ற முறைகளால் இந்நோயைச் சரிப்படுத்துவர். தேவாங்கு என்ற விலங்கு குழந்தைகளுக்கு நன்மையே செய்யும் என்ற நம்பிக்கையும் உள்ளது. உடல்நலக் கேடுற்ற குழந்தையைத் தேவாங்கின் முன் அமர்த்தி அதன் வாயில் வைத்த கயிற்றை வாங்கிக் கட்டினால் குழந்தை உடல் நலம் பெறும் என்ற நம்பிக்கை உள்ளது. பேய் பிடிப்பால் பாதிக்கப்பட்டவர்களின் மன உந்துதல்களைப் பேயோட்டுவதன் மூலம் வெளிக் கொணர்வதால் அவர்கள் நோய் நீங்கி நலம் பெறுவர் என்றும் கருதப்படுகிறது.[27] உடுக்கை அடித்து, பேயோட்டுவதற்காக உரக்கப் பாடும்பொழுது பேய் பிடிப்புக்குள்ளானவர் தங்கள் மனநிலைக்கேற்ப தலை விரித்து ஆடுவதாலும், மந்திரவாதி சாட்டையால் அடிக்கும்போது அவர்கள் மன விருப்பு வெறுப்புகளை வெளியிட்டு விடுவதாலும், கடவுள் நம்பிக்கையாலும் நோய் நீங்கிக் குணம் பெறுகின்றனர் என்று நம்பப்படுகிறது. அறிவியல் பூர்வமான துணிபு இவ்வாறிருப்பினும் மக்கள் ஆவிகளின் நம்பிக்கையினாலும், தெய்வ நம்பிக்கையினாலும் மருத்துவத்தின் உட்பொருளை உணராது இம்முறைகளை அதிகமாகப் பின்பற்றி வரக் காண்கிறோம்.

பகலில் உச்சி வேளையிலும், மாலை நேரங்களிலும், இரவு நேரங்களிலும் புலால் உணவை வேற்றிடங்களுக்குக் கொண்டு சென்றாலும், வாசனை மிகுந்த

மலர்களைச் சூடிச் சென்றாலும் ஆவி பிடிக்கும் என்ற நம்பிக்கை இருந்து வருகிறது. தவிர்க்க முடியாத நிலையில் இவற்றைக் கொண்டு செல்ல நேரிடின் இரும்பையும் கரியையும் உடன் கொண்டு செல்வதும் காலில் செருப்பு அணிந்து செல்வதும் வழக்கமாக உள்ளது. ஆவிகள் நெருப்பு, இரும்பு, கரி, செருப்பு போன்றவற்றைக் கண்டு பயப்படும் என்ற நம்பிக்கை நிலவி வருகிறது. தெய்வ வழிபாட்டு மந்திரங்களை இடைவிடாதும் பயப்படாதும் உச்சரித்தால் எந்தத் தீய ஆவியும் அணுகாது என்ற நம்பிக்கை இன்றும் நிலவி வருகிறது.

## 2.7.3 நோய்களும் அறிவியல் சார்ந்த மருத்துவமும்

நாட்டுப்புற மருத்துவத்தில் பெரும்பாலானவை அறிவியல் சார்ந்த மருத்துவமாகவே அமைந்துள்ளன எனலாம். காயம் பட்டவுடன் தூதுவளை இலையின் சாற்றை அதன் மேல் விடும் போது அச்சாறு இரத்தத்தை உறையச்செய்து வெளிப்புறக் கிருமிகள் காயத்தின் வழியாக உடலில் புகாமல் காக்கிறது. மேலும் மண், தூசு, அழுக்கு போன்றவை காயத்தில் பட்டு, அதனால் உடல் நலம் கெடும் நிலையினையும் தவிர்க்க இச்சாறு உதவுகிறது.

துளசி இலையைத் தின்றும் துளசி கலந்த நீரைப் பருகியும் வரும் போது சளி, கபம் போன்றவை தொண்டையில் சேராமல் இருப்பதோடு குரலும் பிசிறில்லாமல் வளமாக இருக்கும். வேப்பிலையை உடம்பில் பூசும் போது உடம்பில் இருக்கும் கிருமிகள்

இறந்து விடுகின்றன. இதனால் பிறருக்கு நோய் பரவாமல் தடுக்கப்படுகிறது. கீழாநல்லி இலையும் வேரும் ஈரலைப் பாதுகாத்து பலப்படுத்துகிறது என்பர்.

இத்தகைய நாட்டுப்புற மருத்துவ முறைகள் இடத்திற்கு இடம் சிற்சில மாறுபாடுகளுடன் காணப் படினும் பெரும்பான்மை மருத்துவங்கள் ஒன்றுபோலவே இருக்கக் காண்கிறோம். நாட்டுப்புற மக்களன்றி நகர்ப்புறங்களில் வாழ்வோரும், மருத்துவக்கலை பெரு வளர்ச்சி பெற்றுவிட்ட இக்காலத்திலும் தற்கால மருத்துவ முறை சார்ந்த மருந்துகளை உட்கொண்டும், நாட்டுப்புற மருத்துவ முறைகளாகிய எண்ணெய் தேய்த்து நீவுதல், திருநீறு பிடித்தல், வேப்பிலை அடித்தல், மந்திரச் சடங்குகளைச் செய்தல் போன்ற வற்றை வெளியில் செய்தும் குணம் பெற்று வருகின் றனர். அறிவியல் வளர்ச்சியில் எத்துணையளவு முன்னேறி இருப்பினும் நாட்டுப்புற மருத்துவத்தின் மூலம் எளிமையாகவும், வேகமாகவும், முழுமையாகவும் தீராத நோய்களினின்றும் குணம் பெற முடிகிறது என்ற நம்பிக்கை இன்றும் வலுவோடு இருந்து வருகிறது.

## 2.8 நாட்டுப்புற விளையாட்டுகள்

நாட்டுப்புறக் கலைகளில் விளையாட்டுகள் சிறப்பிடம் வகிக்கின்றன. விளையாட்டு என்பது உடலுக்கும் உள்ளத்துக்கும் உரம் தரக்கூடியது, மன மகிழ்ச்சி ஏற்படுத்தக் கூடியது. பொதுவாக விளை

யாட்டு என்பது பொழுது போக்கிற்கென அமைந்ததே. மனிதனின் நவரச உணர்வுகள் காரணமாக பலவகையான விளையாட்டுகள் விளையாடப்படுகின்றன. இவை காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம், சமுதாயத்திற்குச் சமுதாயம், நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன. இதன் காரணமாகவே விளையாட்டுகள் போட்டிகளில் முடிகின்றன.

பொதுவாக விளையாட்டுகளை அகவிளையாட்டுகள் (indoorgames), புறவிளையாட்டுகள் (outdoor games) என இருவகைப்படுத்தலாம். இவ்விளையாட்டுகளைக் குழந்தைகள், சிறுவர், சிறுமியர், ஆடவர், பெண்டிர், வயதானோர் போன்ற எல்லா வயதினரும் தங்கள் வயதிற்கும் சூழ்நிலைக்கும் விருப்பத்திற்கும் ஏற்ற நிலையில் ஆடுகின்றனர். விளையாட்டுகளை ஒருவர் விளையாட்டு, இருவர் விளையாட்டு, குழு விளையாட்டு என்று கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம். 28

விளையாட்டுகள் - பாகுபாடு 1

- ஆண்கள் விளையாட்டு
  - தனிநபர்
  - இருவர்
  - குழு
- பெண்கள் விளையாட்டு
  - தனிநபர்
  - இருவர்
  - குழு
- சிறுவர் விளையாட்டு
  - தனிநபர்
  - இருவர்
  - குழு

விளையாடும் நேரத்தினையும் காலத்தினையும் கொண்டும் விளையாட்டுகளைப் பாகுபடுத்தலாம்.

காற்றுக் காலத்தில் பட்டம், காற்றாடி போன்றவை களைப் பறக்கவிடும் விளையாட்டுகளையும், மழைக் காலத்தில் கப்பல் விடுதல் போன்ற விளையாட்டு களையும் விளையாடுகின்றனர் மக்கள். இதுபோன்றே திருவிழாக் காலங்களில் ஜல்லிக்கட்டு, ரேக்ளா ரேஸ், ஏறு தழுவுதல், சிலம்பம், மல்யுத்தம் போன்ற விளை யாட்டுகளையும் விளையாடுகின்றனர். மாலை நேரங் களில் சிறுவர் சடுகுடு, கபடி போன்ற விளையாட்டு களையும், சிறுமியர் கிளித்தட்டு, கயிறு குதித்தல் போன்ற விளையாட்டுகளையும் விளையாடுகின்றனர். சிறுவர் சிறுமியர் என்ற இரு பாலாரும் சேர்ந்து கண்ணாமூச்சி, குலை குலையாய் முந்திரிக்காய் போன்ற விளையாட்டுகளை விளையாடுகின்றனர். நிலாக் காலங்களில் வயது வந்த பெண்கள் கும்மி யடித்து விளையாடுகின்றனர். பகல் பொழுதில் வயது முதிர்ந்த பெண்டிரும், திருமணமாகாத பெண்டிரும் வீடுகளில் பாண்டி, தாயம், பரமபதம் போன்றவற்றை விளையாடுகின்றனர். விடுமுறை நாட்களில் சிறுமியர் கல் விளையாட்டுகளை விளையாடுகின்றனர். இவ்விளையாட்டுகளை மாலை நேரத்தில் விளையாடக் கூடாது என்ற கட்டுப்பாடும், அப்படி விளையாடினால் மழை வராது என்ற நம்பிக்கையும் கிராமப் புறங்களில் காணப்படுகிறது. இளைஞர்களும் ஆண்களும் பெரும் பாலும் வேறு விளையாட்டுகளை விளையாடு வதில்லை. விழாக் காலங்களில் மட்டுமே வீர விளை யாட்டுகளில் இவர்கள் பங்கு கொள்கின்றனர்.

சமுதாய மேல் மட்டத்தில் அல்லது உயர்நிலை யில் வாழ்பவர்கள், கற்றவர்கள் போன்றோர் இத்தகைய விளையாட்டுகளை விளையாடுவது இல்லை. வீட்டில் இருப்பவரும் சமுதாயத்தின்

இடைப்பட்ட நிலையிலும் தாழ் நிலையிலும் இருக்கும் பெண்களும் ஆண்களுமே இத்தகைய விளையாட்டு களை விளையாடுகின்றனர். சமுதாய உயர் மட்ட நிலையில் உள்ளவர்களில் சிறுவர் ஹாக்கி, டேபிள் டென்னிஸ், கிரிக்கெட் போன்ற விளையாட்டுகளையும், சிறுமியர் வாலிபால், டென்னிஸ், பேட் மிண்டன் போன்ற விளையாட்டுகளையும் விளையாடுகின்றனர். இவையெல்லாம் அதிகாலையிலும் மாலை நேரங் களிலும் விளையாடப்படுகின்றன. மேலும் இளைஞர் களும் பெண்களும் இத்தகைய விளையாட்டுகளுடன் கார் ரேஸ்களில் கலந்து கொள்கின்றனர். ஓடுதல் பயிற்சியையும், தினமும் அதிகாலையில் மேற்கொள் கின்றனர். நடுத்தர, வயது முதிர்ந்த ஆண் - பெண் இருபாலரும் தினமும் காலையிலும் மாலையிலும் நடப்பதன் மூலம் தங்கள் பொழுதைக் கழிப்பதுடன் இத்தகைய எல்லா விளையாட்டுகளையும் உடற் பயிற்சிக்காகவும் தங்களுடைய சமுதாய மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ளவும் பயன்படுத்துகின்றனர் எனலாம்.

இவற்றுடன் சில விளையாட்டுகளை வீட்டில் மட்டுமே விளையாட முடியும். அவை பாண்டி, தாயம், பரமபதம், கல் விளையாட்டு போன்றவை. பந்து, கோலிக்குண்டு, கிட்டிப்புள், பம்பரம், பச்சைக் குதிரை போன்ற விளையாட்டுகளைச் சிறுவர் வீதிகளில் மாலை நேரங்களில் மட்டுமே விளையாடுகின்றனர். சிறுமியர் சிறு வீடு, பூம்பூ புளியம்பூ, குலைகுலையாய் முந்திரிக் காய் போன்ற விளையாட்டுகளை வீதிகளில் விளை யாடுகின்றனர். சிறுவர் - சிறுமியர் இருபாலாரும் சேர்ந்து கண்ணாமுச்சி அல்லது கண் கட்டி விளையாட் டினை மாலை நேரங்களில் விளையாடுவர். இதுவும் வீதி

யில் விளையாடப்படும் விளையாட்டே ஆகும். இவர்களது விளையாட்டுகளைக் காலம், நேரம், இடம், வயது, சமுதாயச் சூழல் என்ற ஐந்து கூறுகளின் அடிப்படையில் பாகுபடுத்தலாம்.

விளையாட்டுகள் • பாகுபாடு 2

| காலம் | நேரம் | இடம் | வயது | சமுதாயச் சூழல் |
| --- | --- | --- | --- | --- |
| காற்றுக் காலம் விழாக் காலம் மழைக் காலம் | காலை மாலை இரவு | வீடு தெரு பொது இடம் | பெரியோர் இளைஞர் சிறுவர் | பண்டிகை அறுவடை பொழுதுபோக்கு |

பெண்கள் இரவு நேரங்களில் தெருக்களில் கும்மியடித்து, நிலாச்சோறு சாப்பிட்டு விளையாடுவது வழக்கமாக உள்ளது. ஆண்கள் விழாக் காலங்களிலும் பண்டிகைக் காலங்களிலும் சிலம்பம், காளை அடக்குதல், போன்ற வீர விளையாட்டுக்களைப் பொது இடங்களிலும், உரியடித்தல், மஞ்சள்நீர் விளையாட்டு, பாரி வேட்டை போன்றவற்றைக் கோயில் வளாகங்களிலும் விளையாடுகின்றனர்.

பெரும்பான்மையான இவ்விளையாட்டுகள் பாட லுடனே ஆடப்படுகின்றன. சிறுவர் விளையாட்டு களான கோலி, பம்பரம், பட்டம், பந்து, கப்பல் விடு தல், பச்சைக் குதிரை, ராஜா - மந்திரி, கள்ளன்-போலீஸ், கிட்டிப்புள் போன்றவற்றிலும், சிறுமியர் மற்றும் பெண்கள் விளையாட்டுகளான தாயம், பாண்டி, சில்லு, கல் விளையாட்டு போன்றவற்றிலும் பாடல்கள் இடம் பெறுவதில்லை. சிறுவர் மற்றும் ஆண்கள் விளையாட்டுகளான கபடி, சடுகுடு. சிறுவர்-சிறுமியர் விளையாட்டான கண்ணாமூச்சி, சிறுமியர் விளையாட் டான கொப்பரை கொப்பரை போன்ற விளையாட்டுக் களில் அறிவு வளர்ச்சிக்குப் பயன்படக்கூடிய பாடல் கள் அமைந்திருக்கக் காண்கிறோம். பூம்பூ புளியம்பூ, குலை குலையாய் முந்திரிக்காய், கிளித்தட்டு போன்ற விளையாட்டுகளில் வினா-விடை அல்லது உரை யாடல் முறையில் பாடல்கள் அமைந்திருப்பது குறிப் பிடத்தக்கது. சிறுவர் விளையாட்டான ஆடு-ஓநாய் விளையாட்டில் பாடல் உரையாடல் முறையில் அமைந் திருக்கும். இவை சிறுவர்க்குரிய கடமையினைப் போதிக்கும் வகையில் அமைந்துள்ளன.

தீப்பந்தம் சுற்றுதல் போன்ற விளையாட்டுகள் இளைஞர்களுக்குரியது. சிறிது வலிமையும் பயிற்சியும் கவனமும் தேவையான விளையாட்டு இது. திருவிழாக் காலமான கார்த்திகை மாதத்தில் (ஜோதியின் போது) விளையாடப்படும் இவ்விளையாட்டின்போது மாவளிப் பாடலைப் பாடுவர். சில பாடல்கள் விடுகதை அமைப் பினைக் கொண்டதாக இருக்கும்.

'கன்னங்கரேலென்று இருக்கும்
இரண்டு காலிருக்கும்
பகலில் பார்க்கலாம்
இரவில் பார்க்க முடியாது
அதன் பெயர் என்ன ?'

என்று பாடும்போது சரியான விடையினைக் கண்டு பிடிக்க ஒரு குறிப்பினையும் கொடுத்து விளையாடுவர். மறைமுகக் குறிப்பின் மூலம் விடை காணும் இயல்பினை வளர்க்கும் முறை விடுகதைக்கே உரியதாகும். இவையெல்லாம் சாதாரண விளையாட்டுகள் எனலாம்.

## வீர விளையாட்டு

உயிரைத் துச்சமென மதித்துப் பணயம் வைத்து விளையாடும் விளையாட்டே வீர விளையாட்டு எனப்படும். சிலம்பம், மஞ்சி விரட்டு, உறியடித்தல் போன்றவற்றை இளைஞர்களே விளையாடுவர். இவை வழிவழியாக நம் முன்னோர்கள் விளையாடிய விளையாட்டுகளே எனினும் காலத்திற்கேற்ப சூழல்களுக்கேற்ப பல மாற்றங்களைப் பெற்று வந்துள்ளது. பாகுபாடு இரண்டின்படி காலம், நேரம், இடம், வயது, சமுதாயச்சூழல் போன்றவற்றிற்கேற்ப இவ்விளையாட்டுகளைப் பாகுபடுத்தலாம்.

## காலம்

விளையாட்டுகள் விளையாடப்படும் காலங்களை மூன்றாகப் பிரிக்கலாம். அவை :

1. காற்றுக்காலம்
2. விழாக்காலம்
3. மழைக்காலம் என்பன.

காற்றுக்காலம்

சிறுவர் சிறுமியர் விளையாட்டுகள் காலத்திற் கேற்ப மாறி அமைகின்றன. காற்றுக் காலத்தில் பட்டத்தினையும், காற்றாடியினையும் பறக்கவிட்டு சிறுவர் விளையாடுவர்.

காற்றாடி

இக்காற்றாடியினைச் சிறுவர் தென்னம் ஓலை நறுக்கினை நடுவில் முள்ளினால் துளை போட்டு அம் முள்ளினைச் சிறு சோளத்தட்டில் குத்திக்கொண்டு அங்கும் இங்கும் ஓடுவர். இதனால் காற்றாடி வேக மாகச் சுழன்றாடும். காற்றாடி விளையாட்டினைப் பலர் சேர்ந்து விளையாடினாலும் தனித்தனியாக ஓடி விளையாடுவதால் இது தனி நபர் விளையாட்டு எனப் படுகிறது. காற்றாடி விடும் சிறுவர்கள் பாட்டுப் பாடிக் கொண்டே ஓடி ஆடுவர்.

பட்டம்

கனமில்லாத சதுர வடிவக் காகிதத்தை எடுத்துக் கொண்டு அதன் நான்கு பக்கங்களிலும் தென்னங்குச் சியை வைத்து ஒட்டுவர். நடுவில் ஆரம் போல் ஒரு தென்னங்குச்சியை வளைத்து ஒட்டிப் பின் ஒரு மூலை

யில் நீளமான காகிதத்தினை வால் போல் ஒட்டுவர். இதுவே பட்டம் எனப்படும். பின்னர் நூலினைப் பட்டத்தின் நடுவில் கட்டி அந்நூலைத் தளரவிட்டால் பட்டம் மேலேறி வானத்தில் பறக்க ஆரம்பிக்கும். பட்டம் விடப் பயன்படும் நூலை ஒருவிதப் பசை தடவி கெட்டிப்படுத்தி மற்றொருவர் விடும் பட்டத்துடன் போட்டி போட்டு, அப்பட்டத்தின் நூலினை அறுத்து வெற்றி பெறும் போட்டி விளையாட்டினை விளையாடுவர். இதனை 'மாஞ்சாப் பட்டம் விடுதல்' என்று குறிப்பிடுவர். இவ்வாறன்றி யாருடைய பட்டம் அதிக உயரம் செல்கிறது என்ற முறையில் மாஞ்சா இன்றி சாதாரண ஆட்டமாகவும் விளையாடுவர். மாஞ்சாப் பட்ட விளையாட்டு ஆபத்தினை விளைவிக்கும் விளையாட்டு என்பதும் குறிப்பிடத் தக்கது. இவ்விளையாட்டைத் தனியாகவும், இருவராகவும், குழுவாகவும் விளையாடலாம். பாட்டின்றி, பகலில் மட்டுமே இவ்விளையாட்டு விளையாடப்படுகிறது.

## II விழாக்காலம்

விழாக்காலங்களில் ஆண்கள் சில விளையாட்டுகளை விளையாடுவர். அவை சல்லிக்கட்டு, பாரி வேட்டை, சிலம்பம், புலிவேடம், இளவட்டக்கல், ஓட்டம், உரிமரம் ஏறுதல், இரட்டை மாட்டுப் பந்தயம், மோடி விளையாட்டு, பானை உடைத்தல், உறிப் பானை போன்றவையாகும்.

### சல்லிக்கட்டு

மாட்டுப் பொங்கலன்று மாட்டின் கழுத்தில் கட்டப்பட்ட வளையத்தினை எடுத்தல் அல்லது

காளை மாட்டை அடக்கி அதன் கொம்பில் கட்டப் பட்ட பணமுடிப்பை எடுத்தல் என்ற இவற்றையே சல்லிக்கட்டு என்கின்றனர். இதனை ஏறுதழுவு தல் என்று அகநானூறு, கலித்தொகை போன்ற சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. 29 இத்தகைய இலக்கிய மரபின் எச்சமாகச் சல்லிக்கட்டினை நாம் இன்றும் கொண்டாடி வருகிறோம். பண்டைக் காலத் தில் இத்தகைய வீர விளையாட்டில் வெற்றி பெற்ற ஆண்மகனுக்கே பெண் கொடுத்து மணம் முடிக்கும் பழக்கம் இருந்து வந்துள்ளது. தற்போது பணமுடிப்பு கள் கொடுக்கப்படுகின்றன. இது ஒருவர் மட்டுமே விளையாடும் விளையாட்டாகும். இதுவும் ஓர் ஆபத்தான விளையாட்டு, எனினும் வீரர்கள் விரும்பி இவ்விளை யாட்டை விளையாடுவர். ஸ்பெயின், போர்ச்சுக்கல், மெக்ஸிகோ போன்ற நாடுகளிலும் இத்தகைய விளை யாட்டுகள் நடைபெறுகின்றன. காளைகளை அழகாக அலங்கரித்துச் சலங்கைகள் கட்டி மாலை வேளையில் ஊர்ப் பொது இடங்களில் விளையாட விடுவர்.

## பாரிவேட்டை

பாரிவேட்டை மாசி மாதத்தில் சிவராத்திரிக்கு மறுநாள் நடத்தப்படும். இதுவும் திருவிழாவோடு தொடர்புடையது. இது பலர் சேர்ந்து இரவில் நிகழ்த்தும் விளையாட்டாகும். அரசர்கள் வேட் டைக்குச் செல்கின்ற நிகழ்ச்சியினை விவரிக்கும் முறை யில் இது அமைந்துள்ளது. பாரிவேட்டை தற்போதும் கிராம விழாக்களில் நடைபெறுகிறது. வேட்டைக்கார சாமி, கருப்புசாமி, அய்யனார்சாமி போன்ற சிறு தெய் வங்கள் உள்ள இடங்களில் பாரிவேட்டை நடத்தப்படு

கிறது. விழாக் காலங்களில் கொட்டு முழக்குகளுடன் காட்டிற்குச் சென்று முயல் வேட்டையாடி உணவு சமைத்து இறைவனுக்குப் படைப்பது வழக்கமாக உள்ளது. அவ்வாறு வேட்டையாடிய முயலின் இரத்தத்தில் உணவினைக் கலந்து சில முக்கியமான வீதிகளில் இரவில் தெளிப்பர். இதனைப் பெண்டிர், குழந்தைகள் போன்றோர் பார்க்கக்கூடாது என்ற நம்பிக்கை உண்டு. பழங்காலத்தில் புலி, சிறுத்தை முதலிய மிருகங்களை வேட்டையாடி அவற்றை வண்டியில் வைத்து ஊரின் முக்கிய வீதிகளில் ஊர்வலம் நடத்தி வந்தனர். இது அவர்களின் வீரத்தின் எடுத்துக் காட்டாக அமைந்திருந்தது.

## சிலம்பம்

இவ்விளையாட்டு தற்போது விழாக்காலங்களின் கேளிக்கை விளையாட்டாக நடத்தப்படுகிறது. சிலம்ப விளையாட்டு விளையாட மூங்கில் கம்புகள் தேவைப் படுகின்றன. இதனை மாலை நேரங்களில் விளையாடுவர். இந்தியாவின் பல்வேறு மாநிலங்களிலும் வெவ்வேறு பெயர்களுடன் இந்த விளையாட்டு நடைபெறுகிறது. பரத நாட்டியக் கலையில் நடனம் தொடங்குமுன் வணக்கம் செலுத்துவது போல இந்த விளையாட்டின்போதும் வணக்கம் செலுத்தும் மரபு அமைந்திருப்பது தமிழர் விளையாட்டின் சிறப்பெனக் கூறலாம். எதிரிகளின் கம்புகள் தன் மீது படாமல் தன் கம்பினால் தடுத்து விளையாடுவதும் எதிரிகளின் கம்புகளை எகிறி விழச் செய்வதும் இவ்விளையாட்டின் சிறப்பியல்பாகும். விழாக்களின்போது சிலம்பங்களில் வண்ணங்கள் பூசியும் பாடல்கள் பாடியும் விளையாடுவது வழக்கமாக உள்ளது.

## புலிவேடம்

புலிவேடமிட்டவர் கொட்டு முழக்குடன் விழாக் காலத்தில் மாலை மற்றும் இரவு நேரங்களில் விளையாடுவர். புலிபோல் உடலில் வண்ணங்கள் பூசிக் கொண்டு கையில் புலி நகங்களுடன் பெரிய வாலினைக் கட்டிக்கொண்டு சிலம்ப விளையாட்டு போலவே இதனை ஆடுவர். இருவர் புலிவேடமிட்டு ஆடுவதும் உண்டு.

## இளவட்டக்கல்

இது மறவர் இனத்தின் மணவினை விழாவாகும். இளவட்டக் கல்லினைத் தூக்கும் நிகழ்ச்சி ஊர்ப் பொது இடத்தில் நடைபெறும். தலைக்கு மேல் இக்கல்லினைத் தூக்கியவருக்குப் பெண் கொடுக்கும் வழக்கம் இன்றும் உள்ளது. இது திறன் சோதிக்கும் விளையாட்டெனலாம். ஒருவர் ஒருவராக கல்தூக்கும் நிகழ்ச்சியில் பங்கு கொள்வதால் பலர் சேர்ந்தாலும் ஒருவர் விளையாட்டாகவே இதனைக் குறிப்பிடுவர்.[30] தற்போதைய பளு தூக்கும் (weight lifting) போட்டி இதன் வளர்ச்சி நிலை எனலாம். பழங்குடியினரான தோடர்களிடமும் இத்தகைய விளையாட்டு காணப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## ஓட்டம்

கள்ளர், மறவர் இனத்தினர் ஆடிமாதத்தில் விளையாடும் விளையாட்டே ஓட்ட விளையாட்டு எனப் படுகிறது. இதனைத் திருமணமான புது மாப்பிள்ளை

ஆடி மாதத்தின் கடைசி நாளன்று மாமனார் ஊரில் விளையாடுவார். மாப்பிள்ளையின் பின்புறம் அவ்வூரைச் சேர்ந்த நன்றாக ஓடும் ஒருவர் நின்று கொள்வார். விளையாட்டு ஆரம்பித்தவுடன் மாப்பிள்ளை ஓட ஆரம்பிக்க வேண்டும். பின்னால் ஓடுபவர் மாப்பிள்ளையைத் தொட ஓடுவார். குறிப்பிட்ட எல்லை வரை அவர் தன்னைத் தொட்டு விடாமல் மாப்பிள்ளை ஓடிக் கடக்க வேண்டும். இது இருவர் சேர்ந்து விளையாடும் திறன் சோதிக்கும் விளையாட்டாகும். இதனை இன்றும் இவ்வினத்தினர் விளையாடுகின்றனர். இதன் வளர்ச்சி நிலையே இன்றையத் தொட்டு விளையாட்டு எனலாம்.

## உரிமரம்

இது கிருஷ்ண ஜெயந்தி அன்று நடைபெறும் விளையாட்டாகும். பருத்த உதிய மரத்தின் பட்டையை உரித்து விட்டு மரத்தில் விளக்கெண்ணெய் தடவி அதன் மீது ஏறி உச்சியில் வைக்கப்பட்டுள்ள பரிசுப் பொருளை எடுக்க வேண்டும் என்பது இவ்விளையாட்டின் நியதி. இவ்விளையாட்டில் பலர் கலந்து கொண்டாலும் ஒவ்வொருவராகவே ஏறுவதால் இதுவும் ஒருவகையில் தனி நபர் விளையாட்டாகும்.

## இரட்டை மாட்டு வண்டி

வண்டியில் இரண்டு காளைகளைப் பூட்டிக் கொண்டு பந்தயம் விடுவது வழக்கம். பந்தயத்தில் கலந்து கொள்ளும் காளைகளை அரைசாண், மத்திய தர மற்றும் பெரிய காளைகள் என்று மூன்று வகை

யாகச் பிரிப்பர். பெரும்பாலும் பெரிய காளைகளே வெற்றி பெறும். எனவே இவையே நல்ல காளைகளாகக் கருதப்படுகின்றன. மேலும் இளைஞர்களே இவ்விளையாட்டில் பெரிதும் கலந்து கொள்வர். இப்பந்தயம் 'ரேக்ளாரேஸ்' என்ற பெயரில் இன்றும் விளையாடப்படுகிறது. இது பலர் சேர்ந்து விளையாடும் பகல் விளையாட்டு என்று சொல்லப்படுகிறது. முதலில் வரும் இளைஞர் வெற்றி பெற்றவராகக் கருதப்படுவார். ஊர்ப் பொது இடங்களில் கிராம தேவதைகளின் வழிபாட்டு விழாக் காலங்களில் இவ் விளையாட்டு நடத்தப்பெறும்.

## மோடி விளையாட்டு

இவ்விழாக்கால விளையாட்டில் கோயில் பூசாரிகள் கலந்து கொள்வார். இது இருவர் விளையாட்டு. சவுண்டம்மன் விழாவின் போது பொங்கலுக்கு அடுத்த நாள் மஞ்சள்நீர் தெளித்து விளையாடுவர். கரகம், வாழைத்தண்டு, வாழைப்பழம், ஆட்டுக்கால், முட்டை, உலக்கை, தேங்காய் என்பவையே ஆடுபொருள்களாகும். இவ்விளையாட்டு மதுரையில் தேவாங்க செட்டியார் இனத்தாரிடையே இன்றும் நடைபெறுகிறது. இங்கு குறிப்பிட்ட பொருள்களை எடுக்கச் செல்லும் பூசாரி குட்டிக்கரணம் போட்டுக் கொண்டே சென்று எடுக்கவேண்டும். அப்போது திருநீற்றினை வீசுவர். பூசாரி திருநீறு தன்மேல் படாதவாறு பொருள்களை எடுக்கவேண்டும். திருநீறு பட்டு விட்டால் பூசாரி இறந்தவர் போல் கீழே விழுந்துவிட வேண்டும். யாராவது ஒருவர் அவரை முன்பிருந்த இடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். பிறகு மறுபடியும் விளையாட்டு ஆரம்பமாகும். மேற் குறிப்பிட்ட இவ்வேழு பொருள்களையும் எடுக்கும் வரை ஆட்டம் தொடரும்.

## III மழைக் காலம்

மழைக்காலங்களில் கப்பல், கழற்சிக்காய், காயா? பழமா? போன்ற விளையாட்டுகளை விளையாடும் பழக்கம் இருந்து வருகிறது.

### கப்பல் விளையாட்டு

ஓடும் மழை நீரில் காகிதத்தால் ஓடம் செய்து சிறுவர் விளையாடும் இவ்விளையாட்டு மழைக்கால விளையாட்டாகும். இது பகல் நேர விளையாட்டு என்பதோடு மழை வரும்போது மட்டுமே பலர் சேர்ந்து விளையாடும் விளையாட்டாகும்.

### கழற்சிக்காய் விளையாட்டு

மழைக்காலத்தில் கழற்சிக்காய் அதிகமாகக் கிடைப்பதால் இக்காய்களை உருட்டி விளையாடுவது வழக்கமாக உள்ளது. இது பலர் சேர்ந்து விளையாடும் பகல் நேர விளையாட்டாகும்.

### காயா? பழமா?

இதனை விளையாடும்போது நீரில் நின்று கொண்டு நீரினைச் சுண்டி விடுவது வழக்கம். ஓசையெழுந்தால் பழம் என்றும் ஓசையெழாவிட்டால் காய் என்றும் கூறுவர். காயானவர் நிற்க, பழமானவர் நீரில் இறங்கி விடுவார். காயானவர் அவரைச் சென்று

தொடவேண்டும். நீந்தி விளையாடும் விளையாட்டா கவும் இதனைக் கொள்ளலாம். இது பலர் சேர்ந்து விளையாடும், பகல் நேர மற்றும் உடல் திறன் வளர்ப்பு விளையாட்டாகவும் கருதப்படுகிறது.

மேற்குறிப்பிட்ட விளையாட்டுகள் எல்லாம் காலை, பகல், மாலை, இரவு ஆகிய நேரங்களில் விளை யாடும் விளையாட்டுகளில் அடங்கும்.

இளைஞர்கள் காலையில் உடற்பயிற்சிக்காக சிலம்ப விளையாட்டினைப் பயில்வது உண்டு. வீட்டு வேலைகள் முடிந்த பின்பு வீட்டிலுள்ள பெண்கள் மற் றும் முதியோர் தாயம், பாண்டி, பரமபதம் போன்ற வற்றை ஆடுவது போன்றே வேலையில்லா இளைஞர் களும், அறுவடை முடிந்தவர்களும் ஆடு புலியாட்டங் களை ஆடுவர். சிறுவர் சிறுமியர் மாலை நேரங்களில் வீட்டுக்கு வெளியில் கிளித்தட்டு, சடுகுடு, கபடி, பச்சைக்குதிரை, கயிறு குதித்தல், கண்ணாமூச்சி போன்ற விளையாட்டுகளை விளையாடுவர். சிறுவர் விளையாட்டான கிட்டிப்புள்ளின் வளர்ச்சி நிலையாகத் தற்போதைய கிரிக்கெட் வளர்ச்சி அடைந்துள்ளது எனலாம்.

இரண்டாம் பாகுபாட்டின் அடிப்படையில் ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்ட பங்கேற்போர் வயது, விளையாட்டு, நேரம், காலம், சமுதாயச் சூழல் போன்றவற்றைப் பற்றிய விபரங்களை எளிதில் புரிந்து கொள்ளத் துணைபுரியும் வகையில் கீழ்க்கண்ட அட்ட வணை கொடுக்கப்பட்டுள்ளது.

| விளை யாட்டு | பங்கேற் போர் | இடம் | நேரம் | காலம் | சமுதா யச் சூழல் |
|---|---|---|---|---|---|
| காற்றாடி | சிறுவர் | பொது | பகல் | காற்றுக் | பொழு |
| பட்டம் | ,, | இடம் | ,, | காலம் | துபோ |
| கப்பல்- | | | | மழைக் | க்கு |
| விடுதல் | ,, | ,, | ,, | காலம் | |
| பச்சைக்- | | தெரு | மாலை | எல்லாக் | |
| குதிரை | ,, | ,, | ,, | கர்லங் | ,, |
| கபடி, | ,, | ,, | ,, | களிலும் | |
| சடுகுடு | ,, | ,, | ,, | ,, | |
| கிட்டிப்புள் | ,, | ,, | ,, | ,, | |
| கோலி | ,, | ,, | ,, | ,, | |
| கயிறு- | சிறுமி | தெரு | ,, | ,, | ,, |
| குதித்தல் | யர் | | | | |
| கிளித்தட்டு | ,, | ,, | ,, | ,, | |
| குலை- | | | | | |
| குலையாய் | | | | | |
| முந்திரிக்- | | | | | |
| காய் | ,, | ,, | ,, | ,, | |
| தாயம் | ,, | வீடு | பகல் | விடு | |
| கல் விளை- | ,, | ,, | ,, | முறைக் | ,, |
| யாட்டு | ,, | | | காலம் | |
| கண்ணா- | இருபா | தெரு | மாலை | எல்லாக் | |
| மூச்சி | லாரும் | | ,, | காலங் | |
| காயா?- | | | | களிலும் | |
| பழமா? | ,, | ,, | ,, | ,, | ,, |
| கழற்சிக்- | ,, | ,, | ,, | ,, | |
| காய் | | | | நிலாக் | அறு |
| கும்மி | பெண் | ,, | இரவு | காலம் | வடை |
| தாயம் | கள் | வீடு | பகல் | எல்லாக் | |
| பரமபதம் | ,, | ,, | இரவு | காலங் | பண்டி |
| பாண்டி | ,, | ,, | பகல் | களிலும் | கை |

| விளையாட்டு | பங்கேற்போர் | இடம் | நேரம் | காலம் | சமுதாயச் சூழல் |
|---|---|---|---|---|---|
| சல்லிக்கட்டு | இளைஞர் | பொது இடம் | மாலை | விழாக் காலம் | அறுவடை பண்டிகை |
| பாரிவேட்டை | ,, | | இரவு | | |
| சிலம்பம் | | | பகல் | ,, | |
| ஆடுபுலியாட்டம் | | | | | |
| புலிவேடம் | | | இரவு | | |
| இளவட்டக்கல் | ,, | ,, | | | |
| ஓட்டம் | | | | | |
| உரிமரம் | | | ,, | ,, | ,, |
| மோடிவிளையாட்டு | | | | | |
| ரேக்ளாரேஸ் | இளைஞர் | ,, | மாலை | விழாக் காலம் | அறுவடை |
| சீட்டுக்கட்டு | பெரியோர் ,, | ,, | இரவு | ,, | பொழுதுபோக்கு |

மேற்கூறிய விளையாட்டுகளைக் காலம், நேரம், இடம், வயது என்று பாகுபடுத்திக்கொண்டு அக்கால மக்கள் ஆடவில்லை. ஆனாலும் இவ்விளையாட்டுகள் எல்லாமே இயற்கையாகவே இப்பாகுபாடுகளுடன் அமைந்து விட்டன. மேலும் விளையாடும் விளையாட்டு களும் சமுதாயச் சூழல்களும் இணைந்து இன்றியமை யாதனவாக அமைந்துள்ளன. பெரும்பான்மையான

விளையாட்டுகள் பொழுதுபோக்கு விளையாட்டுகளா கவே அமைகின்றன. இவற்றை மனமகிழ்ச்சிக்காக விளையாடும்போது பல திறன்களும் வளர்ச்சியடைவ தாகக் கருதப்படுகிறது. இவ்விளையாட்டுகள் அனைத் தும் நாட்டுப்புற மக்களின் பழக்க வழக்கங்களை வெளிப்படுத்துவனவாக அமைவதோடு மொழி வளர்ச் சிக்காகவும் பயன்படுகின்றன எனலாம். உரையாடல் முறை, பழமொழி, விடுகதைமுறை விளையாட்டுகள் அறிவுத் திறனுக்காக மட்டுமன்றி மொழி வளர்ச்சிக்கும் திருத்தமாக மொழியைப் பேசுவதற்கும் பயிற்சி அளிக் கும் விளையாட்டுகளாக அமைந்துள்ளன. இவற்றினை அறிவுத்திறன் விளையாட்டுகள்' என்றும் கூற லாம். சில விளையாட்டுகள் வாய்ப்பு நிலை விளை யாட்டுகளாகவே அமைகின்றன. அவ்விளையாட்டு களில் வெற்றி பெற பயிற்சி மட்டுமே அவசியமா கிறது. மேலும் சில வீர விளையாட்டுகள் உடல்திறன் விளையாட்டுகளாகவும் அமைகின்றன. இதுபோன்று விளையாட்டுகள் பொழுதுபோக்கிற்காக அமைந்திருந் தாலும் அவை பல நிலைகளில் மக்களுக்குப் பயன்படு கின்றன என்று கூறலாம். பொதுவாக விளையாடு கின்ற நேரங்களில் இரவு நேர ஆட்டங்கள் அருகியன வாகவும், மாலை நேர விளையாட்டுகள் அதிகமாகவும் அமைந்துள்ளன. மேலும் இளைஞர் மற்றும் பெரி யோரைவிடச் சிறுவர் சிறுமியரே அதிகமாக விளையாட் டுகளில் ஈடுபடக்கூடிய நிலை இன்று அதிகமாகக் காணப்படுகிறது. சிறுவர் சிறுமியர் விளையாட்டுகளின் மூலம் சமூகத்தின் நிலை பிரதிபலிக்கப்படுகிறது. குழந்தை விளையாட்டுகள், சிறுவர் சிறுமியர் விளை யாட்டுகள் பாடல் தொடர்புடையனவாகவும், மொழி வளர்ச்சியின் அடிப்படையிலும் அமைந்துள்ளன. ஆதி

மனிதன் தன் வாழ்வில் தற்காப்பிற்காக ஏற்படுத்திய செயல்களின் எச்சங்களே, பிற்கால விளையாட்டுகளும் அவை தொடர்பான நம்பிக்கைகளும் என்பர்.[31] சமுதாயத்தையும், மக்களின் மனப் பிரதிபலிப்பினையும் அவர்கள் விளையாடும் விளையாட்டுகள் எடுத்துக் காட்டுகின்றன என்றால் அது மிகையன்று. சமுதாய அறிவு, சமுதாயக் கட்டுப்பாடு, ஒற்றுமை உணர்வு, பொறுப் புணர்ச்சி, பிறருக்கு உதவும் குணம், மகிழ்ச்சியிலும் தன் நிலை பிறழாத அடக்க உணர்வு போன்ற பல குணங்கள் வளர இவ்விளையாட்டுகள் உதவுகின்றன என்பதையும் அறிய முடிகிறது.

## 2.9 நாட்டுப்புறவியலின் சமுதாயப்பங்கு, பணி - இன்றியமையாமை

நாட்டுப்புறவியலின் சமுதாயப் பணியில் பங்கு கொள்ளும் இலக்கியங்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன :

1. நாட்டுப்புற இலக்கியம்
2. நாட்டுப்புறக் கலைகள்
3. நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவை.

நாட்டுப்புற இலக்கியங்கள் எனப்படுபவை நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், கதைப் பாடல்கள், விடுகதைகள், பழமொழிகள் போன்றவை. இவற்றில்

கதைப் பாடல்கள் எனப்படுபவை மிக நீண்டும், அடி வரையறையின்றியும் இருக்கும். தாலாட்டு, ஒப்பாரி என்ற இரண்டையும் தனிநிலைப் பாடல்கள் என்று குறிப்பிட்டுக் கூறலாம். நாட்டுப்புறக் கலைகள் எனப்படுபவை பொய்க்குதிரை, கரகம், காவடி, கூத்து வகைகள், ஒயிலாட்டம், தேவராட்டம், நாடகங்கள் போன்றவையாகும். மூன்றாவது பிரிவு மக்களின் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் போன்றவற்றின் காரணமாகச் செய்யப்படும் சடங்குகளை விரித்துக் கூறுவனவாகவும் அமைகிறது.

இத்தகைய நாட்டுப்புற இலக்கியங்கள் நாட்டுப்புற மக்களின் கதைகளையும், எதிர்பார்ப்புகளையும், நம்பிக்கைகளையும், அவர்களின் விருப்பு வெறுப்புகளையும், ஆசைகளையும் இன்ப துன்பங்களையும் வெளிப்படுத்துவனவாகவே அமைகின்றன. மனித வாழ்க்கையின் பல்வேறு நிலைகளிலும் நாட்டுப்புறப் பாடல்கள் பலவகையாகப் பாடப்படுகின்றன. இத்தகைய பாடல்கள் எல்லாமே எளிமையாகவும் கேட்பவர்கள் புரிந்து கொள்வதற்கு ஏற்பவுமே அமைந்து மனதில் தோன்றும் உணர்ச்சிகளுக்கேற்ப மாற்றிப் பாடப்படுவதால் ஒருமுறை பாடிய அதே சொற்கள், தொடர்கள் போன்றவை மறுபடியும் வருவதில்லை. ஆயினும் வளமான மொழி இங்கு பயன்படுத்தப்பட்டு வருவதால் சமுதாயத்தில் மொழி வளர்ச்சி காலமாற்றத்திற்கேற்ப மாற்றம் பெற்று வருகிறது. அதோடு காப்பியங்கள், எழுத்திலக்கியங்கள், இசைக்கலை போன்றவை தோன்றி வளர வழி வகுத்தவை இந் நாட்டுப்புறப் பாடல்களே என்றும் குறிப்பிடுவர்.[32]

கோவலன் கதை, இராமாயணம் போன்றவை தோன்றுவதற்கான கதைக்கரு நாட்டுப்புறப் பாடல் களினின்றே கிடைத்ததாகக் கூறப்படுகிறது. மேலும் பள்ளு, குறவஞ்சி, சிந்து, அம்மானை, ஊசல் போன்ற இலக்கியங்களும் நாட்டுப்புற இலக்கியங்களினின்று முகிழ்த்தவையே. இத்தகைய கதைப் பாடல்கள் சமுதாயத்தின் பல்வேறு பணிகளிலும் பங்கு பெற்று மக்கள் அறிந்தோ அறியாமலோ அவர்கள் வாழ்வுடன் ஒன்றி விட்டன எனலாம். இரவு நேரங்களில் ஊர்ப் பொது இடங்களில் திருவிழாக் காலங்களில் கதைப்பாடல் களைப் பாடும்பொழுது பொது மக்கள் - சிறுவர் முதல் பெரியோர் வரை அங்கு கூடி கதைப் பாடல்களைக் கேட்பர். சில இடங்களில் இசைக் கருவிகளுடன் பாடுவதும் உண்டு. இன்னும் சில இடங்களில் ஒருவர் பாட மற்றொருவர் கதையினை விரித்துக் கூறும் வழக்கமும் உண்டு. எப்படிக் கூறினும் மக்கள் மனதில் நற்பண்புகள் பசுமரத்தாணி போல் பதிந்து விட இத்தகைய நிகழ்ச்சிகள் காரணமாக அமைந்து விடுகின்றன. மேலும் புராண, வரலாற்று நிகழ்ச்சிகளைத் தங்கள் குழந்தைகளுக்கு எடுத்தியம்பவும் அவர்களை நல்வழிப் படுத்தவும், தாம் கேட்டவாறு நடைமுறை வாழ்க்கையினை நெறிப்படுத்திக் கொண்டு சமூக உயர்விற்குத் துணை செய்யவும் இக்கதைப் பாடல்கள் பயன்படுத்தப் படுகின்றன—துணை செய்கின்றன.

திருவிழாக் காலங்களில், மாரியம்மன் கோயில் விழாக்களில் மட்டுமின்றி இதுபோன்ற கதைப்பாடல்கள் அறுவடை முடிந்த பிறகும், பொழுதுபோக்கிற்காகவும் பாடப்பட்டு வந்தன. காத்தவராயன், மதுரை வீரன், முத்துப்பட்டன், நல்லதங்காள் போன்ற கதைப்பாடல் கள் சமூகத்தில் சாதி மத ஏற்றத்தாழ்வினைப் போக்கவும்

மக்களிடத்தில் வீர உணர்ச்சியைத் தோற்று விக்கவும், செல்வச் செருக்கினை அடக்கவும், இவை துணைபுரிகின்றன எனலாம். மேலும், காதல் வாழ்க்கையினைக் காட்டவும், சமுதாயச் சிக்கலினால் அடைகின்ற துன்பங்களை எடுத்துக் காட்டும் வகை யிலும் இவை அமைந்திருக்கின்றன. முத்துப்பட்டன் கதையில் வீரம், குல வேறுபாடு போன்ற கருத்துக் களுடன் உடன்கட்டை ஏறும் பழக்கமும் எடுத்துக்கூறப் பட்டுள்ளது. ஆயினும் இப்பழக்கம் கட்டாயமாக நம் நாட்டில் இருக்கவில்லை என்பதனை மன்னன் பாண்டி யனின் மனைவி தன் கணவன் இறந்ததைக் கண்ட வுடன் தானும் மடிந்ததும் (தானே இறத்தல்) சான் றோர் தடுத்தும் தீப்பாய்ந்த பெருங்கோப் பெண்டுவின் கதையும் (கட்டாயப்படுத்தாமல் உடன்கட்டை ஏறுதல்) நமக்கு விளக்குகின்றன.

நல்லதங்காள் கதை மூலம் பெரிய அரச னின் மனைவியாயிருந்தும் வற்கடம் வந்த கார ணத்தால் தாய் வீடு சென்றாள் என்பதை அறிய முடிகிறது. அங்கு அவள் சகோதரன் மனைவி அவள் வருகையை விரும்பவில்லை. அதனால் அவள் கொடுமைப்படுத்தப்படுகிறாள். கொடுமைப்பட்டு உயிர் வாழ்வதைக் காட்டிலும் இறப்பதே மேல் என்று தன் பன்னிரண்டு மக்களையும் கிணற்றில் தள்ளித் தானும் இறக்கிறாள். இதுபோன்ற கதையினைச் சமூகத் திற்கு ஒரு படிப்பினையை வழங்கும் கதையாகக் கொள் ளலாம். எத்தனை வறுமை வந்தபோதிலும் சகோ தரன் வீடு நாடி வரக்கூடாது, சுமையாக இருக்க லாகாது என்று சமூகத்திற்குத் தெரியப்படுத்தும் படிப் பினையாக இக்கதை அமைகிறது. இதனையே இன் னொரு கோணத்திலும் சமுதாயம் பார்த்து பயனடை யும் நிலையும் காணப்படுகிறது. அதாவது தன் வீடு

தேடி வந்த சகோதரிகள் கண்ணீர் விட்டு அழுதால் தன் குடும்பம் வளமாக இராது என்ற சமூக மனப்பான்மையும் (social attitude) இக்கதையால் வெளிப்படுகிறது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இது போன்ற கதைகளினால்தான் இத்தகையதொரு நம்பிக்கை சமுதாயத்தில் தோன்றியிருக்க வேண்டும். புகுந்த வீட்டிற்குச் சென்ற பெண் சீரும் சிறப்பும் இழந்து தாய் வீடு திரும்பினால் அதில் மதிப்பில்லை. அளவுக்கு மேல் பிள்ளைகளைப் பெறலாகாது. கணவன் சொல் மீறினால் துன்பம் வரும் என்பதால் அவரவர் வாழ்க்கையைச் சூழ்நிலைக்கேற்ப அமைத்துக்கொள்ளவேண்டும் என்ற இவ்வுணர்வுகள் நாட்டுப்புற மக்களன்றி, நகர்ப்புற மக்களின் மனத்திலும் பதிந்துள்ளன. மக்கள் மனத்தில் இத்தகைய மனப்பான்மைகள் வேரூன்றியதற்குக் காரணம் இந்நாட்டுப்புறக் கதைகளே எனலாம்.

தேசிங்குராஜன் கதை மூலம் விவேகமில்லாத வீரம் நன்மை செய்யாது என்ற படிப்பினையே சமூகத்திற்குப் புகட்டப்படுகிறது. அண்ணன்மார் சுவாமிகள் கதை மூலம் பங்காளிச் சண்டை விளக்கப்படுகிறது. அவர்கள் வாழ்க்கை முறையின் மூலம் விருந்தோம்பல் பண்பினைச் சமுதாய நடைமுறையில் நம்மால் இன்றும் காண முடிகிறது. சில இடங்களில் பங்காளிச் சண்டை வந்தால் எப்படி நடந்துகொள்ள வேண்டும், எப்படி விட்டுக் கொடுப்பது நல்லது என்ற இரண்டு வகைப் படிப்பினையும் சமுதாயத்திற்கு எடுத்துக் கூறப்படுகிறது. கட்ட பொம்மு கதை, கான் சாகிப் சண்டை, வன்னியடி மறவன் கதை, வெள்ளைக்காரன் கதை, சிவகங்கை கும்மிக் கதை போன்றவை வீரத்துடன் மக்களின் துரோகச் சிந்தைகளையும் எடுத்துரைக்கின்றன.

## 2.9.1. நாட்டுப்புறப் பாடல்கள்

சமுதாய அமைப்பு முறையில் நோக்கின் பாடல்கள் மக்கள் வாழ்வில் பெரும் பங்கு வகிக்கின்றன. தாலாட்டுப் பாடல்களைப் பாடும்போது குழந்தை அதன் பொருள் புரிந்து கேட்பதில்லை. அங்கு இசையே இன்றியமையாததாகிறது. இசையினைக் கேட்டு குழந்தை உறங்கி விடுகிறது. குழந்தையை அமைதிப் படுத்த இவ்விசை துணை புரிகிறது. மேலும் குழந்தையின் மனத்தில் நற்பண்புகள் வளர இப்பாடல்கள் மறைமுகமாக உதவி செய்கின்றன. குழந்தைக்குப் பாதுகாப்பு உணர்ச்சி தோன்றுகிறது. தாயும் தன் உள்ளத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதன் மூலம் அமைதியடைகிறாள். இப்பாடல்கள் பாடுபவர் தன் உள்ளக் குறிப்பை மற்றவர்களுக்கு குறிப்பாக உற்றார் உறவினருக்கு உணர்த்தவும், கேட்போர் தங்களிடம் தவறு இருப்பின் திருத்திக் கொள்ளவும் வழிவகுக்கின்றன. குழந்தை தாயின் குரல் கேட்டுத் தானும் அதுபோல நாவசைக்கவும், பேசவும் முயற்சி செய்வதுடன் சிறு குழந்தைகள் ஒற்றுமையாக வளரவும், பகிர்ந்துண்ணும் குணத்தினை வளர்த்துக் கொள்ளவும் முடிகிறது. இவ்வாறு இப்பாடல்கள் சமுதாய மக்களிடையே குறிப்பாக குழந்தைகளிடையே சீரிய குணங்கள் வளர வழிவகுக்கின்றன.

குழந்தைகள் ஓடியாடி விளையாடி மூச்சை அடக்கிப் பாடுவதால் உடல் ஆரோக்கியம் பெறவும், எளிதில் தங்கள் அறிவினை வளர்த்துக் கொள்ளவும் எண்ணிக்கைப் பாடல் விளையாட்டுகள் பயன்படுகின்றன. இப்பாடல்கள் நல்லதொரு இளஞ்சமுதாயத்தை உருவாக்கும் பணிக்கு அடித்தளமாக அமைகின்றன எனலாம். தெம்மாங்குப் பாடல்கள் வண்டி ஓட்டிச்

செல்லும் போதும், தனி வழி நடக்கும்போதும் துன்பத்தினையும் அச்சவுணர்வினையும் தவிர்க்க உதவுகின்றன.

இசையானது பயிர்களை வளர்க்கும் என்ற தற்காலக் கண்டுபிடிப்பினை அறியாதவர்கள் அக்கால மக்கள். நாற்று நடவுப் பாடல்கள், உழவுப் பாடல்கள், ஏற்றப் பாடல்கள் என்று தொழிற்பாடல்கள் பலவற்றைப் பாடிக்கொண்டே வேலை செய்வது வழக்கம். இதன் மூலம் தங்கள் மெய் வருத்தம் மறக்கவும், உள்ளக்குமுறல்களை வெளிப்படுத்தி அமைதியடையவும் முடிந்தது. தங்கள் உள்ளத்து உணர்வுகளை, மகிழ்ச்சியை, கேலிப் பாடல்களின் மூலம் விளையாட்டாகப் பாடி மகிழ்ந்து வேலை செய்ததன் மூலம் மக்களுக்கிடையே நட்புறவு வளரவும், ஒருவருக்கொருவர் ஆதரவாக இருக்கவும் பாமர மக்கள் கற்றுக் கொண்டனர். இதனால் தங்கள் இன்ப துன்ப உணர்வுகளைப் பிறருடன் பகிர்ந்து மகிழவும், அறிவுரை கூறவும் கற்றுக் கொண்டு அதன் வாயிலாகச் சமுதாயத்தில் நல்வாழ்வு வாழும் பண்பினைப் பெற்றவர்களாக வாழ்கின்றனர்.

மக்கள் தங்கள் விருப்பு வெறுப்புகளைப் பாடல்கள் மூலம் வெளிப்படுத்துவதால் நாசூக்காக அதனைப் புரிந்து கொண்டு தங்கள் எண்ணங்களைச் சீர்படுத்திக் கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுகிறது. மேலும் சமுதாய ஏற்றத்திற்கு இப்பாடல்கள் வழிகாட்டுகின்றன.

இலக்கியப் பாடல்களைக் கற்காமலேயே நாட்டுப்புற மக்கள் தாங்கள் ஒருவர் மேல் வைத்த

அன்பினை பிறருக்காக மாற்றிக் கொள்ளாத பண்பினைப் பெறச் சமுதாயத்தில் 'காதல் பாடல்கள்' உதவியுள்ளன.

ஒப்பாரிப் பாடல்கள் தங்களுடைய மனத்துக்கத்தினை வெளிப்படுத்தப் பாடப்பட்டவை. ஒருவருடைய துக்கத்தினைக் குறைக்க மற்றவர் பாடவும் செய்கின்றனர். இவை அவலச் சுவை நிறைந்தவை. பாடுவோருக்கு ஏற்பப் பாடல்கள் மாற்றம் பெறும். ஒருவரின் வீட்டுத் திருமணம் போன்ற மகிழ்ச்சியான நிகழ்ச்சிகளில் அவர் அழைக்காமல் ஒருவர் பங்கேற்பதில்லை. ஆனால் துக்க நிகழ்ச்சிகளில் (இறப்பு போன்று) அழைக்காமலேயே பங்கு கொள்ளும் பண்பு சமுதாயத்தில் ஊறித் திளைத்ததாகும்.

## 2.9.2 பழமொழிகள் மற்றும் விடுகதைகள்

பழமொழிகளும் விடுகதைகளும் அளவில் சிறியனவாக இருப்பினும், பொன் மொழிகளாக விளங்கத் தக்கன. ஓரடி ஈரடியிலேயே பல பொருள்களை விளக்கும் ஆற்றல் பெற்றவை அவை. நாட்டுப்புற மக்களின் வாழ்வில் அன்றாடம் பயன்படுத்தப்பட்டு வருவன. பழமொழிகளிலும், விடுகதைகளிலும் அறிவியல், சமுதாய பண்பாட்டுச் சிந்தனைகள் விரவிக் கிடக்கின்ற நிலையினை நாம் காண முடிகிறது.

'கடுகு சிறுத்தாலும் காரம் போகாது' என்ற பழமொழியின் மூலம் சிறிய வார்த்தைகளைப் பேசினாலும்

அவை மனதில் பதிந்து பாதிப்பை ஏற்படுத்தும் அள விற்கு அமையும் என்பதே இதன் பொருளாகும்.

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை'

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'

'பாம்பின் கால் பாம்பறியும்'

'தினை விதைத்தவன் தினையறுப்பான்
வினை விதைத்தவன் வினை அறுப்பான்'

போன்ற பழமொழிகள் மனித வாழ்வில் அன்றாடம் பழக்கத்தில் இருந்து வரும் பழமொழிகளாகும். பழமொழி களில் சில காலத்திற்கேற்பவும் நிகழ்ச்சிகளுக்கேற்பவும் திரிந்து அவற்றின் உண்மைப்பொருள் மறைந்து வரு கின்ற சூழல் இன்று காணப்படுகிறது. இதற்குக் காரணம் வேறொரு சூழ்நிலைக்கும் அதே பழமொழி பொருந்தி வரும்பொழுது அதனையே அதிகமாக மக்கள் பயன்படுத்தும் நிலை காணப்படுவதேயாகும். எடுத்துக்காட்டாக,

'நாயைக் கண்டால் கல்லைக் காணோம்
கல்லைக் கண்டால் நாயைக் காணோம்'

என்னும் பழமொழியின் உண்மைப் பொருள் நாயின் சிலை வடிவம் செதுக்கப்பட்டுள்ள கல்லினைக் கல்லாகக் கண்டால் நாய் உருவத்தினைப் பார்க்க முடியாது. நாய் நிற்பது போல் நினைத்தால் அக்காட்சி உண்மை யாகி ஒருவரால் கல்லைக் காணமுடியாது என்பதே.

இவ்வுண்மைப் பொருள் திரிந்து ''ஒன்று இருந்தால் மற்றொன்று இருப்பதில்லை'' என்ற யதார்த்த நிலையினைச் சுட்டுவதாகவே நாம் இன்று நினைக்கிறோம். இதுபோன்றே,

'பந்திக்கு முந்து படைக்குப் பிந்து'

என்னும் பழமொழியிலும் உண்மைப் பொருள் மறைந்தே வழங்கி வரும் நிலை காணப்படுகிறது.

'தாயைப் போல பிள்ளை
நூலைப் போல சேலை'

என்ற பழமொழியின் மூலமாகத் தாயைப் போன்று தான் பிள்ளையும் இருக்கும். தாய் நற்குணமுடையவளாக இருப்பின் பிள்ளைக்கும் அந்நற்குணங்கள் பொருந்தி வரும் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

'தாயைத் தண்ணித் துறையில் பார்த்தால்
மகளை வீட்டில் பார்க்கத் தேவையில்லை'

என்ற பழமொழியில் தாய் நீர் எடுக்கச் செல்லும் போது எவ்வளவு அடக்கமாக இருக்கிறாளோ அந்த அளவுக்குத்தான் தன் மகளையும் வளர்த்திருப்பாள். அவ்வாறன்றி தாயானவள் அடக்கமின்றி எல்லோரிடமும் சண்டை போடக் கூடியவளாக, யாரையும் மதிக்கத் தெரியாதவளாக இருந்தால் அவளுடைய மகளுக்கும் அதே குணம் தான் இருக்கும் என்ற கருத்து சொல்லப்படுகிறது. இதுபோன்ற பழமொழிகள் பிற நாடுகளி

லும் பொருள் மாற்றம் ஏதுமின்றி வழங்கி வருகின்றன என்பதை அறிய முடிகிறது. இதுபோன்ற பழமொழிப் பயன்பாடு சமுதாயத்தோடு ஒட்டியதாகவே அமைந்துள்ளது. சமுதாயத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கேற்ப மக்கள் வாயில் பழமொழிகள் தவழ்ந்து வருகின்றன.

'அஞ்சு பெண் பிறந்தால் அரசனும்
ஆண்டியாவான்'

என்ற பழமொழியின் மூலம் தற்காலத்தில் பெண்களுக்கு அதிக சீர் வரிசை செய்ய முடியாது. ஒருவன் அவ்வாறு செய்தால் தன் பொருள் அனைத்தும் இழந்து பிச்சை எடுக்கும் நிலைக்கு வந்து விடுவான் என்ற பொருளே உணர்த்தப்படுகிறது. சமுதாயத்தோடு சில பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், பின்னிப் பிணைந்த நிலையினையும் இதன் மூலம் நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது. ஆண்பிள்ளை வேண்டும் என எதிர்பார்த்து பெண் குழந்தைகளே பிறந்த போதிலும், மகன் வேண்டும் என்ற எதிர்பார்ப்பிற்காகவே இப்பழமொழி அக்காலத்தில் தோன்றியிருக்க வேண்டும்.

'பெண் புத்தி பின் புத்தி'

என்ற பழமொழி பெண்கள் ஆண்களை விடத் தாழ்ந்தவர்கள், அவர்களால் ஆண்களைப் போல் தெளிவாகச் சிந்திக்க முடியாது என்ற காரணம் பற்றியே ஏற்பட்டது என்றும் பழங்காலச் சமுதாயச் சூழலை ஒட்டியே ஏற்பட்டது என்றும் கூறலாம்.

'பருவத்தே பயிர் செய்'

என்ற பழமொழி தற்போது சிறு பருவத்திலேயே நல்ல படிப்பறிவினைக் கொடுக்க வேண்டும், அந்தந்த நிகழ்ச்

சிகள் காலத்திற்கேற்பவும் வயதிற்கேற்பவும் நடக்க வேண்டும் என்ற பொருளில் இன்றும் வழங்கி வருகிறது. இப்பொருளும் சமுதாய மாற்றத்திற்கேற்பவும் சூழலுக்கேற்பவும் தற்போது மாறியே வருவதைக் காணமுடிகிறது.

## 2.9.3 விடுகதைகள்

நகர்ப்புற மக்களுக்குக் கிடைக்கும் அளவிற்குக் கல்வி வசதி கிடைக்கப் பெறாத நாட்டுப்புற மக்கள் பெற்றுள்ள அறிவு வளர்ச்சியினை அவர்தம் விடுகதைகளைக் கேட்கும்போது ஓரளவிற்கு நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது. விடுகதைகள் பெரும்பாலும் பெண்களாலேயே கூறப்படுகின்றன. ஆண்கள் வேலையாக வெளியில் சென்றபின் பெண்கள் ஒன்று சேர்ந்திருக்கும் சூழலில் அவர்களாகவே விடுகதைகளைக் கூறி அவற்றை விடுவித்துத் தங்கள் அறிவினை வளர்த்துக்கொள்ளும் பழக்கத்தைக் காணலாம். இத்தகைய விடுகதைகள் நாட்டுப்புறங்களிலேயே அதிகமாகக் காணப்படுகின்றன. இவர்களுக்கு அக்காலத்திலும் சில இடங்களில் தற்போதும் பரவல் செய்தித் தொடர்பு சாதனங்கள் எட்டாத நாட்டுப்புறங்களில் பொழுதுபோக்கிற்கு இவ்விடுகதைகளே பயன்பட்டன—பயன்படுகின்றன என்று குறிப்பிடவேண்டும்.

தற்போது சிறுவர் சிறுமியரின் அறிவு வளர்ச்சி என்ற சமுதாயப் பணியினை முன் வைத்து வானொலியில் ஒலிபரப்பியும், இதழ்களில் இவற்றை வெளியிட்டும், திரைப்படங்களில் அறிமுகப்படுத்தியும் விடைகளை அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளும் முயற்சிகள் மூலமாக விடுகதைகள் என்ற இலக்கிய வடிவம்

தமிழில் ஓரளவிற்கு வளர்ந்து வருவதைப் பார்க்க முடி கிறது. எடுத்துக்காட்டாக,

'ஆழக்குழி தோண்டி
அதிலொரு முட்டையிட்டு
அண்ணாந்து பார்த்தால்
தொண்ணூறு முட்டை—அது என்ன?'

என்ற பழமொழி தென்னை மரத்தினைக் குறிக்கும். இதுபோன்றே,

'வந்தால் வரவில்லை
வராவிட்டால் வந்திருப்பேன்' 33

என்ற விடுகதையினைப் பெண்களுக்கு மட்டும் புரியும் மறைபொருளாகக் கூறி அதனைத் திரைப்படங் களிலும் அறிமுகப்படுத்தியுள்ளனர். இதுபோன்று குறிப்பால் உணர்த்த வேண்டிய சில செய்திகளைத் தங்களுக்குள் பரிமாறிக் கொள்ளும் பணியினைச் சமு தாயத்தில் நிறைவேற்றிக்கொள்ள விடுகதைகள் இன் றும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

நமது நாட்டுப்புற விடுகதைகளைப் போன்றே அயல் நாடுகளிலும் விடுகதைகள் அமைந்திருப்பதைக் காணலாம். இதனை இன்று சமுதாயத்தோடு இணைந்த வளர்ச்சியாகவும் அறிவுச் சோதனைகளா கவும் எல்லா இடங்களிலும் அமைந்திருக்கக் காண்கி றோம். சமூகத்தின் அறிவு வளர்ச்சிக்கும்; சிந்தனை விருத்திக்கும் பயன்படக்கூடிய வகையில் இவ்விடுகதை கள் அமைந்து வருகின்றன என்றால் அது மிகை யாகாது. இன்று 'quiz' என்ற தலைப்பில் நிகழ்ச்

சிகள், போட்டிகள் நடைபெறுவது இந்த அடிப்படை யிலேயே எனலாம்.

## 2.9.4 நாட்டுப்புறக் கலைகள்

மக்களின் ஓய்வு நேரங்களிலும் திருவிழாக் காலங் களிலும் இக்கலைகள் வளர்க்கப்படுகின்றன-நிகழ்த்தப் படுகின்றன. பெரும்பாலும் நாட்டுப்புறக் க்லைகள் எல்லாம் ஆண்களாலேயே நடத்தப்படுகின்றன. கூத்துக்கள், பொம்மலாட்டம், தோல் பாவைக்கூத்து போன்றவை கெட்ட ஆவிகளிடமிருந்தும் தீயசக்திகளிட மிருந்தும் மக்களைக் காப்பாற்றும் குணப்படுத்தும் சக்திகளாக நம்பப்பட்டு வந்துள்ளன. வுதி அரசனின் ஆசை நாயகி இறந்தவுடன் அரசனின் துக்கத்தைத் தெளிவிக்க உயிரூட்டப்பட்ட பாவைகளைத் திரைக் குப்பின் இருத்திப் பேச்விட்டனர். இதன் விளைவாகப் பழங்குடி மக்கள் பாவைகளை உயிருள்ளவையாகக் கருதி நோய் நீக்கும், வஞ்சம் தீர்க்கும் சக்திகளாகக் கருதி அவைகளுக்குப் பூசை போடும் சடங்குகள், உயிரூட்டும் சடங்குகள் போன்றவற்றை நடத்தி வந்தனர். இன்றும் தென்மாநிலங்களிலும், ஒரிசாவிலும் சிறு தெய்வ வழிபாட்டுடன் சம்பந்தப்படுத்தி இவை நடத்தப்படுகின்றன. தங்கள் மன உணர்ச்சிகளை, ஆற்றாமைகளை வெளிப்படுத்தவும் பிறருக்கு அறிவுறுத் தவும் இப்பாவைக்கூத்து, கணியான் கூத்து போன்ற நிகழ்ச்சிகள் இன்றும் நடத்தப்படுகின்றன. இவற்றை மனித இனத்தின் பிரதிபலிப்பாகக் கருதலாம்.

மக்களின் நடையுடை பாவனைகள், நம்பிக் கைகள், பழக்கவழக்கங்கள் இவற்றின் வெளிப்பாடு களே நாட்டுப்புறக் கலைகள் எனப்படுபவை. இக்

கலைகளில் செவிப்புலன், கட்புலன் என்ற இருவகைக் கும் உணர்ச்சிகளுக்கும் ஏற்ப உடலசைவும், இசைக் கருவிகளும் இணைகின்றன. கணியான் கூத்தில் இறைவனுடைய பலத்தையும், அவர் கொடுக்கும் வரத்தின் பயனையும் அவரே அனுபவிக்க நேரிடினும் அதன் நன்மை தீமைகளை அவராலேயே மாற்ற முடியாது என்ற படிப்பினையானது சமூகத்திற்கு உணர்த்தப்படுவதாக அமைந்துள்ளது. இக்கூத்தில் வரும் உரைநடைப் பகுதி சாதாரண பேச்சு மொழி யாக மக்களுக்கு எளிமையாகப் புரியும் தன்மையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

எடுத்துக்காட்டாக,

''கடைந்தெடுத்த சிமிழியிலே
விருப்பமுடன் கடைந்தெடுத்த
இன்பமுடன் கடைந்தெடுத்த
சிமிழி நல்ல சிமிழியில்
அதிலிரண்டு சிற்றெறும்பை
ஆணும் பெண்ணுமாகப் பிடித்தெடுத்து
சிற்றெறும்பை பிடித்தெடுத்தாள்
சேலை முந்தியிலே முடிந்தாள்''

(மகுடம் + பின்பாட்டு)

என்ற பாடலில் மக்களின் அன்றாடப் பேச்சு வழக்கு வழங்கப்படுவதையும் அதிலுள்ள பொருள் எளிமை யினையும் புரிந்துகொள்ள முடிகிறது. நாட்டுப்புற மக்களிடையே அமைந்துள்ள சிறு தெய்வ வழிபாட்டு முறைகளுக்குச் சமூக அங்கீகாரம் கிடைத்ததன் அடிப் படையிலேயே இக்கூத்துக்கள் நடத்தப்பட்டு வரு கின்றன. பல கூத்துக்கள் தமிழரின் வாழ்க்கை

விளக்கமாகத் தோன்றி அவர்தம் வாழ்வோடு இணைந்து நிற்கும் நிலையினைக் காணலாம். நிலத்திற்கேற்ப பொழுதுபோக்கு, வழிபாடு போன்ற பல நிலைகளிலும் குரவைக் கூத்துக்கள் அன்று நடைபெற்று வந்துள்ளன. இக் குரவைக் கூத்துக்கள் போர் புரிதலும், வாகை சூடலும் போன்ற கூட்டு மனப்பான்மையை வளர்க்க வல்லவையாக இருந்ததால் சமுதாய வாழ்விற்கு இன்றியமையாததாகக் கருதப்பட்டு வந்தன.

கூத்துக்களைப் பார்ப்பதனாலும் கூத்துக்களில் பங்கு பெறுவதனாலும் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்ளமுடியும் என்று நாட்டுப்புற மக்கள் நம்பியதன் காரணமாக இறைதொடர்பான கதைகளையே கூத்துக்களாக நிகழ்த்தி வந்தனர். கூத்துக்கதைகளை உண்மை என்று எண்ணி அவற்றிலுள்ள படிப்பினையை ஏற்று அதன்வழி நடப்பதும் சமுதாயத்தில் இன்றியமையாத ஒரு பண்பாக இவர்கள் கருதி அதன் வழி நடந்தனர். கூத்து நேரத்தில் தெய்வ வேடம் ஏற்று நடிப்பவர்களை உண்மையில் தெய்வங்களாகவே நம்பினர். மேலும் பாஞ்சாலி துகிலுரியப்படும் இடத்தில் பெண்கள் உணர்ச்சி வசப்பட்டுக் கண்கலங்குவர். கூத்தில் பாத்திரங்கள் அடையும் துன்பத்தைக் கண்டு பாவங்கள் செய்யத் தயங்குவர். இப்பாடல்களைக் கேட்பதில் இன்பம் பெறுவதால் இதனைத் திரும்பத் திரும்ப பாடவும் கூத்துக்களைப் பல்முறை பார்க்கவும் நாட்டுப்புற மக்கள் விரும்பினர். இன்றும் இப்பழக்கம் இருந்து வருகிறது. இவையெல்லாம் சமுதாயத்தில் கூத்துக்களால் ஏற்படும் நன்மை அளிக்கும் மாற்றங்கள் எனலாம்.

கரகாட்டம்,பொய்க்குதிரை போன்ற ஆட்டங்கள் மாசி, பங்குனி, சித்திரை போன்ற கோடை மாதங்களில்

மாரியம்மன் விழாக்களின் போது கோயில் வளாகத்தில் அதுவும் குறிப்பாக இரவு நேரங்களில் நடைபெறு வனவாகும். கோடையில் நோய்கள் தோன்றுவதால் மக்கள் தங்கள் உள்ளங்களுக்குச் சிறிது சாந்தி அளிப் பதற்காக இத்தகைய விழாக்களை மேற்கொண்டு வருகின்றனர். மேலும் இவ்விழாக்களை எடுத்தால் மழைபொழியும் என்ற நம்பிக்கையுள்ளவர்களாயும் இருக்கின்றனர். உக்கிரக தெய்வங்கள் மனம் மகிழும் என்ற நம்பிக்கையும் இதற்கு ஒரு காரணமாகும்.

அறுவடை முடிந்த காலங்களில் தங்கள் நன்றி யைத் தெய்வங்களுக்குத் தெரிவிக்கவும் மாரியம்மன் விழாக்களை எடுக்கின்றனர். மாரியம்மன் கோயில்விழாக் களில் மட்டுமே கரக ஆட்டம், பொய்க்குதிரையாட்டம் போன்றவை இன்றியமையாத ஆட்டங்களாகக் கருதப் படுகின்றன. இக் கரகங்கள் சக்திக்கரகம், ஆட்டக் கரகம், தோண்டிக்கரகம், செம்புக்கரகம் என்று பல வகைப்படும். சிலஇடங்களில் பெண்களும் பலஇடங்களில் ஆண்கள் பெண் வேடமிட்டும் ஆடுவர். கரகத்தையும் பொய்க்கால் குதிரை ஆட்டத்தினையும் மக்கள் தெய்வக் கூத்தாகவே போற்றி வந்தாலும் சமுதாய மதிப்புப் பெற்ற கலைகளாக இவை கருதப்பட்டதாலும் கோயில் விழாக்களில் மட்டுமே இவ்வாட்டாங்கள் நடைபெற்றன. தற்காலச் சமுதாய மாற்றங்களுக்குகேற்ப இவ் வாட்டங்கள் இன்று பல இடங்களிலும். பல விழாக் களிலும் நடத்தப்பட்டு வருகின்றன.

சக்திக்கரகம் எடுப்பவர்களுக்கு அம்மன் அருள் வந்து ஆடுவதால் மாலை மரியாதை செய்வர். மேற் கூறிய பல நாட்டுப்புறக் கலைகளும் நாட்டுப்புற மக்க-ளின் வாழ்வியலோடு ஏதாவது ஒரு வகையில் பின்னிப் பிணைந்து சமுதாயத்தை நல்வழிப்படுத்தும் பணியி-

னைச் செய்கின்றன அல்லது செய்வதற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளன என்பது தெரியவருகிறது.

## 2.9.5 நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள், பழக்க-வழக்கங்கள், சடங்குகள்

மனத்தாலும் மொழியாலும் மாறுபட்ட மக்கள் தங்களது நம்பிக்கைகள் பழக்க வழக்கங்கள் போன்ற வற்றின் மூலமாக ஒன்றிய நிலையினை நம்மால் காணமுடிகிறது. சமுதாயத்தில் ஏற்படும் சீர்கேடுகள் சில நம்பிக்கைகளினாலும் பழக்க வழக்கங்களினாலும் திருத்தியமைக்கப்பட்டு நல்வழிப்படுவதனையும், அத னால் மக்கள் சடங்குகளில் நம்பிக்கை வைப்பதனை யும் நாம் காணலாம். இந்நம்பிக்கைகள், பழக்க வழக் கங்கள், சடங்குகள் என்ற அனைத்தும் குடும்ப வாழ்க் கையினைச் சார்ந்தே அமைந்திருப்பதனைக் காண் கிறோம்.

நாட்டுப்புற மக்கள் பிள்ளைப்பேற்றினைப் பெரும் பேறாகக் கருதுவர். பிள்ளையில்லாதவர்களை மிகவும் பாவம் செய்தவர்களாகக் கருதி ஒதுக்கும் நிலையும், பிள்ளைப் பேற்றிற்காகப் பெண்கள் எல்லா விதச் சடங்கு, வழிபாடு முதலியனவற்றைச் செய்யத் துணியும் நிலையும் சமுதாயத்தில் காணப்படுகிறது. பிள்ளையில்லாதவர்கள் கோயில்களில் நேர்ந்து கொண்டு பிள்ளை பிறந்தபின் நேர்த்திக்கடனைக் கழிக்கின்றனர். கோயில் மரங்களில் தொட்டில் கட்டி யும், அரசமரத்தைச் சுற்றியும் பிள்ளைப் பேற்றினை வேண்டும் நிலை காணப்படுகிறது. அறிவியல் ரீதியில் அரசமரம் சுற்றிய சிலர் பிள்ளைப் பேற்றினை அடைந் தாலும், கடவுளின் அனுகிரகத்தாலேயே இத்தகைய பேற்றினைத் தாங்கள் பெற்றதாக நம்புகின்றனர்.

பிறந்த பிள்ளைக்குத் திருஷ்டி சுற்றுவதால் கண்ணேறுபடாமல் இருக்கும் என்ற நம்பிக்கை ஆழமாக வேரோடியிருக்கிறது. பல காரணங்களாலும் குணம் அடையாத நோய்களும் தோஷங்களும் திருஷ்டி சுற்றுவதாலும், சீட்டு எழுதிக் கட்டுவதாலும் குணம் ஆகும் நிலையையும் நாம் காண்கிறோம்.

'மாலை சுற்றிப் பிள்ளை பிறந்தால்
மாமனுக்கு ஆகாது'

என்ற நம்பிக்கையினைக் கொண்டு அதற்குப் பரிகாரம் தேடுகின்ற பழக்கங்கள் நாட்டுப்புறத்தில் இன்றும் காணப்படுகின்றன.

அழகாக இருக்கும் குழந்தைக்குக் கண்ணேறுபடும் என்பதனால் அதற்குக் கன்னத்தில் கருப்புமையிடுவதும், உப்பையும் மிளகாயையும் அதன் தலையைச் சுற்றி திருஷ்டி கழிப்பதும் இன்றும் நாம் காணுகின்ற பழக்கங்களாகும். கண்படாமல் இருக்க வீட்டிற்குப் பூசனிக்காய் கட்டியிருப்பதையும் நன்கு விளைந்த நிலங்களில் வைக்கோல் மற்றும் பழைய துணியினால் மனித உருவம் செய்து நிறுத்துவதையும் காணமுடிகிறது. நன்கு விளைந்த நிலத்திற்குக் காகம் வராமல் தடுக்கும் முயற்சியே இச் செயல் என்றாலும், இது கண் திருஷ்டியை நீக்கும் என்பது நம்பிக்கை.

சுற்றிப்போட்டதைத் தெரியாமல் தாண்டி விட்டால் வரும் உடற் கேட்டினை நீக்க மந்திரித்தால் குணமாகும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது. தங்கள் மனத்தில் ஒன்றினை நினைத்தால் அது நடக்குமா

நடக்காதா என்பதற்குக் கோயிலில் பூக்கட்டிப் பார்க்கும் பழக்கமும் காணப்படுகிறது. சிலர் திருமணம் செய்யவும் பூக்கட்டிப் பார்க்கின்றனர். குழந்தைகள் இல்லாதவர் களும் கணவன் இறந்தோரும் எந்தவித மங்கலச் சடங்கு களிலும் பங்கு பெற விடாத சமூக அமைப்பினைக் கொண்டது நாட்டுப்புறம். மேலும், ஆண்பிள்ளைகளே கொள்ளி வைக்கவேண்டும் என்ற பழக்கம் காலங் காலமாக நாட்டுமக்களிடம் ஊறியபண்பாக இருக்கிறது.

இது போன்றே சகுனங்களை நன்மையாகவும் தீமையாகவும் கருதும் பண்பும் மக்களிடையே இருந்து வருகிறது. பிரயாணம் தொடங்கும்போது கால் இடறினால், கைம்பெண் எதிரில் வந்தால், எண்ணெய் வண்டி வந்தால் கெட்ட சகுனம் என்பர். நிறைகுடமும் அழுக்குத் துணிகளுடன் வண்ணானும் வந்தால் நலம் என்பர். ஒரு காகம் கரைந்தால் விருந்து வரும் என்ப தும் பல காகங்கள் கரைந்தால் சாவு நிகழும் என்பதும் நம்பிக்கையாகும். 'பூனை குறுக்கே சென்றால் ஆகாது' என்ற சகுனத்தையும் நம்புவவர் கிராமமக்கள். இது போன்ற சகுனத்தடைகள் ஏற்படின் வெளியில் புறப் பட்டவர் திரும்பவும் வீடு வந்து தண்ணீர் அருந்திச் சிறிது நேரம் வீட்டில் இருந்து சர்க்கரை சாப்பிட்டுச் செல்வதைப் பரிகாரமாகக் கருதினர். பல்லி விழுவதற் குப் பலன் பார்க்கும் பழக்கமும், தாம் செல்லும் திசைக்கு வார சூலை பார்ப்பதும், அப்படியிருந்தால் அதற்கு வெல்லம் சாப்பிடுவதையும் பரிகாரமாக நினைத்தனர் மக்கள்.

அழகான குழந்தையாக இருந்தால் குழந் தைக்குத் தீங்கு நேரும் என்றும், அதற்குப் பரிகாரமாகக்

காது குத்துதலையும் பெண் குழந்தைக்குக் காது குத்து வதோடு மூக்கு குத்துதலையும் வழக்கமாகக் கொண் டுள்ளனர் இம்மக்கள். மேலும் குழந்தைகள் பிறந்து பிறந்து இறந்துவிடும் நிலையில் பிறந்த குழந்தையை வேறொருவரிடம் கொடுத்துத் தவிட்டிற்கு வாங்குத லும், பிச்சை, குப்பை குப்பு, குப்புசாமி என்று பெயரிடு வதாக நேர்ந்து கொண்டு அவ்வாறு பெயரிட்டு நேர்த் திக்கடன் செலுத்துதலும் வழக்கமாக இருந்து வருகிறது.

மேற் குறிப்பிட்ட நாட்டுப்புற இலக்கியங்கள், நாட்டுப்புறக் கலைகள், நாட்டுப்புற மக்களின் நம்பிக் கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவை எல்லாம் ஏதாவது ஒரு வகையில் சமுதாயத்திற்குப் பயன்படும்வகையில் அமைந்தே வந்துள்ளன-அமைந் தும் வருகின்றன. இவற்றை மக்கள் தங்களது சமூக அமைப்பிற்கேற்றவாறு, தங்கள் வாழ்வியல் மாற்றங் களுக்கு ஏற்றவாறு நம்புகின்றனர் - பின்பற்றி வருகின்றனர்.

இவர்கள் ஏதாவது ஒரு வகையில் மேற்கொண்ட நம்பிக்கையின் காரணமாக அதையே கடைபிடிக் கின்றனர். மேலும் சில நிகழ்ச்சிகள் இவர்கள் நம்பிக் கைக்கு ஏற்றவாறு நடந்து விடுகின்றன, அல்லது அமைந்து வருகின்றன எனலாம். எனவே இவர்கள் சமு தாய முக்கியத்துவங்களையும் சமுதாயப் பணிகளையும் இன்றைய வாழ்வியல் நிலைக்கு ஏற்ப மாற்றிக் கொள் ளவும் செய்கின்றனர். ஆயினும் இந்த நாட்டுப்புறக் கலைகளும், இலக்கியங்களும் ஏதாவது ஒருவகையில் சமுதாயத்தோடு பின்னிப் பிணைந்து மக்களது வாழ் வியல்நிகழ்ச்சிகளோடு இரண்டறக்கலந்து சமுதாயத்தில் இன்றியமையாதவையாக அமைந்து வருவது கண் கூடு.

## 2.10. நாட்டுப் புறவியலின் சிறப்புக் கூறுகள்

மக்களிடையே காணப்படும் கலாச்சாரங்கள், அவர்களிடையே வழங்கிவரும் இலக்கியங்கள், கலைகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் போன்ற பல்வேறு கூறுகளைப்பற்றி ஆராயும் அறிவியல் நாட்டுப்புறவியல் எனப்படுகிறது. தமிழர் பண்பாட்டு, வரலாற்று மற்றும் சமுதாய நிலைபற்றி அறிய, ஆராய இவ்வியல் துணை புரிகின்றது. மேலும் இவ்வியல் புராணவியல் கூறுகள், இலக்கியக் கூறுகள், பொதுமைக் கூறுகள், கருத்தமைப்பு ஒற்றுமைக் கூறுகள் முதலியனவற்றை விளக்கும் வகையில் ஆய்வுகள் தனித்தனியாக வளரத் துணைபுரிகிறது. நாட்டுப்புறவியல் பழமையானதாக இருப்பினும் "நாட்டுப்புறவியல்" என்னும் சொல் வெகு அண்மையிலேயே அறிந்து கொள்ளப்பட்டது. இங்கு நாட்டுப்புறவியல் என்பது நாட்டுப்புற இலக்கியங்கள் கலைகள் போன்றவற்றைப்பற்றிய செய்திகளைக் குறிக்கும்.

மக்களின் பண்பாட்டினையும், வாழ்வியல் அமைப்பினையும் எளிய அமைப்புடன், இசையுடன் பாடல்களாகப் பாடுகின்றனர். இவை காலத்திற்கேற்ப, பொருளுக்கேற்ப, இடத்திற்கேற்ப வாழ்வியல் நிகழ்ச்சிகளுக்கேற்ப, சூழல்களுக்கேற்ப மாறுபட்டு வழங்கும் தன்மை கொண்டவை. பலராலும் பல இடங்களிலும் சூழலுக்கேற்ப மாற்றிக் கொள்ளப்படுகின்ற சிறப்பினைப் பெற்றவை. நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புற மக்களின் இயல்புகள், உணர்வுகள், எண்ணங்கள், கற்பனை, கவிதை புனையும் ஆற்றல் போன்றவற்றைக் கண்ணாடி போல் வெளிப்படுத்தும் தன்மை கொண்டவை. இவை ஏட்டில் இடம் பெறாவிடினும் சமுதாயத்

தில், மக்கள் மனதில் அழியாமல் பதிந்து விட்டவை. இவற்றின் சிறப்பினை உணர்ந்து தற்போது பலர் இவற்றைப் பற்றிய ஆய்வுகள் செய்தும் எழுத்தில் அச்சேற்றியும் வருகின்றனர். ஏட்டு இலக்கியங்களில் நாட்டுப் புறவியலின் தாக்கத்தால் நாட்டுப்புறப் பாடல்களின் கரு, இலக்கியங்களில் பல காலகட்டங்களில் பல நிலைகளில் இருந்து வந்தமையை ஆராய்ந்து அறிவுறுத்தியுள்ளனர் பலர். தொல்காப்பிய காலத்திலிருந்து பல்வேறு வகையான இலக்கிய நூல்களில் நாட்டுப் புற இலக்கிய வடிவங்கள் அமைந்திருப்பதையும் அவற்றின் பெயர்கள் மாறி வழங்கி வந்த நிலையினையும் எடுத்துக் கூறியுள்ளனர். எனவே, தொல்காப்பிய காலத்திற்கும் முற்பட்ட காலச் சிறப்பினைக் கொண்டது எனவும் மனித இனம் தோன்றி வளர்ந்த போதே வளர்ந்தது எனவும் கருதலாம். இத்தகைய நாட்டுப்புறவியலில் நாட்டுப்புற இலக்கியங்களுக்கு ஐந்து முக்கியமான பண்புகள், சிறப்பியல்புகள் இருப்பதாக ஜான் ஹெரால்டு குறிப்பிடுகிறார்.[34]

அவையாவன :

1. நாட்டுப்புற இலக்கியங்கள் எனப்படுவது வாய்மொழியாகப் (orality) பரவுவது. அதாவது மக்களிடையே ஒருவர் வாய்மொழியாகப் பாடுவதைக் கேட்டு பலர் பல இடங்களில் சூழ்நிலைக்குத் தக்கவாறும் நிகழ்ச்சிகளுக்குத் தக்கவாறும் பாடப்படும் சிறப்புடையது.

2. மரபு வழிப்பட்டது (traditional). வழிவழியாக மக்களால் மரபு வழியில் பாடப்படுவது.

3. பல்வேறு வகையாகத் திரிந்து வழங்குவது (different versions). தாங்கள் செவிவழிக்கேட்ட பாடல்களைப் பல இடங்களில் பல நிகழ்ச்சிகளில், சூழ்நிலைக்கு ஏற்ப பொருள் மாற்றம் செய்து கொள்வது.

4. ஆசிரியர் இல்லாமை (anonymous) - இப்பாடல் களை இயற்றிய ஆசிரியர் இவர்தான் என்று குறிப்பிட்டுப் பெயர் கூற முடியாமை.

5. ஒருவித் வாய்பாட்டுக்குள் (some kind of formulated structure) அடங்குவது. குறிப்பிட்ட யாப்பிற்குள் அடங்காவிடினும் நயத்துடனும் தாளத்திற் கேற்பவும் எளிமையாகவும் அமைந்திருப்பது.

மேற்கூறிய அம்சங்களோடு பின்வருவனவும் நாட்டுப்புற இலக்கியங்களின் சிறப்பியல்புகளாகக் கருதப்படும் :

1. நாட்டுப்புற இலக்கியங்களில் உள்ள எல்லா வகைகளும் மரபுவழி இலக்கியங்களில் விரிவாக விளக்கப் பட்டுள்ள தன்மை.

2. பாடலின் பாடு பொருளுக்கேற்ப, சூழ்நிலைக் கேற்ப பாடலின் அடிவரையறை குறைந்தும், அதிகரித்தும் காணப்படும் தன்மை.

3. பாடலின் பொருள் எளிமை, இசையினிமை போன்ற காரணங்களால் பாமர மக்களன்றி நகர்ப் புற மக்களையும் ஈர்க்கும் தன்மை.

4. அந்தந்த வயதிற்கேற்ற பாடல்களைப் பெற்றுள்ள சிறப்புத் தன்மை.

5. பாடலின் இசை கர்நாடக இசையோடு ஒத்துள்ள தன்மை.

6. பாடலின் பாடு பொருளைக் காலத்திற்கேற்ப மாற்றிக் கொள்ளும் தன்மை.

என்ற ஆறு காரணங்களும் நாட்டுப்புற இலக்கியங்களின் சிறப்பிற்கு இன்றியமையாத இயல்புகள் எனலாம்.

அமைப்பியல் அடிப்படையில் ஆராயும் போது, மரபிலக்கணத்தில் கூறப்பட்ட அந்தாதி, உருவகம், உவமை, எதுகை மோனை போன்ற பல பண்புகள் காணப்படும் தன்மை, நாட்டுப்புறப் பாடல்களில் சில அடிகள் திரும்பத் திரும்ப வருவதன் மூலம் சொல்ல நினைக்கும் செய்தியினை மக்கள் மனத்தில் வலிந்து பதிப்பிக்கும் நிலையோடு கேட்போர் பயனுறும் வகையில் புரிந்து கொள்ள எளிமையானதாக அமைந்துள்ள நிலை, கருத்துப் புலப்பாட்டில் வெளிப்படுத்தும் திறனை (communicative ability) அதிகரிக்கச் செய்யும் நிலை போன்றவையும் நாட்டுப்புறவியலின் சிறப்பியல்புகள் என்று கூறலாம். மக்கள் பேசும் மொழியில் அதாவது அவர்தம் பேச்சுமொழி வாயிலாகவே பெரும்பாலும் நாட்டுப்புற இலக்கியங்கள் அமைந்திருப்பதோடு அவற்றைக் கேட்போர், சொல்லப்படும் கருத்துக்கள் தங்களுக்காகவே சொல்லப்பட்டுள்ளன, தங்களுக்கே உரியன என்று எண்ணி அவற்றைப் பின்பற்றக் கூடிய சூழலை உருவாக்கத் துணைபுரிவதும் இதன் சிறப்பியல்பாகும். நாட்டுப்புற இலக்கியம் உயிரோடுள்ள ஒரு புதை வடிவம் என்றும் கொள்ளலாம். நாட்டுப்புறவியல் கூறுகள் ஒரு துறை அறிவைக் கொண்டு மட்டுமே விளக்கப்படுவதல்ல. இதன் விளக்கம் பல்துறை அறிவைச் சார்ந்தது. அதாவது இதனை multi disciplinary description and approach என்று சொல்லப்படும் அணுகு முறையைக் கொண்டு தெளிவாக்குவதும் நிறைவேற்றுவதும் இதனியல்புகளில் ஒன்றாகும்.

## நாட்டுப்புறப் பாடல்கள்

தாலாட்டுப் பாடல்களின் அமைப்பு முறைகளை ஆராயின் அவற்றில் குறிப்பிட்ட சொல்லமைப்புக்கள், பாடுவோரின் மன இயல்புக்கேற்ப (பொருளற்ற ஓசை யாக) திரும்பத் தி ரு ம் ப வருகின்ற அமைப்புக்கள் காணப்படுகின்றன.

எ. கா. ' ஆராரோ ஆராரோ ஆராரோ
ஆராரோ ஆரிராரோ '
' லுலுலாயி லுலுலாயி '

என்று பொருளற்ற ஓசைகளாக மட்டுமே ஓரடி விட்டு ஓரடியாக மிகச் சில பாடல்களிலும் நான்கடிக்கு ஒரு முறையாக வருகின்ற நிலை சில பாடல்களிலும் காணப்படுகின்றன.

எ. கா. '' ஆராரோ ஆரிராரோ
ஆறிரண்டும் காவேரி
ஆராரோ ஆரிராரோ
ஆரடிச்சு நீயழுதே ''

என்பன போன்று ஓரடி பொருளற்ற ஓசையும் மற்றஅடி பொருளோடு கூடிய தொடராகவும் மாறி வருவதனைக் காணலாம். சி ல பாடல்கள் வினா - விடையமைப்பில்

' யாரும் அடிக்கவில்லை ஐவிரலும் தீண்டவில்லை
பசித்திடவே நானழுதேன் பாசமுள்ள என் தாயே '

என்று பாடப்படுகின்றன. மேலும் குழந்தை களை விளிக்கும் முன்னிலைப் பெயர்களைக் கூறிப்

பாடல்களைப் பாடுகின்ற அமைப்பும் பாடல்களின் மர பாக அமைந்த நிலையினைப் பார்க்கலாம்.

எ. கா. ' தைப்பொங்கலு காலத்திலே-கண்ணே நீ
தயிருஞ்சோறு திங்கையிலே
மார்சிமார்சக் கடைசியிலே - கண்ணே நீ
மாமன் வீடு போகையிலே '

இப்பாடல்களைப் பாடும் பொழுது தாயின் மன நிலைக்கேற்ப அடிவரையறையின்றி பாடப்படுவதைக் காணலாம்.

பொருளடிப்படையில் பார்க்கும் போது பாடல்கள் பொருள் பொதிந்து காணப்படுவது தெரிகிறது. தாய்மார்கள் தாலாட்டுப் பாடல்களை வைத்தே உலகினைச் சுற்றி வந்து விடுகின்றனர் எனலாம். இப் பாடல்களில் குழந்தையின்றி தாய்பட்ட சிரமங்கள், செய்த அறங்கள், குழந்தையின் அழுகைக்குக் காரணம் வினவல், குழந்தையின் பெருமையோடு குலப்பெருமை பேசுதல், குழந்தையை வருணித்தல், குழந்தையின் எதிர்காலம் பற்றிய கனவு, குழந்தையின் விளையாட்டுப் பொருள்கள் பற்றிய வருணனை, உறவினர் பற்றிய செய்திகள் போன்றவை பேசப்படுகின்றன.

' கரிசல் காட்டுப் புழுதியிலே கண்ணே நான்
கதிரறுக்கப் போகையிலே '

என்ற பாடல் தாய் செய்யும் தொழில் பற்றிக் குறிப்பிடுகிறது.

பொருளடிப்படையில் பார்க்கும் போது பாடல்களில் சொல் நயங்கள் சிறப்பாக அமைந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது.

எ. கா. ‘ பால் மணக்கும் குற்றாலம்
பழம் மணக்கும் தென்காசி ’

மேலும் குழந்தையைச் சிறப்பித்தே பாடுவதன்றி ஏசியும் பாடுகின்ற தாலாட்டுக்கள் சிலவும் காணப்படுகின்றன.

‘ நச்சரவுபோல வந்த
நச்சிரய்யா கண்ணுறங்கு ’

என்ற பாடலும் வறுமையின் காரணமாகக் குழந்தைப் பிறப்பை விரும்பாது பாடுகின்ற

‘‘ ஏன் பிறந்தாய் மகனே ஏன் பிறந்தாயோ
இல்லை ஒரு பிள்ளையென்று ஏங்குவோர் பலரிருக்க
இங்கு வந்து ஏன் பிறந்தாய் செல்வ மகனே’’

என்று திரைப்படத்தில் பாடப்பட்ட நாட்டுப்புறப் பாடலும் புகழ் பெற்றுள்ளது. தாலாட்டுப் பாடல்களைப் பாடுவதற்குக் காலம் இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. சிறு குழந்தைகள் அழும்போது தொட்டிலில் இட்டு தாலாட்டுப்பாடி அதன் அழுகையை நிறுத்தவும், அதனைத் தூங்க வைக்கவும் பாடப்படுவன இப்பாடல்கள். தாலாட்டுப் பாடல்களைப் பெண்கள் மட்டுமே பாடுவர். குழந்தையின் அமைதிக்காகவும், தங்களின் இன்பதுன்ப வளர்ச்சிகளை வெளிப்படுத்தி அமைதியடையவும் குழந்தையின் மன வளர்ச்சி, தாயின் மன அமைதி போன்றவற்றைக் கருத்தில் கொண்டும் பொதுவாக இவை பாடப்படுகின்றன.

## தொழிற்பாடல்கள்

தொழிற்பாடல்கள் என்பன பொதுவாக செய்யும் தொழில் வேறுபாட்டிற்கேற்ப உழவுப் பாடல்கள், ஏற்றப்பாடல்கள், மீனவப் பாடல்கள், வண்டிக்காரன் அல்லது தெம்மாங்குப் பாடல்கள், பாரம் தூக்குவோர் பாடல்கள், சாலைபோடுவோர் பாடல்கள் என்று வகைப்படுத்தப்படுகின்றன. பொதுவான நாட்டுப் புறப்பாடல்களின் அமைப்பே இப்பாடல்களிலும் காணப்படுகின்றன. இப்பாடல்களிலும் இணைப்புச் சொற்களே அதிகமாகக் காணப்படுகின்றன. இவற்றில் வண்டிக்காரன் பாட்டினைத் தவிர மீதிப் பாடல்கள் எல்லாமே குழுவாகப் பாடப்பெறுபவையே. தெம்மாங்கு ஒன்று மட்டுமே தனியாகப் பாடும் பாடல். இதனையும் மீனவப் பாடல்களையும் ஆண்கள் மட்டுமே பாடுவர். மற்ற குழுப்பாடல்களை ஆண் - பெண் என்ற இரு சாரார்ரும் சேர்ந்தே பாடுவர். செய்யும் தொழிலுக்கேற்ப பாடும் பாடல்கள் அத்தொழிலின் பெயரைக் கொண்டு அமைகின்றன. எடுத்துக் காட்டாக மீனவப் பாடல்களில் வலை இழுப்போர் பாடல்கள் என்றும், தண்டு வலிப்போர் பாடல்கள் என்றும், தோணி தள்ளுவோர் பாடல்கள் என்றும் பாடல்கள் இடம் பெறுகின்றன.[35] இது போன்றே தெம்மாங்கில் வண்டியோட்டும் பாடல்கள் வண்டிக்காரன் பாடல்கள் என்றும், உழவுப் பாடல்களில் ஏர்ப் பாடல்கள், ஏற்றப் பாடல்கள், நாற்று நடவுப் பாடல்கள் என்றும் செய்யும் தொழில் பிரிவுகளுக்கேற்பப் பெயர் பெறுகின்றன. மீனவப் பாடல்கள் எல்லாம் அந்தாதி அமைப்பில் அமைந்திருப் பதைக் காணலாம். மேலும் 'ஏலேலோ' 'ஐலசா'

என்ற இணைப்பு ஒலிக்குறிப்புச் சொற்கள் இடையி டையே சொல்லப்படுகின்றன.

'ஆணியிருந்தால் பாய் கிளம்பும் - ஏலே
பாயிருந்தால் ஓடுந்தோணி - ஏலே''
'கொண்டல் கடுகி வர கொடுங்கடலில் பாயிழுக்க
பாயிழுக்க ஆருமில்லை பரிசெலுத்த யாருமில்லை'

போன்ற பாடல்களின் மூலம் அந்தாதி அமைப்பு நிலை எடுத்துக் காட்டப்படுகிறது.

பொருளடிப்படையில் பார்க்கும் போது கடின மான வேலை செய்யும் போது சிந்தித்துப் பாட முடியாத நிலையில் எளிமையான தொடர்களையே பயன்படுத் திப் பாடியுள்ளது தெரிய வருகிறது. கட்டுமரம், வேகம், தண்டு வலித்தல், வலை இழுத்தல், அலைகள், தோணி, காற்று என்று தங்கள் தொழில் சொற்க ளைச் சுற்றியே பாடலமைப்பு அமைந்துள்ள நிலை தெளிவாகிறது. இவர்கள் பாடல்களைப் பாடும் நேரம் அதிகாலை நேரமாகவும் கடலில் செல்லும் நேரமாகவும் இருக்கின்றது. கடலில் மீன் பிடித்துக் கொண்டு பொழுது விடியும் நேரம் கரைக்கு வந்து விடுவதால் பாடல்கள் எல்லாமே கடலிலேயே பாடப் படுகின்றன. மேலும் வேலைக்கேற்பப் பலர் சேர்ந்து பாடும் பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

உழவுப் பாடல்களும் பல வகையாகப் பிரிக்கப் பட்டு தொழிலுக்கேற்பப் பாடப்படுகின்றன. இவற்றில் ஒருவரையொருவர் கேலி செய்து கொள்ளும் முறை யிலும் வினா விடை முறையிலும் குழுவாகவும், எதிரா கவும் பாடல்கள் பாடப்படுகின்றன.

அந்தாதி, எதுகை மோனை அமைப்பிலும், இணைப்புச் சொற்களுடனும் பாடல்கள் பாடப்படு கின்றன.

'எப்போ மழை பெய்யும் குப்பம் பயிரேறும்
குப்பம் பயிரேறும் குடிகள் வந்து சேரும்'

என்று அந்தாதி வகையிலும்,

'பாடுபட்டுப் பாடுபட்டுப்
பண்ணையாரை உசத்திவிட்டு
மாடுபோல் உழைச்சுழைச்சு
மலையைப் போல் தொந்தி கொஞ்சம்
மேடுபட்டுப் போனதோடி - அக்காளே'

என்று எதுகை மோனை வகையிலும்,

'ஆசையிருக்கு தாசில் பண்ண
அதிர்ஷ்டம் இருக்கு கழுதை மேய்க்க
பேசி என்ன செய்வதடி - செங்கம்மா
பித்தம் ரொம்ப முத்துதடி' - என்ற

பாடலில் பழமொழிகள் உபயோகித்தும் பெயர் கூறி அழைத்தும் பாடல்கள் பாடும் அமைப்பு காணப் படுகிறது. இப்பாடல்கள் மழை வரம் வேண்டியும், பயிர்களின் நிலையைக் கூறியும், உழைப்பு பற்றியும், தன் காதலை எடுத்துக் கூறி அது நிறைவேறாது என்ற விரக்தி நிலையினையும் கூறும் பொருளமைப்புப் பாடல்களாகக் காணப்படுகின்றன. இப்பாடல்கள் பகல் நேரத்தில் அதாவது தத்தம் தொழிலினைச் செய் யும் நேரங்களில் பெண்களே தனித்தும் அல்லது ஆண் களே தனித்தும் அல்லது இருபாலாரும் சேர்ந்தும் தொழிலின் தன்மைக்கேற்றவாறு பாடிக்கொள்வர்.

இவற்றில் இசைக் கருவிகள் என்று எதையும் பயன் படுத்துவதில்லை. அவர்கள் உழும் ஏரும், நீரிறைக்கும் கவலையும் பாடல்களுக்கு ஏற்ற இசைக் கருவிகளாக அமைகின்றன. தங்களது வேலைப்பளுவை, துன்பத் தினை மறக்கவும், தங்கள் மகிழ்வைப் பிறருக்குத் தெரி யப்படுத்தவும் என்று பல நிலைகளில் பாடல்கள் பல் வேறு பிரிவினரால் பாடப்படுகின்றன. மீனவப் பாடல் கள் போலன்றி இவ்வுழவுப் பாடல்கள் சிறந்த சொல்ல மைப்பும், பொருளமைப்பும் கொண்டவை. உழவனின் எதிர்பார்ப்பு, ஏக்கம், அவனுடைய வாழ்க்கை நிலை போன்றவற்றை இப்பாடல்கள் மறைமுகமாக நமக்கு உணர்த்துகின்றன.

ஒப்பாரிப் பாடல்களின் அமைப்பில் அடிவரை யறை இல்லை. இதனைத் தனிப் பாடல் என்றே கூற லாம். துக்கத்தினையும், கஷ்டத்தினையும், அவர்கள் வளர்ந்த நிலையினையும் கொண்டு பாடல்கள் அமை யும். இவற்றிலும் இணைப்புச் சொற்கள் காணப்படு கின்றன. சில இடங்களில் பாடும்பொழுது இடையி டையே அழுகை ஒலியே இணைப்பாக அமையும்.

தாய் இறந்து விட்டால்

'தங்கத்தேர் கட்ட தாமசங்கள் ஆகுமின்னு
என்னைப் பெத்த அம்மா
தனித்தேர் கட்டி புறப்பட்டார் சீச்கிரமாய்'

என்று தங்களுக்குத் தோன்றும் வகையில் பாடல்கள் பாடப்படுகின்றன.

'ஆத்தங்கரை யோரம் - ஒரு
அன்னத்தை மேய விட்டேன்
அன்ன மென்று பார்க்காமே - ஒரு
அம்பு கொண்டு எய்தாங்க'

என்ற பாடல் தன் துணையை இழந்த நிலையில் வெளிப்படும் துக்கப் பாடலாகும். தொடர்கள் குறுகியும், இணைப்புச் சொற்கள் அதிகமாகவும் இருக்கும் இவற்றைப் பெண்கள் மட்டுமே பாடுவர். வினா விடை அமைப்பில் மாறிப் பாடுபவையாகவும் சில அமைந்திருக்கக் காண்கிறோம்.

எ. கா. 'பந்தலிலே பாவக்கா, பந்தலிலே பாவக்கா
போகையிலே பறிக்கலாம் போகையிலே
பறிக்கலாம்'

போன்றவை வினா விடையமைப்பில் அமைந்தவை எனலாம். இவை வாழ்க்கைப் பிடிப்பை இழந்த நிலையில் ஆற்றாமையால் பாடுகின்ற பாடல்களாகும்.

மேற்குறிப்பிட்ட பாடல் வகைகளில் எல்லாம் ஏதாவது ஒரு வகை இணைப்புச் சொற்கள் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்க அமைப்பு ஒற்றுமையாகும். மேலும் 'ஏலேலோ', 'ஐலசா', 'ஆரிராரோ', 'என் கண்ணே', 'என்னெப் பெத்த அம்மா' போன்ற கூறுகளும் சொற்களும் இப்பாடல்களுடன் இணைந்திருப்பது அவ்வப்பாடல்களின் உணர்ச்சிகளைக் காட்டவே என்றும் கூறலாம். பல்வேறு தொழில்களின் அடிப்படையில் இப்பாடல்கள் எல்லாமே தங்கள் துன்பங்களை மறக்கப் பாடப்பட்டபோதிலும், தொழிலின் தன்மைகளுக்கேற்ப, காலத்திற்கேற்ப, சிந்தனை ஓட்டங்கள், பொருள் மாறுபாடுகள் போன்றவை இவற்றில் காணப்படுகின்றன என்பதில் ஐயமில்லை.

## பழமொழிகள்

பழமொழிகள் எனப்படுபவை மிகக் குறைந்த சொற்கூறுகளைக் கொண்டமைந்தவை. ஒரு வரி, இரண்டு வரியிலேயே பெரும்பாலும் அமைந்திருக்கும். இச்சொற்கூறுகள் சேர்ந்து ஒரு தனி வடிவமே கிடைக்கின்றது. இதனைப் படைக்கின்ற மனித சமுதாயமும் பழமொழிகளைக் குறைந்த, குறிப்பிட்ட வடிவத்திலேயே அமைக்கின்றது என்று லெவிஸ்ட்ராஸ் என்னும் அறிஞர் குறிப்பிடுகிறார்.[36] பழமொழிகளைப் பற்றி விளக்க ஆலன் டண்டிஸ் என்பவர் அமைப்பியல் வரையறை கொடுக்கிறார். அதாவது 'குறைந்த பட்சம் ஒரு தலைப்பும் (topic) ஒரு முடிவுரையும் (comment) கொண்ட மரபு வழி உரைக் கூற்றே பழமொழி எனப்படும்' என்கிறார்.[37] இதற்கு எடுத்துக் காட்டாக வாழ்வில் நாம் அன்றாடம் பயன்படுத்தும் பழமொழிகளையே கூறலாம்.

எ. கா. 'பணம் பாதாளம் வரை பாயும்'
'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்'
'அழுத பிள்ளை பால் குடிக்கும்'
'காய்ந்த மரம் கல்லடிபடும்'

இப்பழமொழிகள் ஒரு தலைப்பினையும் ஒரு முடிவுரையையும் கொண்டதாகவே அமைந்திருக்கின்றன. நுண்ணிய வடிவில் பல விளக்கங்களையும் உள்ளடக்கியுள்ளன இவை.

'அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்'

என்ற பழமொழி சிறிது விளக்கமாகவும் வெளிப்படை யாகவும் புரிந்து கொள்ளுமாறும் அமைந்துள்ளது. பொருளமைப்பில்சில பழமொழிகள் இரட்டையாகக் காணப்படுகின்றன. இவற்றில் ஒன்றைக் கூறின் மற்றது கூறாமலே புரியும் நிலை தென்படுவதை,

> ' நல்ல மாட்டுக்கு ஒரு சூடு
> நல்ல மனிதனுக்கு ஒரு வார்த்தை '

என்ற பழமொழியின் மூலம் அறிந்து கொள்ளலாம். இப்பழமொழியின் முதலடியை எங்கு வேண்டுமாயி னும் பயன்படுத்தலாம். இரண்டாம் அடியைக் கூறாமலேயே இடத்திற்குத் தக்கவாறு சுட்டுபவருக்குத் தகுந்தாற்போல் பொருள் மாற்றம் பெற்று அது வழங்கும். பழமொழிகளில் ஒன்றுக்கொன்று சம்பந்த மின்றி முரண்பாடாக அமையும் நிலையும் காணப்படு கிறது.

எ. கா. ' வீதியிலே போற சனியனை விலை கொடுத்து வாங்கியது போல '

' ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூச் சர்க் கரை '

என்ற இப்பழமொழிகள் பொருளமைப்பில் ஒன்றை யொன்று முரண்படுத்திக் காட்டுவதால் இவற்றை முரணுடைய பழமொழிகள் என்பார் டண்டிஸ்.[38] மேலும் வினா அமைப்பிலும் பழமொழிகள் அமைந் திருக்கக் காணலாம்.

எ. கா. ' உயரஉயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா ? '

என்ற பழமொழியில் நேர் எதிர் முரண் அமைப்பும்

'கற்றவனுக்குக் கடுகளவு கல்லாதவனுக்கு
மலையளவு'

என்ற பழமொழியில் சமநிலைப் பண்பும் முரணமைப்பும் ஒன்றாக அமைந்த நிலையும் காணப்படுகிறது. அன்றாட வாழ்க்கையில் பல நிலைகளில் பழமொழிகளைக் கையாள வேண்டிய சூழல் உருவாகிறது. இவை கேட்பவருக்குப் புரியும் நிலையிலேயே ஆணாலோ பெண்ணாலோ கூறப்படுகின்றன. இவைகள் அன்றாட வாழ்க்கைச் சூழலை ஒட்டியதாகவே இருக்கும். பழமொழிகளினால் சிந்தனைத் தெளிவு ஏற்படும். பழமொழிகளைப் பல்வேறு சமுதாயத்தினர் பயன்படுத்துகின்றனர். ஒருவர் மற்றவருக்காகப் பழமொழியைப் பயன்படுத்தும்போது சில நேரங்களில் கேட்பவருக்கு மட்டுமே பழமொழி கூறப்பட்டதன் பொருள் புரியும். சில நேரங்களில் உடன் இருக்கும் பலருக்கும் காரணமும் பொருளும் புரியும். இப்பழமொழிகள் குறிப்பிட்ட பொருளை மட்டும் உணர்த்துவதில்லை, சூழ்நிலைக்கு ஏற்றவாறு மாறுபட்ட பல பொருள்களையும் அவை உணர்த்தும். பயன்படுத்தப்படும் இடத்தில் என்ன பொருளோ அதனைக் கேட்போர் உணர்ந்து கொள்ளச் செய்வதே இதன் சிறப்பெனக் கூறலாம்.

எ. கா. 'துணிந்தவனுக்குத் துக்கமில்லை'

'தலைக்கு மேலே வெள்ளம் போனா சாண்
போனா என்ன ? முழம் போனா என்ன ?'

போன்ற பழமொழிகள் சூழ்நிலைக்கேற்ப மாறுபட்ட பொருள் கொடுப்பவை.

## விடுகதை

பெரும்பாலும் விடுகதைகள் பழமொழியினை அமைப்பால் ஒத்து இருப்பினும் வினாவின் மூலம் இவற்றை வேறுபடுத்தலாம். விடுகதையினைப் புதிர், அழிப்பான் கதை, வெடி என்று பல பெயர்களால் வழங்குகின்றனர். புதிர்களின் அமைப்பை ஆராயப் புகின் ஒவ்வொரு அடியும் இரண்டு எதிர் வினை முடிவு களைக் கொண்ட அமைப்பாக அமைந்திருப்பது தெரியவரும்.[39]

சான்றாக

' குரல் உண்டு உடல் இல்லை - அது என்ன ? '
(விடை=காற்று)

என்ற இவ்விடுகதையில் வினாவுடன் விடுகதை முடிகிறது. இதனைக் கேட்போர் இதற்கு விடை கூற வேண்டும். விடுகதையின் அமைப்பிற்குக் குழப்பத்தை உண்டு பண்ணும் சொல் விடுகதையின் விளக்கப் பகுதி யில் அமைந்திருக்கும். முரண், குன்றக் கூறல், மிகை படக் கூறல், தவறான படிமம் என்ற நான்கு வகை களில் குழப்பத்தை உண்டு பண்ணலாம் என்று ரோஜர் ஆபிரஹாம்ஸ் என்பவர் குறிப்பிடுகிறார்.[40] குழப்பம் பெரும்பாலும் வினாப் பகுதியிலேயே அமைந் திருக்கும்.

' ஆட்னரி கோழிக்கு எத்தனை காலு ?'

என்ற விடுகதையில் விடை தவறாகக் கூறுவ தற்கு ' ஆட்னரி ' (ordinary) என்ற ஆங்கிலச் சொல் லின் உச்சரிப்பே காரணம். இதன் பொருள் தவறாகப் புரிவிக்கப்படுவதால் விடை தவறாகவே கூறப்படுகிறது. இதனை ஆடு, நரி, கோழி (ஆட்னரி) என்று விரித்

துப் பொருள் கொள்ளும் போதே சரியான விடை பெறப் படுகிறது. விடுகதைகளை ஒரு குறிப்பிட்ட சமூகத் தினர் மந்திரங்களாக மட்டுமே . பயன்படுத்துவதாக லூர்து குறிப்பிடுகிறார்.[41] திருமண வீடுகளிலும், கல்வி நிறுவனங்களில் மாணவர்களின் அறிவைச் சோதனை செய்யும் போதும், ஒருவர் தன் நெருங்கிய நண்பர்கள், உறவினர் ஆகியோரைச் சந்திக்கும் போதும், பாடல்களிலும், கதைகளின் இறுதியிலும், ஓய்வு நேரங்களில் பொழுது போக்குக்காகவும் விடு கதைகள் போடப்படுகின்றன. மற்றபடி இவற்றிற்குக் காலை, மாலை என்ற நேர வேறுபாடு கிடையாது. சில இடங்களில் பகலில் விடுகதை போடக்கூடாது என்னும் பழக்கமும் இருந்து வருகிறது.

இதில் பங்கேற்போர் விடுகதை போடுவோர் ஒருவராகவும் விடுவிப்போர் ஒருவராகவும் மற்றோர் பார்வையாளர்களாகவும் இருப்பர். சில இடங்களில் குழுக்களாகப் பிரிந்து ஒரு குழு விடுகதை போடவும் மற்றொரு குழு விடுவிக்கவும் செய்வர். பெரும் பாலும் சிறுவர் சிறுமியர், இளைஞர் போன்றோரே அதிகமாக விடுகதைகளைப் போடுவர் - விடுவிப்பர்.

## கதைப்பாடல்கள்

கதைப்பாடல்களில் கூத்துக்கள், வில்லுப்பாடல், உடுக்கடிப் பாடல் போன்ற எல்லாமே அடங்கும். இவற்றின் அமைப்பும் கதைப்பாடல்களின் அமைப் பையே ஒத்துள்ளன. எனினும் ஒவ்வொன்றையும் பாடும் முறையினாலும் பயன்படுத்தும் இசைக்கருவி களின் மூலமுமே வேறுபடுத்திக் காட்ட முடியும். தனி யாகவோ, குழுக்களாகவோ, இசைக்கருவிகளின் துணையுடன் பாடி, கருத்தினை எடுத்துரைக்கும் முறை

யில் கதைப்பாடல்கள் அமையும். பாடுவோர் இவற்றை ஒவ்வொரு இடத்திலும் அவர்களுக்கேயுரிய முறையில் பாடுவர். அம்முறைகளுக்குத் தகுந்தாற்போல் அவற்றிற்குப் பெயர்களும் வழங்கப்பட்டுள்ளன. கதைப் பாடல்கள் எனப்படுபவை ஏதாவது வரலாற்று அல்லது மரபு முறைப்படி வந்த சமுதாயக் கதையினைக் கொண்டிருக்க வேண்டும். இவை காலங்காலமாக வாய்வழியாக வழங்கப்பட்டு மக்கள் மனதில் நிலைத்த தன்மையைப் பெற்றதாக இருக்கவேண்டும். கதைப்பாடல்கள் வெளிப்புறத் தோற்றத்தில் கதைக்கரு, பின்புலம், கதை மாந்தர்கள், கதையின் நிகழ்ச்சிப் போக்கு என்ற அடிப்படை வரையறை கொண்டவையாக அமைந்திருக்கின்றன. கதைப்பாடல்களின் உள்ளமைப்பான பண்பாட்டுச் சூழல், கதை போன்றவற்றைப் பாட்டாக எடுத்துரைக்கும் முறை இவற்றில் அமைந்திருக்கிறது. இக்கதைப்பாடல்கள் பத்தியமைப்பின்றி ஒரே தொடர்ச்சியாக அமைந்திருக்கின்றன.

பொருளமைப்பில் பார்க்கும் போது வரலாற்று வீரர்களின் தீரச்செயல்கள், காதல், சாதிப்பாகுபாடு, போர், நிலவுடமை, பழிக்குப்பழி வாங்குதல் போன்ற பல கருக்களைக் கதைப் பொருளாகக் கொண்ட கதையமைப்புக்களையே பெரும்பாலும் காணமுடிகிறது.

அம்மானை, கும்மி, குறம், வில்லுப்பாட்டு, உடுக்கடிப்பாடல் என்பன எல்லாமே ஒரே வகைப் பொருளமைப்பினைக் கொண்டதாகவே அமைந்திருக்கின்றன. கட்டபொம்மன் கதைப்பாடல், கட்டபொம்மன் கும்மி என்று ஒரே கதை இருவகையாகவும் அமைந்துள்ள நிலையினைக் காணலாம். இவற்றில் கதைப்பாடலாகவும், கும்மியடிப்பதற்கேற்ற இசை மாற்றத்துடனும் பாடல்கள் அமைந்திருக்கும். கதைப்

பாடல்களில் சில இறுதியில் கதாநாயகன் அல்லது கதாநாயகி இறந்து விடுவது போன்ற துக்க நிகழ்வு களுடனும் சோக முடிவுகள் கொண்டனவாகவும், (நல்லதங்காள் கதை, வன்னியடி மறவன் கதை போன்றவை), சில இறைவன் பற்றிய கதைகளாகவும் (அண்ணன்மார் சுவாமி கதை, மதுரைவீரன் கதை), சில சிற்றரசர்கள் தளபதிகள் குறித்தும் (ஐவர் ராசாக் கள் கதை, மருது சகோதரர் கதை, சிவகங்கை அம் மானை) அமைந்துள்ளதைப் பொருளமைப்பு அடிப்படை யில் பிரித்துக் கூறலாம். சோக முடிவுகளைக் கூறு கின்ற பாடல்களில் கனவு, நிமித்தங்கள் போன்றவை வந்தமைகின்றன. மேலும் கதைப் பாடல்களின் பொருளமைப்பில் ஓரளவு முரண்பாடுகளும் காணப்படு கின்றன (பெயர் மாற்றம், முந்தைய நிகழ்ச்சிகளை மறந்து ஒதுக்குதல்). கதைப்பாடல்கள் சோக முடி வினைக் கொண்டதாக இருப்பினும் இறுதியில் மாண் டோர் உயிர் பெற்று எழும் செய்தி போன்றவை கூறப் படுகின்றன (நிட்டூரிக் கதைகள்). மேலும் வரலாற்று நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டு ஆராயும் விதமாக மீட்டுரு வாக்கக் கோட்பாட்டுக் கதைகளும் வரலாற்று ஆராய்ச் சிக்குத் துணை புரிவதுமான (இராமப்பய்யன் கதை, கான்சாகிப் சண்டை) கதைப்பாடல்கள் காணப்படுகின் றன. கதைப்பாடல்கள் இசைக் கருவிகளின் துணை கொண்டு பரம்பரை பரம்பரையாக ஒருவர் பாடுவதா கவோ பலர் கூட்டமாகச் சேர்ந்து பாடுவதாகவோ அமைந்துள்ளன.

## புராணக் கதை

புராணக் கதைகள் நீண்டதாகவும் பல கிளைக் கதைகளைக் கொண்டதாகவும் அமைக்கப்பட்டுள்ளன.

புராணக் கதைகள் நாடக வடிவிலும் அமைக்கப்பட்டுள் ளன. மேலும் பிற்காலத்தில் காப்பிய வகைகள் அமைப்பு முறையில் இப்புராணங்களினின்றே தோன்றியவை எனலாம். நடனங்கள், ஒலிநயப் பாடல்கள், நாடகங்கள், விளையாட்டுக்கள் என்ற எல்லா நிகழ்வுகளும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட வடிவங்களில் புராணக் கதைகளில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை மானிடப் பிறவிகளுடன் இறைவனைப் பற்றியும் கூறுவதாக அமைந்திருக்கின்றன. புராணங்களை இலக்கிய வகைப் புராணங்கள், நாடக வகைப் புராணங்கள், பக்தி வகைப் புராணங்கள் என்று பொருளடிப்படையில் பிரிக்கலாம். புராணங்கள் என்பப்டுபவை உண்மைக் கதைகளாக நடந்தவை என்ற நம்பிக்கையினைக் கொடுக்கக் கூடியனவாகவும் நினைவிற்கெட்டா நீண்ட நெடுங்காலத்தில் நடந்ததாகவும் பல்வேறு உலகங்களோடு தொடர்பு படுத்தியும், புனிதம் வாய்ந்ததாகவும், மனித இனம் சாராதோரைப் பற்றிக் கூறுவனவாகவும் நம்பப்படுகின்றன. மேலும் நம்ப முடியாத நிகழ்ச்சிகளைக் கொண்டவை இவை.

இப்புராணக் கதைகள் மரபுக் கதைகள், நாட்டார் கதைகள் போன்றவற்றினின்றும் வேறுபட்டவையாக அமைந்துள்ளன. உரைநடையமைப்பில் இவை ஒன்றுபட்டிருந்தாலும் அளவில் இவை வேறுபட்டவையே எனலாம். புராணங்கள் மிக நீண்டவை. இவற்றைப் படிப்போர் வீடு பேறடைவர் என்ற நம்பிக்கையுடன் படிக்கப்படுகின்றன. நாட்டார் கதைகளும், மரபுக் கதைகளும் அமைப்பில் புராணக் கதைகளை விட அளவில் குறுகியவை. இவற்றில் மனிதரைப்

பற்றியும் சமுதாயத்தைப் பற்றியும் கூறப்படுகின்றன. இவற்றின் மூலம் அண்மைக் காலங்களிலும், பழங் காலத்திலும் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் குறிப்பிடு கின்றனர். புராணக் கதைகள் பொருள் புரியாவிடினும் படிக்கத் துவங்கினால் அவற்றை இரவில் மட்டுமே படிக்கும் பழக்கம் உள்ளது. இதன் மூலம் புனிதம் பெற்று விட்டதாகவும் தங்கள் பாவங்கள் கரைந்து புண்ணியம் கிடைக்கும் என்றும் நம்புகின்றனர் மக்கள். மேலும் புராணம் என்பது பிரபஞ்சம், ஊழ்வினையோடு தொடர்பு படுத்திக் கூறப்படுகிறது. மற்ற நாட்டார் மரபுக் கதைகள் முன்னொரு காலத்தில் என்று துவங்கி அவர்களின் மகிழ்ச்சியான முடிவை இறுதியில் கூறும் அமைப்புகளாகவே காணப்படுகின்றன. இவை சமூகப் பண்பாடு என்ற பொருளமைப்பில் மனித நம்பிக்கைகள், செயல்கள் போன்றவற்றிற்கேற்ற முறையில் அமைந் துள்ளன எனலாம். இக்கதைகள் தனித்தும் இயங்கும்; சில நேரங்களில் வேறு கதைகளுடனும் இணைந்து செல்லக்கூடியனவாக இருக்கும்.

புராணங்கள் பிரபஞ்சத்தில் நடைபெறும் நிகழ்வு களின் விளக்கம், கவிதை அல்லது இசை என்ற ஏனைய படைப்புக்களுக்கு இணையானவை. எல்லா மானிடர்களும் ஓரளவு பங்கு கொள்ளும் ஓர் அடிநிலைக் கூறு, சமயங்களைப் பரப்பும் ஒரு நாடகக் கூறு என்று புராணங்களைப் பற்றித் தற்காலக் கோட்பாடுகள் எடுத்துரைக்கின்றன.[42]

## நாட்டுப்புறக் கலைகள்

பொய்க்குதிரை, கரகாட்டம், பாவைக்கூத்து, கணியான் கூத்து, பொம்மலாட்டம், இலாவணி, ஒயி

லாட்டம், தேவராட்டம், தெருக்கூத்து போன்ற எல்லாக் கலைகளிலும் இசை (பாடல்கள், இசைக் கருவிகள்) அமைந்தேயுள்ளது. அந்தந்த நிகழ்ச்சிகளுக்கேற்றவாறு இசைக் கருவிகள் போன்றவை மாறுபடுகின்றன. பொய்க்குதிரை, கரகாட்டம் என்ற இரண்டிலும் கருவிகளின் துணையுடன் தாங்களே இசைக்கேற்ப ஆடுகின்ற முறையில் அமைந்துள்ளன. இவற்றில் ஒருவர் அல்லது இருவரே ஆடுவர். தேவராட்டம், ஒயிலாட்டம் போன்றவற்றில் இசைக்கேற்ப குழுக்களாக ஆடும் முறை காணப்படுகிறது. இங்கு இசைக் கருவிகளின் துணையின்றி வேறு துணையில்லை. பொம்மலாட்டம், பாவைக் கூத்து எனப்படுபவை பிறரால் ஆட்டுவிக்கப்படுபவை. நாடகம் போன்றே, பொம்மை நாடக மாந்தர்களை உருவாக்கி ஒருவரோ இருவரோ ஆட்டுவிப்பர். இவையெல்லாம் திருவிழாக் காலங்களில் அதுவும் இரவு நேரங்களிலேயே நடத்தப் படுகின்றன. பொருளமைப்பில் கதைப்பாடல்களையும், புராணங்களையும் கொண்டு இவற்றை நடத்திக் காட்டுகின்றனர். இவை மக்களை ஈர்த்து அவர்களுக்கு நல்ல கருத்துக்களை ஊட்டிச் சமுதாய சீர்திருத்தத்திற்கு அவை இன்றியமையாதன என்ற கருத்தையும் தெரிவித்து வந்தனர்.

நாட்டுப்புறப் பாடல்களையும் கலைகளையும் ஒரு கட்டமைப்புக்குள் கொண்டு வருவதன் மூலம் நாட்டுப்புற இலக்கியத்திற்கு ஒரு பொது அமைப்பை உருவாக்க முடியும். இத்தகைய ஆய்வின் மூலம் ஓர் இலக்கியத்தின் அக, புற அமைப்புக்கள், பொருளமைப்பு என்ற பல்வேறு சிறப்புக் கூறுகளை வரையறை செய்திட இயலும். இன்றைய அமைப்பியல், கோட்பாட்டின் உதவியால் நாட்டுப்புறப்பாடல்கள்,

கதைகள், கதைப்பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள், புராணக் கதைகள் மற்றும் நாட்டுப்புறக் கலைகளின் அமைப்பு, பண்பு, பாகுபாடு போன்றவற்றைக் கற்போர் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிமைப்படுத்திக் கூறுவது சிறப்பாய்வாக அமையும். இதுவே நாட்டுப்புறவியலின் சிறப்பியல்பு எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. நாட்டுப்புறவியல், பக். 5
2. நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், பக். 37
3. நாட்டுப்புறவியல், பக். 7
4. நாட்டுப்புறவியல் சிந்தனைகள், பக். 3
5. நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 3
6. நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், பக். 37
7. நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 2
8. Encyclopaedia Britanica, p. 454
9. Ibid. p. 457 & p. 465

i) FOLK SONG

Implies the use of music and the musical tradition which varies greatly from one area to another. Even when folk songs are not used for such practical purposes but only for the pleasure of singing or listening, the greater part of the world uses them for the expression of ideas or emotions held in common by the group. Only in societies used to the songs of composers or poets does purely personal

expression enter into the folk songs. This is not frequent and songs of this type are hardly to be distinguished from some of the simple lyrics of poets such as Robert Buras.

ii) FOLK BALLAD

A special tradition told in song has arisen in Europe since the Middle Ages and has been carried to wherever Europeans have settled. These ballads in characteristic local metrical forms and frequently with archaic musical nodes, are usually concerned with domestic or warlike conflict, with disasters by land or sea, with crime and punishment, with heroes and outlaws and sometime though rarely, with humour.

Eg. The Ballad of "John Henry" relating the contest between a browny negro labourer and new stream drill on a rail road tunnel in West Virginia in the 1860s. is widely sung by both American blacks and whites. John Henry dies " with his hammer in his hand ".

iii) நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், பக். 87

ஜூலியஸ் சீசர், சுய நம்பிக்கை, பயமின்மை இவற்றின் மிகுதியால் எச்சரிக்கை செய்யப்பட்டும் கேட்காமல் ஆபத்துக்குள்ளாகிக் கொலை செய்யப்படுகிறான். மார்க் ஆண்டனி, மிதமிஞ்சிய காதலுணர்ச்சி

யால் நிதானம் தவறி கடமைகளை மறந்து போரில் தோல்வியுற்றுத் தற்கொலை செய்து கொள்ளுகிறான்.

10. நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 5
11. நாட்டுப்புறவியல் சிந்தனைகள், பக். 11-12
12. a) நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 140-143
    b) Encyclopaedia Britanica, p. 703

GREAT TRADITION

In China two great schools of thought, confucianism and Taoism, that had become firmly established by the 2nd Century B. C. and profoundly influenced succeeding ages, whereas confucianism emphasized ethics, the family and ritual, Taoism laid strees on individualism and a mystical interpretation of the cosmos. Confucianism alone, however, is sometimes referred to as the great tradition, because its classics were the basis of education for over 2000 years.

13. The New En. Br., V. VI, p. 269

LITTLE TRADITION

Little tradition in Hinduism is popular regional traditions of folk mythology.

14. திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, பக். 210-225

15. நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 147

'சுளுந்து' என்பது சோளத்தட்டையில் கட்டிய துணிப்பந்து. இதனை வேகமாகச் சுற்றும் போது பேய், பிசாசுகள் ஓடிவிடும் என்ற நம்பிக்கை உண்டு. கதிர்கள் முற்றி நிற்கும் கார்த்திகை மாதத்தில் கதிர் களைப் பூச்சிகள் அரிக்காமல் தடுக்கவும் இச்சுளுந்து விளையாட்டு பயன்படுகிறது. இதனால் பேய்கள் விலகும் என்ற நம்பிக்கையும் உண்டு.

16. நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 148-149
17. நாட்டுப்புறவியல் ஆய்வு, பக். 159-160
18. Folklore Myths and Legends of Britain, p. 23

The celtic calender, based on the agriculture and pastoral year, began on Nov./which our ancestors celebrated with the great festival of **Samain** surplus livestock was slaughted for winterfood and sheep were mated to provide the following year's stock.

19. நாட்டுப்புற மருத்துவ மந்திரச் சடங்குகள், பக். 14
20. -do- -- , பக். 15
21. -do- -- , பக். 22
22. -do- -- , பக். 25
23. மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், பக். 36
24. நாட்டுப்புற மருத்துவ மந்திரச் சடங்குகள், பக். 32
25. மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், பக். 62-69
26. நாட்டுப்புற மருத்துவ மந்திரச் சடங்குகள் பக். 43
27. -do- பக். 45
28. தமிழர் நாட்டு விளையாட்டுகள், பக். 4-5

29. -do- பக். 37

30. -do- பக். 52-53

31. தமிழர் நாட்டு விளையாட்டுகள், பக். 27-28

32. சமூகவியலும் இலக்கியமும், பக். 137 & 159

33. 'அச்சமில்லை அச்சமில்லை' என்ற திரைப்படத்தில் வருவது.

34. நாட்டுப்புற இயல் ஆய்வு, பக். 5

35. அம்பாப்பாடல் அமைப்பியல் ஆய்வு, பக். 28

36. நாட்டார் வழக்காறுகள், பக். 10

37. -do- , பக். 11

38. -do- , பக். 14

39. -do- , பக். 53-54

40. -do- , பக். 62

41. நாட்டார் வழக்காறுகள், பக். 65

(1) தொமோரி (Tomori) என்போர் இந்தோனேசிய மக்களுள் ஒரு வகையினர். இவர்கள் வயலில் அறுவடை செய்யும்போது சாதாரணப் பேச்சு மொழியிலிருந்து மாறுபட்ட சிறப்புச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.

(2) இவ்வாறு விடுகதைகளைப் போடுதல் ஏதோ சில காரணங்களினால் இம்மக்களிடையே ஒரு வகை மந்திரமாகக் கருதப்படுகின்றது. இந்த மந்திரங்கள் பயிர்களை வளர்க்க அல்லது அழிக்கச் செய்யும் ஆற்றல் கொண்டவை என்று அவர்கள் நம்புகின்றனர்.

42. நாட்டார் வழக்காறுகள், பக். 166-167

இயல் - 3

# நாட்டுப்புறவியலாய்வு

## 3.1 முன்னுரை

அக்கால மக்களின் பண்பாட்டை, கலைப் பண்பை, வாழ்வியல் அமைப்புக்களை, உயர்ந்த நடையிலும் எழுத்து வடிவிலும் நாம் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிகிறோம். இதற்கு இணையான, எந்த விதத்திலும் குறைவில்லாத முறையில் நாட்டுப்புற மக்களின் பண்பாடு மற்றும் வாழ்வியல் தொடர்பான நிகழ்ச்சிகள், கூறுகள் போன்றவை நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள், நம்பிக்கைகள் என்று பல வடிவங்களில் வாய்மொழியாகவே வாழ்ந்து வருவதனையும் நாம் அறிவோம். இத்தகைய நாட்டுப்புற மக்களின கலைகளையும், இலக்கியங்களையும், நம்பிக்கைகளையும் ஆராய்ந்தறியும் பிரிவே நாட்டுப்புறவியலாய்வு எனப்படுகிறது.

நாட்டுப்புறவியலை ஆராயும்போதுதான் மக்களது கலைகளின் உயர்வை, பண்பாட்டுக் கூறுகளின் மேன்மையை, மருத்துவத்தின் சிறப்பை அறிந்து கொள்ள முடிவதோடு, இலக்கியக் கூறின் முக்கியத்துவத்தையும் நாம் வெளிப்படையாக அறிந்து கொள்ள முடிகிறது.

'Folklore' என்னும் சொல்லைப் பற்றியும் அதன் தற்போதைய நிலையைப் பற்றியும் "Folklore in popular usage generally applies to public performances of song, dance, and festival and in scholarly usage the term refers to the study of present culture" ன்று குறிப்பிடப்படுகின்றது.[1]

மேலும் நாட்டுப்புறவியலின் பழமையையும் இன்றைய நிலையையும் விளக்கிடும் நிலையில் "folklore is as old and as young as man" என்று குறிப்பிடப்படுகிறது.[2]

நாட்டுப்புறவியல் என்பது மனித சமுதாயத்தைப் போன்று மிகவும் பழமையானதும் அதே சமயம் மனிதனின் நடையுடை, பழக்க வழக்கங்கள், பாவனைகள் காலத்திற்கேற்ப வேறுபட்டும் மாறுபட்டும் புதுமையடைவதைப் போன்று, நாட்டுப்புறவியலாய்வுகளும் மனித சிந்தனையின் வளர்ச்சியால் மாற்றம் பெற்று புதுமையாகவும், இளமையாகவும் இருக்கும் நிலை கண்கூடு.

நாட்டுப்புறவியல் ஆய்வானது பழங்கால மற்றும் தற்கால மக்களின் மரபு வழிப்பட்ட வாழ்வியல் வரலாற்றின் பண்பாட்டுத் தொகுதியாக விளங்குகிறது. அவை மக்களின் மொழி வழியாகவும் பாடல்கள், கதைகள், கூத்துக்கள், விளையாட்டுக்கள், நாடகங்கள் போன்ற பலவற்றின் வாயிலாகவும் வெளிப்படுகின்றன. மானிடவியல் மற்றும் உளவியல் முறைகளின் வாயிலாகவும் மனித சமுதாயம் தான் கற்றதை, தன் அனுபவத்தைச் சேமித்து வைத்துப் பிறருக்கு நல்கும் நிலை குறித்த கல்வியே நாட்டுப்புறவியல் என்றும், அறிவியல் அறிவின் அடிப்படையில் வகுத்துத் தொகுப்பதுதான்

மனித பண்பாட்டின் வளர்ச்சி என்று சமூகவியல் அடிப் படையிலும் விளக்குவர்.[3]

## 3.2 நாட்டுப்புறவியலாய்வின் இன்றைய நிலை

இன்றைய நிலையில் நாட்டுப்புறவியலாய்வு என்பது மிகவும் பரவலாகச் செயல்பட்டு வருகிறது. எங்கோ மறைந்து கிடந்த அரிய பொக்கிஷத்தைத் தேடிக் கண்டுபிடித்துத் தற்கால மக்களிடையே அறி முகம் செய்து வைத்தனர் மேலை நாட்டு அறிஞர்கள். இத்தகைய நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள் எனப் படுபவை நம் நாட்டில் மலிந்து கிடந்த போதிலும் அவற்றை நமக்கு அறிமுகம் செய்ய வேண்டிய சூழ் நிலை ஒரு கால கட்டத்தில் இருந்தது. ஆனால இன்று நாட்டுப்புறவியலாய்வு வேகமான வளர்ச்சியை அடைந்து வருகிறது எனக் குறிப்பிடலாம். தமிழ், சமுதாயவியல், மானிடவியல், உளவியல், மொழியியல் துறைகளைச் சார்ந்த பல்வேறு அறிஞர்கள் மற்றும் ஆய்வாளர்கள் தங்கள் அரும்பெரும் முயற்சியால் மேல்நாட்டு அறிஞர்கள் காட்டிய வழியினைப் பின் பற்றியும், ஆய்வு முறைகளைக் கொண்டும் பல்வேறு பட்ட நாட்டுப்புற அரிய இலக்கியங்கள், கலைகள் ஆகியவற்றைக் கண்டு பிடித்து, அவற்றினை என்றும் அழியா வண்ணம் ஏட்டிலக்கியங்களாக மாற்றினர். இக்காரணத்தால் இன்று தமிழில் பரவலாக நாட்டுப் புறவியல் ஆய்வுகளும் பல்கிப் பெருகியுள்ளன.

மரபிலக்கணமாகிய தொல்காப்பியத்தில் தொல் காப்பியர் ' என்ப ', ' என்மனார் புலவர் ' என்று பல சூத்திரங்களைத் தனக்கு முந்தைய புலவர்களின் கூற்றாகவே சுட்டிச் செல்கிறார். இதன் மூலம் வழக் கின் பழமை நமக்குப் புரிகின்றது.[4] இது போன்றே,

'பாட்டிடைக் கலந்த பொருளஆகி
பாட்டின் இயல பண்ணத்தியே'
(தொல். பொருள். செய். 173)

என்ற சூத்திரத்தின் மூலம் கூறும் செய்திக்குப் 'பண்ணைத் தோற்றுவித்தலால் பண்ணத்தி' என்று இளம்பூரணர் பொருளும் கூறுகின்றார்.[5] மேலும் தொல்காப்பியர் விடுகதைகளைப் பிசி என்னும் சொல்லால் சுட்டுகின்றார்.

'அடி இகந்து வரினும் கடிவரை இன்றே'
(தொல். பொருள். செய். 175)

என்று பாடல்களின் அடிவரையறை யின்மையினையும் தொல்காப்பியர் சுட்டுகின்றார். இத்தகைய பழமை வாய்ந்த நாட்டுப்புற இயலானது இடையில் கவனிப் பாரின்றிக் கிடந்து தற்போது வளர்ச்சி நிலையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்றே குறிப்பிடலாம்.

பரந்து பட்ட உலகம் இன்று பல்வேறு அறிவியல் வளர்ச்சிகளின் காரணமாக மிகவும் சுருங்கி விட்டது. ஓர் இடத்தில் காணப்படும் மக்களின் பண்பாட்டு மாற்றங்களை விரைவில் உலக நாடுகள் எல்லாமே கேட்கக் கூடிய - அறியக்கூடிய - காணக்கூடிய வளர்ச்சி நிலை இன்று உருவாகியுள்ளது. மருத்துவம், கல்வி, விவசாயம், அறிவியல், பொறியியல், பிற கலைகள் போன்றவற்றில் ஏற்பட்டுள்ள இன்றியமையா வளர்ச்சிகளை மக்களுக்குக் கல்வி மூலமும் பரவல் செய்தித் தொடர்புச் சாதனங்கள் மூலமும் கொடுக்க முடிகிறது. இதே செய்திகளை நாட்டுப்புறக் கலைகளின் வாயிலாகவும், விளம்பரங்கள், இசை, கதைகள், பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள் போன்றவற்றின் வாயிலா

கவும் சொல்லும் போது இன்னும் வேகமான வளர்ச்சியைக் காண முடிகிறது. இதன் மூலம் இலக்கியவியல், மொழியியல், நுண்கலையியல், வரலாற்றியல், மானிடவியல், சமுதாயவியல், உளவியல் போன்ற எல்லாத் துறைகளின் வளர்ச்சியும் நாட்டுப்புறவியலின் ஆய்வோடு இணைந்தே வளர்ச்சி பெற்றுள்ளது, பெற்றும் வருகிறது என்றால் அது மிகையாகாது.

கவனிப்பாரற்றுக் கிடந்த நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள் போன்றவை இன்று பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் பாடமாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளதுடன், பலர் பல நிலைகளில் நாட்டுப்புறவியலை ஆராய்ந்து வரும் முயற்சியும் காணப்படுகிறது. வானொலியும், தொலைக்காட்சியும் பல நாட்டுப்புறவியல் கலைகளையும் இலக்கியங்களையும் ஒலி, ஒளி பரப்பியும் நாட்டுப்புறவியல் பற்றிய அறிவை மக்களிடையே வளர்த்தும் வருகின்றன. மேலும் நுண்கலைகள் (சிற்பக்கலை போன்றவை) அழிந்து விடாமல் இருக்க அக்கலைஞர்களையும் கலைகளையும் பாதுகாக்க அரசும் பல சிற்பப் பள்ளிகளைத் துவக்கி விருப்பமுள்ளவர்களுக்குப் பயிற்சி அளித்து வருகிறது. அதோடு அரசும் பல பல்கலைக்கழகங்களும் பண்பாட்டு வளர்ச்சிக் கழகங்களை அமைத்துச் சேவை செய்து வருகின்றன. இது குறித்த நூல்களை வெளியிட்டும் வருகின்கின்றன. பல கருத்தரங்குகளை நடத்தியும் வருகின்றன. பள்ளிகளில் கும்மி, கோலாட்டம் போன்ற நிகழ்ச்சிகளையும் விளையாட்டுகளையும் ஊக்குவிக்கவும் வெளிநாடுகளில் நடத்திக்காட்டவும் வசதி செய்து தரப்பட்டு வருகிறது. கலைத்துறையைச் சேர்ந்தவர்கள் கதைப்பாடல்களையும், பாடல்களையும் நாட்டிய

நாடகங்களின் மூலம் நடத்திக் காட்டி, நாட்டுப்புறவிய லாய்வின் வளர்ச்சிப் பணிக்கு உதவுகின்றனர். பல்கலைக்கழகங்கள் பல கருத்தரங்குகளையும், செயல ரங்குகளையும் நடத்தி அவற்றின் முடிவுகளை, அதா வது, ஆய்வுக் கோவைகளை வெளியிடுகின்றன. கலைக்களஞ்சியங்கள், அகராதிகள் போன்றவற்றில் நாட்டுப்புறவியல் பற்றிய விளக்கங்கள் கொடுக்கப்பட்டு வருகின்றன. வெளிநாட்டாரின் நாட்டுப்புறவியல் கோட்பாடுகளின் அடிப்படையில் நம் நாட்டில் நாட்டுப் புறவியலாய்வு நூல்கள் வெளியிடப்பட்டும் வருகின்றன. மேல்நாட்டாரின் இன்றைய சில மருத்துவக் கண்டு பிடிப்புக்களைக் காட்டிலும் சித்த மருத்துவ முறைகள் அன்றே வளர்ந்த நிலையில் இருந்தது என்பதைத் தற்போது கண்டுபிடித்துக் கூறியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

## 3.3 நாட்டுப்புறவியலாய்வில் ஆய்வு அணுகு முறைகள்

நாட்டுப்புறவியலாய்வின் பல்வேறு இலக்கிய மற்றும் கலை வகைகளை ஆய்வு செய்யும் முறைகளை அதாவது ஆய்வு அணுகு முறைகளை,

(1) அமைப்பியல் அணுகுமுறை (structural method)

(2) சமுதாயவியல் அணுகுமுறை (sociological method)

(3) உளவியல் அணுகுமுறை (psychological method)

(4) கால அடிப்படையிலான அணுகுமுறை (historical method)

(5) மொழியியலடிப்படையிலான அணுகு முறை (linguistic method)

(6) ஒரு குறிப்பிட்ட கால அடிப்படையிலான அணுகுமுறை (synchronic method)

(7) கருத்துப் பரிமாற்ற அணுகுமுறை (communicative method)

என்று ஏழு வகையாக அவ்வத்துறைகளுக்கேற்ற விளக்கங்களுடன் எடுத்துக் கூற வேண்டியது இன்றைய நாட்டுப்புறவியல் ஆய்வு வளர்ச்சிக்கு மிகவும் தேவையாகிறது.

### 3.3.1 அமைப்பியல் அணுகுமுறை

எந்த ஓர் ஆய்வுப் பொருளையும் அதன் அமைப்பை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு மேற்கொள்ளலாம். இத்தகைய எண்ணத்திற்கு அடிப்படை எந்தவொரு பொருளுக்கும் ஓர் அமைப்பு உண்டு என்பதே. எடுத்துக் காட்டாக, சமுதாயத்திற்கென்று ஓர் அமைப்பு உண்டு. மொழிக்கென ஓர் அமைப்பு உண்டு. அணுவிற்கென ஓர் அமைப்பு உண்டு. இவ்வாறு உள்ள அமைப்பினை வரையறை செய்து தெளிவுபடுத்தும் முறை அமைப்பியல் முறை. அப்பொருளிலுள்ள பிரிவுகள், வகைகள், நிலைகள், கூறுகள் போன்றவற்றைத் தனித்தனியாகவும் ஒன்றோடொன்று தொடர்பு படுத்தியும் விளக்குவது அமைப்பியல் விளக்கமாகும். சிறு கூறிலிருந்து பெரிய கூறுவரை அல்லது பெரு அமைப்பிலிருந்து சிறு அமைப்பு வரை ஒரு பொருளின் கூறுகள் எவ்வாறு

இணைந்து செயல்படுகின்றன, அவ்வாறு அவை செயல்படும் போது அவற்றிற்கிடையே காணப்படும் தொடர்புகள் என்னென்ன, அதற்கான காரணங்கள் யாவை போன்றவை இத்தகைய விளக்கத்திலே இடம் பெறுகின்றன. இதற்கெனச் சில கோட்பாடுகள், வழி முறைகள், விதிகள் போன்றவை தேவையாகின்றன.

நாட்டுப்புறவியல் இலக்கியங்கள், கலைகள் போன்றவற்றிற்கும் தனித்தனியே அமைப்புக்கள் உண்டு. அவற்றின் மொழியமைப்பு ஒரு புறம், சமுதாய அமைப்பு மற்றொரு புறம், பொருளமைப்பு இன்னொரு புறம் என அமைப்புக்களைப் பிரித்து விளக்க முடியும். இதற்காக, சில கோட்பாடுகளைப் பயன் படுத்தி முடிவுகளைப் பெற முடியும்.

## 3.3.2 சமுதாயவியல் அணுகுமுறை

ஒரு குறிப்பிட்ட பொருள், செயல் போன்றவை தனி மனிதனோடும் அவன் சார்ந்துள்ள சமுதாயத் தோடும் ஒருங்கிணைந்தவை. எடுத்துக் காட்டாக மொழி ஒரு செய்திப் பரிமாற்றக் கருவி என்றாலும் மொழியை நாம் தனித்துப் பார்ப்பதில்லை. காரணம் மொழி சமுதாயத்தின் பணிகளைச் செய்வதற்குப் பல நிலைகளில் பலரால் பல்வேறு வகைகளில் பயன்படுத் தப்படுகிறது. அவ்வச்சூழல்களுக்கேற்ப மாறியும் அமைகிறது. ஆகவே மொழியாய்வு சமுதாய இயக் கத்தின் மற்றும் அமைப்பின் அடிப்படையில் அமைய வேண்டியது இன்றியமையாததாகிறது. இதேபோல நாட்டுப்புறவியலை எடுத்துப் பார்த்தால் அதிலிடம் பெறும் ஒவ்வொரு பிரிவும் அல்லது வகையும் குறிப் பிட்ட சமுதாயப் பொருள், சூழல், செயல் போன்றவற் றைக் கொண்டு அமைந்துள்ளதோடு ஒன்றோடொன்று

தொடர்பு கொண்டுள்ளதையும் காணலாம். ஆகவே இவற்றை ஆராயும் போது அவற்றைப் பயன்படுத்தும் சமுதாயப் பிரிவினரின் சமுதாயப் பின்னணி, மொழிப் பின்னணி, தொழில், வயது, கல்வி நிலை, பால், பொருளாதார நிலை, சமுதாய உறவு முறை போன்ற பல்வேறு காரணிகளின் அடிப்படையில் அமைத்துக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகிறது. இவ்வாறு ஆய்வு மேற்கொள்ளும் நிலையில்தான் அத்தகைய நாட்டுப்புறவியல் வகைகள், அவற்றின் சமுதாய முக்கியத்துவம், பணி, பயன் போன்றவை தெளிவாக வெளிப்படும் சூழ்நிலை உருவாகும்.

## 3.3.3 உளவியல் அணுகுமுறை

மனிதன் தன் எண்ணங்களை, கொள்கைகளை, ஆசைகளை, ஆர்வத்தினைப் பல்வேறு சமுதாயச் சூழல்களில் வெளியிடுகிறான். மொழியை இதற்காகப் பயன்படுத்துகிறான். பல்வேறு பொருள்களைப் பற்றி, கருத்துக்களைப் பற்றி, கொள்கைகளைப் பற்றித் தனது மனப்பான்மையினை வெளியிடுகிறான். சமுதாயப் பழக்க வழக்கங்களை மேற்கொள்வதில், பின்பற்றுவதில் பிறரிடமிருந்து வேறுபடுகிறான். இன்னும் சில பழக்க வழக்கங்களையும் புதுமைகளையும் சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்கிறான். பல்வேறு சமுதாயப் பிரச்சினைகளைச் சந்திக்க நேரும்போது அவற்றைத் தீர்ப்பதற்கான வழிகளைக் கண்டுணர்கிறான். இவ்வாறு மனிதனது சமுதாய வாழ்வு அவனது மனத்தால் கட்டுப்படுத்தப்படுகிறது அல்லது கட்டவிழ்த்து விடப்படுகிறது. இதைத்தான் மனம் - மொழி - சமுதாயம் (language, mind and society) என்ற தொடர்பு மனிதனது மொழிப் பயன்பாட்டையும் அவ

னது சமுதாய வாழ்க்கையையும் தொடர்புபடுத்தி நமக்கு விளக்குகிறது. இதுபோன்ற தொடர்புகளை நமக்கு வெளிப்படையாக விளக்குவதற்குச் சில கோட் பாடுகளும் நெறிமுறைகளும் தேவைப்படுகின்றன. இவற்றை அடிப்படை உளவியல் கோட்பாடுகள் நமக் குத் தருகின்றன. இவற்றோடு அடிப்படைத் தத்துவ மற்றும் மொழியியல் கருத்துக்களும் கோட்பாடுகளும் கூட தேவைப்படுகின்றன. இக்கோட்பாடுகளில் சிலவோ பலவோ பயன்படுத்தப்பட்டு அமையும் ஆய்வு உளவியலடிப்படையிலான ஆய்வாக அமைகிறது.

### 3.3.4 கால அடிப்படையிலான அணுகுமுறை

மொழி, சமுதாயம், அவற்றின் அமைப்பு - பயன்பாடு, செயல்முறை போன்றவை இடத்திற்கு இடம், சூழலுக்குச் சூழல், காலத்திற்குக் காலம் மாறக் கூடியவை. ஒரு சமுதாயத்தில் பல்வேறு கால கட்டங் களில் தோன்றும் மாற்றங்களுக்கு ஏற்ப அச்சமுதாயத் தில் இடம் பெறும் மொழி, பண்பாடு போன்றவை மாற்றம் பெறுகின்றன. இத்தகைய மாற்றங்களை முறையாக, பல்வேறு காரணிகளைக் கொண்டு வரை யறை செய்து கால அடிப்படையில் பாகுபாடு செய்ய முடியும். எடுத்துக் காட்டாக, மொழி மாற்றங்களை அமைப்பு அடிப்படையிலும் பொருளடிப்படையிலும் பாகுபாடு செய்து பல்வேறு காலங்களில் இவை எவ் வாறு அமைந்தும் மாற்றம் - பெற்றும் வந்துள்ளன என்பதை வரலாற்று மொழியியலடிப்படையில் விளக்கு கிறோம். இதே போன்று நாட்டுப்புற இலக்கியங் களையும் பாகுபாடு செய்து அவை அன்று தொட்டு இன்று வரை எவ்வாறெல்லாம் வழக்கிலிருந்து வந் துள்ளன, எவ்வகையிலெல்லாம் மாற்றம் பெற்று,

சமுதாயத் தேவைகளைப் பூர்த்தி செய்து வந்துள்ளன என்பதைக் கால அடிப்படையில் ஆய்வு செய்யலாம். இதன் மூலம் அன்றைய வழக்கிலிருந்த இலக்கியங் கள் கலைகள் போன்றவற்றை இன்றையச் சூழலுக்கு ஏற்ப எவ்வாறெல்லாம் பயன்படுத்திக் கொள்ள முடி யும் என்பதைக் கண்டறிய முடியும். இது வரலாற்று ஆய்வால் நாம் பெறும் சமுதாயப் பயன் (social use). அதாவது இத்தகைய ஆய்வு இன்றைய நிலை யில் சமுதாய முக்கியத்துவம் பெற்றிருப்பதை நன்கு அறிந்து கொள்ள உதவும். ஆகவே இது போன்ற கால அடிப்படை ஆய்வுகள் நாட்டுப்புறவியலின் இன் றையத் தேவையாக அமைந்து வருகின்றன.

## 3.3.5 மொழியியல் அணுகுமுறை

மொழியியல் அணுகுமுறை ஒரு வகையில் அமைப்பியலடிப்படையிலும் இன்னொரு வகையில் கால அடிப்படையிலும் மற்றொரு வகையில் சமுதாய அடிப்படையிலும் அமைந்ததாகும். நாட்டுப்புற இலக் கியங்களில் அமைந்துள்ள மொழியமைப்பினை ஆய் தல், மொழி மாற்றங்களை ஆய்தல், மொழிப் பயன் பாட்டினை ஆய்தல் ஆக இம் மூன்றும் மேற்கண்ட மூன்று அணுகுமுறைகளின் அடிப்படையில் மேற் கொள்ளப்படுபவையாகும். அமைப்பு மொழியியல், வரலாற்று மொழியியல் மற்றும் சமுதாய மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்தி நாட்டுப்புற இலக்கிய மொழியமைப்பு, மொழி மாற்றம், மொழிப் பயன்பாடு இவற்றைத் தெளிவாகவும் நிறைவாகவும் வெளிப் படையாகவும் ஆய்வு செய்ய இவ்வணுகுமுறை மிகவும் தேவையானதாக அமைந்து வரக் காண்கிறோம்.

### 3.3.6 ஒரு குறிப்பிட்ட கால அடிப்படையிலான அணுகுமுறை (synchronic method)

ஒரு குறிப்பிட்ட பொருளை, செயலை, நிலையை விளக்கும் போது அப்பொருள், செயல், நிலை ஒரு குறிப்பிட்ட காலச் சூழலில் எவ்வாறு அமைந்திருந்தது, அல்லது அமைந்துள்ளது எனபதை முறையாக எடுத்துச் சொல்லுதலே இதுவாகும். எடுத்துக் காட்டாக, ஒரு மொழியானது அதாவது அதனுடைய மொழியியல் விளக்கம் 19-ஆம் நூற்றாண்டில் எவ்வாறு அமைந்திருந்தது என்பதை விளக்கும் போது அந்நூற்றாண்டின் மொழியமைப்பு அல்லது மொழிப் பயன்பாடு நமக்குத் தெரிய வருகிறது. இதைப் போலவே நாட்டுப்புறவியல் இலக்கியங்கள், கலைகள் போன்றவை ஒரு குறிப்பிட்ட காலவரையறைக்குள் அமைந்திருந்த நிலையினை விளக்கிச் சொல்ல முடியும். இடைக்கால நாட்டுப்புறவியல் இலக்கிய விளக்கம், பழங்கால நாட்டுப்புறக்கலைகள் பற்றிய விளக்கம் என்றெல்லாம் பாகுபாடு செய்து தனித்தனியே விளக்க முடியும். இவ்வாறு மேற்கொள்ளப்படும் ஆய்வுகள் முறையான அமைப்பு மற்றும் விளக்க ஆய்வுகளுக்கும் வரலாற்று ஆய்வுகளுக்கும் அடிப்படையாக அமையும். எடுத்துக்காட்டாக இலக்கிய வரலாறு, மொழி வரலாறு, சமுதாய வரலாறு, பண்பாட்டு வரலாறு போன்றவற்றைத் தெளிவு படுத்துவதற்கும் வரையறை செய்வதற்கும் உறுதுணையாக அமையும்.

### 3.3.7 கருத்துப் பரிமாற்ற அணுகுமுறை

கருத்துப் பரிமாற்றம் என்பது எந்தவொரு கருத்தின் வெளிப்பாட்டிற்கும் இன்றியமையாதது. மேலும் எந்தவொரு பொருளிலும் அல்லது விளக்கத்திலும் கருத்தமைப்பு (content structure) சிறப்பிடம்

பெற்று விளங்கக் காண்கிறோம். இத்தகைய விளக்கங்கள் கருத்துப் புலப்பாட்டின் தன்மை, இன்றியமையாமை, சமுதாயப் பங்கு ஆகியவற்றின் அடிப்படையில் அமையவேண்டும். அவ்வாறு அமையச் சில உத்திகளும் கொள்கைகளும் நமக்குத் தேவைப்படுகின்றன. மொழியின் வாயிலாகக் கருத்துக்கள் வெளிப்படுத்தப்படும் பொழுது அதன் அமைப்பும் பயன்பாடும் ஒன்றுக்கொன்று தொடர்புபடுத்தப்பட்டு அமைந்தால் தான் கருத்துப்புலப்பாடு ஆற்றல் மிகுந்த வகையில் அமையும் என்று கருதப்படுகிறது. அதேபோன்று நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள் போன்றவற்றின் மூலம் கருத்துப் பரிமாற்றம் நிகழும் போது மொழி, கலை போன்றவற்றின் கூறுகள் தொடர்பு படுத்தப் பட்டுப் பயன்பாட்டில் அமையுமாறு செய்ய வேண்டும். இதற்கும் சில கொள்கைகளும் உத்திகளும் தேவையாகின்றன. ஆகவே சமுதாய ஏற்பு மற்றும் சமுதாய முக்கியத்துவம் கருதி இதுபோன்ற கருத்துப்புலப்பாட்டு நெறிமுறையைப் பின்பற்ற வேண்டியது அவசியமாகிறது. இன்றையச் சூழலில் வளர்ச்சி, மாற்றம் போன்றவற்றின் அடிப்படையில் கருத்துப் பரிமாற்ற விளக்கங்கள் சிறப்பிடம் பெற்று வருவதைப் பார்க்கிறோம். நாட்டுப்புறவியலும் இதற்கு விதிவிலக்கல்ல. ஆகவே இவ்வணுகுமுறை மிகவும் பயனுள்ளதாகக் கருதப்படுகிறது.

### 3.3.8 நாட்டுப்புறவியலாய்வுக்கான கோட்பாடுகளும் கொள்கைகளும்

நாட்டுப்புறவியலாய்வு எந்தெந்த வகைகளில் என்னென்ன அணுகுமுறைகளைக் கொண்டு மேற்கொள்ளப்பட்டு வருகிறது. மேற்கொள்ளப்பட வேண்டும்

என்று மேலே குறிப்பிட்டோம். இப்பகுதியில் ஒவ்வொரு அணுகுமுறையின் கீழும் பயன்படுத்தப்பட்டு வரும் சில முக்கியமான கோட்பாடுகளும் கொள்கைகளும் தெளிவுபடுத்தப்படுகின்றன.

நாட்டுப்புறவியலாய்வில் பின்பற்றப்பட்டு வரும் கோட்பாடுகளிலும் கொள்கைகளிலும் அண்மைக் காலங்களில் மாற்றங்கள் நிகழ்ந்தே வந்துள்ளன. பின்பற்றப்படும் ஆய்வு அணுகுமுறைகள் ஓரளவு மாறுபட்டும் முரண்பட்டும் தோன்றினாலும் அதில் செயல்படுத்தப்படும் கோட்பாடுகள் பெரும்பாலும் சூழலுக்கு ஏற்பவும் மாறியே அமைந்து வருகின்றன. இதனால் மேற்கொள்ளப்படும் ஆய்வில் தனித்தன்மையை ஓரளவாவது காட்ட முடிகிறது. மேலும் இத்தகைய ஆய்வுகள், அணுகுமுறைகளின் திறனை அதிகரித்துக் கொள்வதற்கு மிகவும் பயன்படும்.

நாட்டுப்புறவியலாய்வுகளில் சமுதாய ஏற்பு மற்றும் சமுதாய நிறுவனங்களை (social institutions) நியாயப்படுத்துதல், சமுதாய அமைப்பு, பண்பாடு ஆகியவற்றைப் பிரதிபலித்தல் போன்றவற்றை இணைத்தும் ஆய்வு மேற்கொள்ள வேண்டும். இத்தகைய இணைப்பு ஆய்வின் திறனை அதிகப்படுத்த உதவுவதோடு, மேற்கொள்ளப்படும் ஆய்வானது சமுதாய முக்கியத்துவம் (social relevance) வாய்ந்த ஒன்றாகக் கருதப்படுவதற்கும் வழிவகுக்கும் என நம்பலாம். அமைப்பியலாய்வு என்பது மொழியியலிலிருந்து எடுத்தாளப்படுவது என்றாலும், இன்று இத்தகைய ஆய்விற்குப் பிற துறைகளிலும் சமுதாய ஏற்பு கிடைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இதே போன்று வேறு சில துறைகளிலும் நாம் இந்நிலையைக் காண முடியும்.

சில அடிப்படைச் சிந்தனைகளைக் கொள்கைகளின் வழியாக அல்லது கோட்பாடுகளின் வழியாக வலியுறுத்தும் போது அதற்கேற்ற தரவு (data), ஆதாரம் (evidence) போன்றவை ஆய்வாளருக்குத் தேவைப்படுகின்றன. இதுபோன்ற ஆதாரங்களும் தரவுகளும் நமக்குப் பிற துறை ஆய்வுகளிலிருந்தும் கிடைக்க வாய்ப்புண்டு. இத்தகைய வாய்ப்புச் சூழலை உருவாக்க நமக்குச் சில செயல்முறைத் திட்டங்கள் அல்லது நெறி முறைகள் தேவைப்படுகின்றன.

சமுதாய ஆய்வுகளில் செய்திப் பரிமாற்றக் கோட்பாடு இன்று மிக முக்கியமான இடத்தைப் பெற்று விளங்குகிறது. இதற்குக் காரணம், எந்தவொரு கருத்தும் பரவலாக்கப்பட வேண்டும், சிந்தனைக்குரிய ஒன்றாக ஆக்கப்படவேண்டும், அனைவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒன்றாக அமைதல் வேண்டும் என்பதே. எடுத்துக்காட்டாக புராணங்கள், அசுரர், தேவர் போன்றோரது கதைகளைக் குறிப்பிட்டாலும் அவற்றில் பல்வேறு சமுதாயச் செய்திகள் மறைந்திருப்பதை நம்மால் பார்க்க முடிகிறது. இத்தகைய செய்திகளை,

(1) ஆய்வின் வழி ஆய்வாளர் வெளிக் கொணர வேண்டும்.

(2) அவ்வாறு செய்வதன் மூலம் சமுதாயத்தைச் சார்ந்த பல்வேறு பிரிவினரும் பயனுறும் வகையில் ஆய்வினை அமைக்க வழிமுறைகளைக் குறிப்பிட வேண்டும். இவ்வாறு ஆய்வுகள் மேற்கொள்ளப்படுவதால் சில சிந்தனையமைப்புக்களின் உருவாக்கம் ஏற்படுகிறது.

சிந்தனை அமைப்புக்கள் பகுத்தறிவுக்கு மாறான கருத்துக்கள் என்று எண்ணப்படுபவைகளையும் தருக்க ரீதியில் அணுகத் துணையாக அமைகின்றன. மேலும் இதுபோன்ற புராணக் கருத்துக்கள், பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்துக்கள் போன்றவை எந்தவொரு சமுதாயத்திலும் காலங்காலமாக இருந்து வருபவையே. இவற்றை அறவே புறக்கணிப்பது என்பது நடைமுறைச் சாத்தியமானதாகத் தோன்றவில்லை. என்றாலும் இவற்றை ஆய்வு பூர்வமாகப் பகுத்து அறியும் போது சிலவற்றைப் புறக்கணிக்கவோ விட்டு விடவோ சமுதாயத்தால் முடியும். இதுதான் சமுதாய ஏற்பு என்று குறிப்பிடப்படுகிறது. சில கருத்துக்களைச் சமுதாயம் ஏற்காமல் முழுவதுமாகவோ, ஓரளவோ புறக்கணிக்கவே செய்யும். இதற்கு ஒரு சமுதாயக் காரணம் உள்ளது. அதாவது எந்தவொரு மாற்றமும் திடீரென நிகழாமல் மெல்லமெல்ல ஏற்பட்டால் அல்லது ஏற்படுத்தப்பட்டால் அது சமுதாய ஏற்பினைப் பெறுவதில் எந்தவொரு சிரமமும் இருக்காது. இதைக் கருத்தில்கொண்டு சமுதாய மாற்றங்கள் மற்றும் ஆய்வு முறைகள் அணுகப்படுகின்றன. நாட்டுப்புறவியல் இலக்கியங்களில் அல்லது கலைகளில் சில கூறுகள் வலிமையான கூறுகளாகவும் சில வலிமையற்ற மென்மைக் கூறுகளாகவும் இருக்கக் காண்கிறோம். எடுத்துக் காட்டாக சில சமுதாயப் பிரிவுகளில் நம்பிக்கைகள், சடங்குகள் போன்றவை வலிமையானவையாக இருக்கக் காண்கிறோம். சில ஆதிவாசிப் பிரிவினர் அவர்தம் சமுதாயக் கட்டுப்பாடுகளில் மிகவும் தீவிரமாகவும் உறுதியாகவும் இருக்கக் காண்கிறோம். இன்னும் சில சமுதாயப் பிரிவுகளில் இக்காலப் புதுமையாக்கத்தின் தாக்கத்தால் இதுபோன்ற பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் போன்றவையும், சமுதாயக் கட்டுக்கோப்பும் அவ்வளவு உறுதியாக மேற்கொள்ளப்படா

மல் ஒருவகை நெகிழ்ச்சியோடு (flexibility) இருப்ப தைப் பார்க்கிறோம். இதற்கெல்லாம் மாறிவரும் சமுதாயச் சூழலும் பண்பாட்டுத் தாக்கமும் புதுமையாக் கத்தின் தாக்கமும் வேகமாக ஏற்பட்டுவரும் அறிவியல் வளர்ச்சியும் ஏதேனும் ஒரு வகையில் காரணங்களாக அமைந்து வருகின்றன. இது நமக்குத் தோன்றும் உணர்வு (subjectivity) என்றாலும் இந்த உணர் வினை நாம் நிரூபிக்க முடியும். அவ்வாறு நிரூபிக்க முயலும்போது நமக்கு ஆய்வு அணுகுமுறைகளும் அவற்றில் பின்பற்றப்படும் கொள்கைகளும் கோட்பாடு களும் மிகவும் இன்றியமையாதனவாக அமைகின்றன. ஆகவே நாட்டுப்புறவியலாய்விற்கென சில நெறிமுறை களையும், கொள்கைகளையும் வரையறை செய்து கொள்வது எதிர்கால ஆய்வுப் பணிக்கு மிகவும் துணை நிற்கும் என உறுதியாக நம்பலாம்.

## 3.4 நாட்டுப்புறவியலாய்வின் தேவையும் இன்றி யமையாமையும்

இன்றைய நிலையில் நாட்டுப்புறவியலாய்வு என்பது தனித்து மேற்கொள்ளப்படுவதல்ல. பிற துறை அறிவோடும் ஈடுபாட்டோடும் மேற்கொள்ளப் பட வேண்டியது. சமுதாயமும் தனித்தே இயங்குவ தில்லை. பிற சமுதாயங்களுடனும் பிற மொழிகளின் தொடர்பு கொண்டும் பல்துறை வளர்ச்சியினைக் குறிக் கோளாகக் கொண்டும் இயங்கி வருகிறது. இந்த இயக்கம் தேக்கமின்றித் தொடர்ந்து பல வழிகளிலும் பல்வேறு துறைகளிலும் மாற்றமும் வளர்ச்சியும் பெற்று முன்னேறி வருகிறது. இத்தகைய சமுதாய வாழ்விற் கும் வளர்ச்சிக்கும் தேவையான திட்டங்கள் தீட்டப்பட்டு அவை வளர்ச்சிப் பணிகளுக்காக ஈடுபடுத்தப்பட்டும் வருகின்றன. உலகின் ஏதோ ஒரு பகுதியில் ஏற்படும் வளர்ச்சி, மாற்றம் போன்றவை பிறபகுதிகளுக்கும்

விரைவிலும் முறையாகவும் வந்தடைவதைப் பார்க்கிறோம். இதற்காகச் செய்தித் தொடர்பு மூலங்களும் பிறவும் செயல்படுத்தப்படுகின்றன. இச்செய்தித் தொடர்பு மூலங்களில் பயன்படுத்தப்பட்டு வரும் மொழி, காட்சி, ஒலி போன்ற அமைப்புக்களில் தேவையான கூறுகள் சேர்க்கப்பட்டு, செய்திகள், கருத்துக்கள் போன்றவை பரவலாக்கம் (propagation) பெறுகின்றன. பரவலாக்கம் எந்தவொரு திட்டத்தின் வெற்றிக்கும் கருத்து வெளிப்பாட்டிற்கும் மிகவும் தேவையானது. கருத்துக்கள் விரைவாகவும், நிறைவாகவும், முறையாகவும், ஆற்றல் மிக்க வகையிலும் சமுதாயத்தைச் சென்றடைந்தால்தான் சமுதாய இயக்கம் முழுமை பெறக் கூடிய சூழ்நிலை உருவாகும்.

இந்தியா போன்ற வளர்ந்து வரும் கல்வியறிவு விழுக்காடு மிகக் குறைவாக உள்ள, அதுவும் கிராமப் புறச் சமுதாயத்தின் விழுக்காடு மிக அதிகமாக உள்ள நாட்டில வளர்ச்சிப் பணிகள் பெரிய அளவில் மேற்கொள்ளப்படவேண்டிய சூழல் இருந்து வருவதை நாம் அறிவோம். வளர்ச்சிப் பணிகளுக்காக மேல் நிலையில், அதாவது அரசு மட்டத்தில் திட்டங்கள் வகுக்கப்பட்டு அவை பல்வேறு படிம நிலைகளில் கீழ்மட்டம் வரை செயற்பாட்டிற்குக் கொண்டு வரப்படுகின்றன. இன்றைய, நாம் வாழும் நூற்றாண்டு புதுமைகளின் பொற்காலம் எனப்போற்றப்படுகிறது. எத்தனையோ புது எண்ணங்கள், புதுக் கருவிகள், புது முறைகள், புதுக் கண்டுபிடிப்புக்கள் போன்றவை அறிவியலுலகின் கொடையால் நமக்குக் கிடைத்து வருகின்றன. உடனுக்குடன் கிடைக்கக் கூடிய வாய்ப்பும் வசதியும் கூட இன்று வேகமாக ஏற்பட்டு வருகிறது. எனினும் வளர்ந்து விட்ட சில நாடுகளோடும் சமுதாயங்களோடும் நம்மை ஒப்பிட்டு நோக்குகையில் நாம் குறைந்தது

25 ஆண்டுகளாவது வளர்ச்சிப் பாதையில் பின்தங்கி யுள்ளது தெரிய வருகிறது என்ற கருத்து சொல்லப் பட்டு வருகிறது. இக்கருத்தில் உண்மையிருப்பதை நாம் நமது சமுதாய, அரசியல், பொருளாதார, கல்வி, தொழில் பின்னணியைக் கொண்டு பார்க்கும் போது ஓரளவிற்குப் புரிந்து கொள்ள முடியும். இத்தகைய நிலையில் நாம் பல்வேறு ஆய்வுகளைப் பல்துறை வளர்ச் சிக்காக மேற்கொண்டு வருகிறோம்.

இவ்வாய்வுகளின் பயனாக நாம் பெறும் கண்டு பிடிப்புக்களை நமது செயல் திட்டத்தில் புகுத்தியும் வருகிறோம். எனினும் நம்முடைய முயற்சிகள் எந்த அளவிற்குப் பயனளித்துள்ளன என்பது பற்றிய மதிப் பீடு நமக்குத் திருப்தியை அளிப்பதாக இல்லை. இத்த கைய திருப்தியற்ற நிலைக்குக் காரணம் இல்லாமலும் இல்லை. குறிப்பாக இரண்டு நிலைகளில் இதனைப் பாகுபாடு செய்து குறிப்பிடலாம். ஒன்று நமது கொள்கை உருவாக்கத் திட்டத்தில் (policy planning) உள்ள குறைகள்; மற்றொன்று உருவாக்கப்பட்ட கொள்கைகளைச் செயல்படுத்தும் திட்டத்தில் (imple- mentation process) காணப்படும் குறைகள். கொள் கைகளைத் திட்டமிடுவோர் அவற்றை உருவாக்கும் போது அக்கொள்கைகள் எவ்வகைச் சூழலில், எந்த வகையில், மக்களுக்காக எவ்வெப் பணிகளுக்காக உரு வாக்கப்படுகின்றன என்றமையப் பின்னணியை அடிப் படையாகக் கொண்டு நிர்ணயிக்க வேண்டும். இவ் வாறு நிர்ணயிக்கப்பட்ட கொள்கைகளும் கோட்பாடு களும் அச்சமுதாயத்தில் நடைமுறையிலிருந்து வரும் செயல்முறை அமைப்புக்களையும், பிற மூலங்களையும் பயன்படுத்திச் செயற்பாட்டினை வலுப்படுத்த உதவ வேண்டும். இதைத்தான் ஆங்கிலத்தில் குறிப்பிடும்

போது ' the success of a policy depends heavily upon the process of implementation ' என்று குறிப்பிடுவார்கள்.[6]

ஆகவே செயல்முறைத் திட்டம் வகுக்கப்படும் போது அதில் ஈடுபடுத்தச் சில நெறிமுறைகளையும் (techniques) மூலங்களையும் (media) அச்சமுதாயத் தின் கண்கொண்டே தீர்மானிக்க வேண்டும். அதா வது அன்றைய நடைமுறையில் அச்சமுதாயத்தின் நிலையென்ன, அச்சமுதாயத்திற்கு எது போன்ற வழி முறைகள் மிகவும் பயனுள்ளதாக அமையும், அச்சமு தாயம் எந்த வகைகளிலெல்லாம் முன்னேறி வந்துள் ளது, அதற்காக அதன் மரபினை எவ்வாறெல்லாம் பயன்படுத்தி வந்துள்ளது, அவ்வாறு பயன்படுத்திய தால் எந்தெந்த வகையில் முன்னேற்றம் கண்டுள்ளது என்பதையெல்லாம் முறையாக மதிப்பீடு செய்து, அம் மதிப்பீட்டினடிப்படையில் செயல்முறைத் திட்டத்தினை ஆற்றல் மிக்கதாக வலுப்படுத்தி, அதனை நடை முறைக்குக் கொண்டு வரவேண்டும். இவ்வாறு செய் வதன் மூலம் அச்சமுதாயத்தின் மரபு முறைகள் வழக் கிற்கு வரும்; அச்சமுதாயத்தால் பின்பற்றப்பட எளி தாக அமையும். இவ்வாறு எளிதாக வழிமுறைகள் அமையும்போது சமுதாயத்தின் இயக்கத்தில் தங்கு தடைகள், பிரச்சினைகள் அதிகம் தோன்றா. இந்த வகையான செயற்பாட்டினை நாம் முன்வைக்கும் போதே நமது சமுதாய மேம்பாட்டுத் திட்டங்கள் அனைவரது கவனத்தையும் ஈர்ப்பனவாகவும் வலுவா னதாகவும் அமையும்.

இன்று நாம் வேகமாக செயற்படுத்தி வரும் குடும்ப நலத்திட்டங்கள், வேளாண்மைத் திட்டங்கள்,

சிறு தொழில் வளர்ச்சித் திட்டங்கள், வயது வந்தோர் கல்வித்திட்டம் போன்றவை நமது சமுதாயத்தின் வளர்ச்சிக்கு மிகவும் தேவையானவையாகும். இத்திட்டங்களின் மூலம் நாம் எதிர்பார்க்கும் பயன் பரந்துபட்ட சமுதாயத்திற்குக் கிடைக்க நாம் நமது திட்டங்களில் சில இன்றியமையாத மாற்றங்களைச் செய்து கொள்ள வேண்டிய சூழ்நிலையில் இன்று இருக்கிறோம். திட்டங்களுக்குத் தேவையான நிதியினை அரசு வழங்கினாலும் அதைக் கொண்டு மேற்கொள்ளப்படும் செயல்முறைத் திட்டம் சரியாக இயக்கப்படவில்லை அல்லது இயங்கவில்லையென்றால் அதனால் திட்டம் சரிவர வெற்றி பெறாது. ஆகவே திட்டத்தின் எதிர்பார்ப்பினைத் (expected outcome) திட்டத்தில் பயன்படுத்தப்படும் செயல் முறைகளை, திட்டத்தின் பயன்களை நாம் சமுதாயத்திற்கு முன் கூட்டியே உரிய முறையில் எடுத்துச் சொல்ல வேண்டும். அதாவது சமுதாயத்திற்கு அத்திட்டத்தைப் பற்றிய அடிப்படைத் தகவல்கள் வெளிப்படையாகத் தெரியுமாறு செய்ய வேண்டும். இதற்காகக் கருத்துப் பரிமாற்றம் பரந்த அளவில் முறையாக நடைபெற வேண்டும். கருத்துப் பரவலாக்கம் நிறைவாகவும், விரைவாகவும், ஆற்றல் மிக்க வகையிலும் நடைபெற அதில் பயன்படுத்தப்பெறும் கருவிகள், மூலங்கள் மற்றும் அதில் பங்கேற்போர் என்ற பலவும் சிறப்பாக அமைதல் நல்லது.

நம் மக்களுக்கு, குறிப்பாக நாட்டுப்புறச் சமுதாயத்திற்குக் கருத்துக்கள் பரவலாக்கம் செய்யப்படும் போது அவர்களிடையே பயன்பாட்டிலிருந்து வரும் மொழி, அவர்களது நாட்டுப்புற இலக்கிய வகைகள், அவர்களது மரபுக்கலைகள், அவர்களது பண்பாட்டுக்

கூறுகள், அவர்களது பிற கருத்துப் பரிமாற்றச் சாத னங்கள் போன்றவற்றின் மூலமே செய்ய முனைய வேண்டும். இத்தகைய முனைப்பு, கருத்துப் பரிமாற் றத்தை ஆற்றல் மிக்க வகையில் செய்வதோடு செயற் திட்டம் முழுமையானதாகவும் அவர்களது இயக்கத்திற் கான சொந்தத் திட்டமாகவும் அமைந்து விடும் நிலை ஏற்படும். ஆங்கிலத்தில் குறிப்பிடப்படுவது போல " the whole system if it is made indigeneous, it will function more efficiently in the process of propagation or popularisation of ideas, etc " ஆகவே இதை மனதில் கொண்டு நோக்கும்போது ஒரு சமுதாயத்தின் வளர்ச்சிப் போக்கின் மேம்பாட்டிற்கு மேலே குறிப்பிட்டவாறு அச்சமுதாயத்தைச் சார்ந்த பங்கேற்போர் முதல் வழிமுறைகள் வரை அச்சமுதாயம் சார்ந்தவையாகவே இருத்தல் சிறந்தது என்பது தெரிய வருகிறது. இதனால் மக்களுக்கு ஈடுபாடும் விழிப்பு ணர்வும் எதிர்பார்த்த அளவிற்கு ஏற்படக்கூடிய சூழ லும் தோன்றுகிறது.

இன்றைய செய்திப்பரிமாற்ற மூலங்களான பத்திரிகை, சஞ்சிகை, வானொலி, தொலைக்காட்சி, விளம்பரம், அறிவிப்புக்கள் போன்ற பலவற்றிலும் செய்திப் பரிமாற்றம் பெருமளவில் நடந்து வருகிறது என்றாலும் அவற்றை வெளிப்படுத்தும் நிலையில் நாட்டுப்புற மூலங்கள் சிறந்த பயனைப் பெற ஏற்ற கருவிகளாக அமையும் என எதிர்பார்க்கலாம். மூலங் கள் பொதுவாகவே சில கொள்கைகளின் அடிப்படை யில் இயங்கி வருபவை. அவற்றின் இயக்கம் மேன்மை யுற அதன் செயல்முறைத் திட்டமே முதன்மையான தாகும் - முக்கியமானதாகும்.

மேலே குறிப்பிட்டவாறு சமுதாய வளர்ச்சி என்பது தனித்த ஒன்றல்ல என்பதும் அது சமுதாயத்தின் பல நிலைகளோடு தொடர்பு கொண்டது; ஒன்றியது என்பதும் தெளிவாகிறது. அதோடு சமுதாயப் பணிகளுக்காகப் பயன்படக் கூடியவை என்று நாம் கருதும் நாட்டுப்புறவியல் கூறுகள், பொருளமைப்புக்கள், கலைகள் போன்றவையெல்லாம் உரிய முறையில் சமுதாய வளர்ச்சிப் பணிகளில் ஈடுபடுத்தப்பட வேண்டியவை என்பதும் தெளிவாகிறது.

## 3.5 மொழி, இலக்கியம், சமுதாயம் மற்றும் பிற துறைப் படிப்பிலும் ஆய்விலும் நாட்டுப்புறவியல் பெறும் இடம்

இன்றைய நிலையில் கல்வி வளர்ச்சி என்பது இரு வகைகளில் - இரு நிலைகளில் விளக்கப்படுகிறது.

(1) ஒரு குறிப்பிட்ட துறை சார்ந்த கல்வி

(2) அத்துறை பிற துறைகளோடு இணைந்த நிலையில் மேற்கொள்ளப்படும் கல்வி.

மொழி மற்றும் இலக்கியக் கல்வி வாயிலாக சமுதாயம் பன்னோக்குப் பார்வையில் விளக்கப்படுகிறது. அதாவது சமுதாயத்தின் அமைப்பு, இயக்கம் போன்றவை பல நிலைகளில் கண்டறியப்பட்டு இலக்கியத்தின் வாயிலாக எழுதப்படுகிறது, அல்லது எடுத்துச் சொல்லப்படுகின்றது. இதேபோல பல துறைகளிலும் நாம் பெறும் கல்வியறிவு சமுதாய வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் சில நேரங்களில் அடித்தளமாகவும் பல நேரங்களில் மாற்றத்தை ஏற்படுத்தவும், புதுமையைக் காணவும் வழி வகுக்கின்றது. இந்தப் பின்னணியில் நாம் கல்வி

வளர்ச்சிக்காகச் சில திட்டங்களை மேற்கொண்டு வருகி றோம். நம் நாடு முப்பது விழுக்காட்டு அளவே கல்வி யறிவு கொண்டதாகும். இந்நிலையில் நாம் மேற் கொள்ளும் கல்விப்பணி நேரடியாகச் சமுதாயத்திற்குப் பயன் தரும் வகையில் அமைந்தால்தான் அதன் மூலம் வளர்ச்சி மேம்படும். ஒவ்வொரு துறையிலும் மேற் கொள்ளப்படும் ஆய்வுகள் தனித்தனியாக மேற்கொள் ளப்பட்டு வந்தாலும் இன்று 'multi disciplinary research', 'inter disciplinary research' என்று சொல்லப்படும் பல்துறைகளின்/இரு துறைகளின் ஒருங் கிணைந்த ஆய்வு வெகுவாகத் தேவைப்படுவதோடு, மேற்கொள்ளப்பட்டும் வருகிறது. எடுத்துக்காட்டாக வேதியியல், உயிரியல், மருத்துவ இயல், சமுதாய வியல், மொழியியல், இலக்கியம், மானிடவியல், உள வியல் என்றெல்லாம் இரு துறை சார்ந்த ஆய்வுகள் இன்றைய வளர்ச்சிக்கு வித்திட்டு வருகின்றன. இவ் வாய்வுகளின் முடிவுகள் பரவலாக்கம் செய்யப்படுவது இன்றைய சமுதாயத் தேவையாகும்.

ஆகவே இலக்கிய வகைகள், கலைகள் போன் றவை இப்பணியில் ஓரளவு பங்கினைப் பெற்று விளங்கு கின்றன. கதை, கட்டுரை, நாவல், உரையாடல், கவிதை, நாடகம் என்ற வகைகளின் மூலமும் கூத்து, இசை, நாட்டியம் போன்ற கலைகளின் மூலமும் கல் வித்துறை சார்ந்த கருத்துக்கள் பரவலாக்கம் பெற்று வருகின்றன. வயதுவந்தோர்க்கு இதுபோன்ற கலை, இலக்கிய வகைகளின் வாயிலாக இன்று ஓரளவு வாழ்க்கைக் கல்வி தரப்பட்டு வருவதை அறிய முடி கிறது. அதுவும் குறிப்பாக நாட்டுப்புற இலக்கிய

வகைகளையும் மரபுக்கலைகளையும் கொண்டு அமை வது, இப்பணி இன்னும் சிறப்பாக அமைய வழி வகுக் கும் என எதிர்பார்க்கலாம்.

எந்தவொரு கோட்பாடும் அறிமுகப்படுத்தப் பட்டு, அதன் பின்னர் தக்க முறையிலே சமுதாய ஏற்பு பெறும் வகையில் பரவலாக்கம் செய்யப்பட்டால்தான் அதன் பயன்பாடும் இன்றியமையாமையும் பலருக்கும் தெளிவாகும். இதற்கு நாட்டுப்புறக் கலைகள் உற்ற பரவலாக்கக் கருவிகளாக அமையும் என நம்பலாம். ஒரே கருத்தை இலக்கியத்தின் வாயிலாகவும் கலை களின் வாயிலாகவும் எடுத்துச் சொல்லும் பொழுது, பின்னது விரைந்த செயல்பாட்டிற்கு உகந்ததாக அமை வதை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். எடுத் துக்காட்டாகத் திரைப்படம் மூலம் வெளிப்படும் கருத் துக்கள், விளம்பரங்கள், போதனைகள் போன்றவை மக்கள் மனத்திலே எளிதில் ஆழமாக ஊன்றி விடுவ தைப் பார்க்க முடிகிறது. ஆனால் இலக்கிய வடிவில் இடம் பெறும் கருத்துக்கள், ஒரு சிலவே அத்தகைய நிலையினை மக்கள் மனத்தில் ஏற்படுத்த முடிகிறது. இந்த முறையில் நோக்கும்போது ஆரம்பக் கல்வியிலும் உயர் கல்வியிலும் வாழ்க்கைக் கல்வியிலும் நாம் ஈடு படுத்தும் மூலங்கள் தன்னிறைவு கொண்டவையாக வும் ஆற்றலைப் பெருக்குவனவாகவும் அமைய வேண் டியது அவசியம் என்பது தெரிகிறது. நாட்டுப்புறவிய லின் வளர்ச்சி இதுபோன்ற சூழ்நிலையை உருவாக் கிப் பல்துறை வளர்ச்சி மேம்படவும் அதனால் சமுதா யங்களுக்கிடையே புரிந்துணர்வு (understanding) ஏற்படவும் அதன் மூலம் சமுதாய ஒருங்கிணைப்பு (social integration) ஏற்படவும் நிச்சயம் வழி வகுக் கும் என நம்பலாம்.

நாட்டுப்புறவியல் கல்வியே ஒரு துறை சார்ந்த தல்ல. முழுமையான நாட்டுப்புறவியல் கல்வி பல்துறை சார்ந்தது என்று முன்னரே குறிப்பிட்டோம். வெறும் இலக்கியக் கல்வியாக, ஆய்வாகத் தொடங்கப்பட்டதே நாட்டுப்புறவியல் பற்றிய கல்வி. இலக்கியமாகத் தொகுக்கப்பட்ட பின்னர் அதன் அமைப்பு, வகைகள், பயன்பாடு, சமுதாயத் தொடர்பு, பயன் போன்றவை பல துறைகளின் உதவியோடு விளக்கப்படலாயின. மொழியியல் தொடர்பால் அமைப்பியலாய்வு இதற்குக் கிட்டியது. நுண்கலையியல் தொடர்பால் நாட்டுப்புறக் கலைகளின் சிறப்பு வெளிப்படலாயிற்று. செய்திப் பரிமாற்றத்துறையின் தொடர்பால் இவை கருத்துப் புலப்பாட்டில் கொண்டுள்ள எளிமை, நிலைபேறு, புதுமை போன்றவை வெளிப்படலாயின. அறிவியல் தொடர்பால் நாட்டுப்புற நம்பிக்கைகள், மருந்துகள், விளையாட்டுகள் போன்றவற்றின் பண்பும் பயனும் வெளிப்படலாயின. இவ்வாறு ஒவ்வொரு துறையறி வும் நர்ட்டுப்புறவியலாய்விற்கு ஏதேனும் ஒரு வகையில் துணையாய் இருந்து வருவதைக்காண முடிகிறது.

புதுமைகள் தோன்றத் தோன்ற அவையனைத் தும் சமுதாயத்தில் வந்து சேரும் நிலை ஏற்படுகிறது. இதனால் சமுதாய மாற்றம் ஏற்பட்டு, சமுதாய வளர்ச்சி ஏற்படுகிறது. சமுதாய வளர்ச்சி மனிதனின் பன்முக நோக்கினை ஊக்கப்படுத்தி, அவனது ஆற்ற லைப் பெருக்கி சமுதாயத்தின் சீரான இயக்கத்திற்கு அடிகோலுகிறது. இவ்வாறு அறிவுத்துறைகள், அவற் றின் தொடர்புகள் என நாம் ஒன்றோடு ஒன்றினை இணைத்துப் பார்க்கும் போது பல்துறைகளிலும் நாட் டுப்புறவியலின் பங்கும் பணியும் சீராக அமைந்து வருவதை நேரடியாகக் காணமுடிகிறது.

## 3.6 நாட்டுப்புறவியல் ஆய்வு-அமைப்பு, மூலங்கள் இவற்றின் ஆய்விற்கான அடிப்படைத் தேவைகள்

ஓர் ஆய்வினை மேற்கொள்ளுமுன் ஆய்வு முன்னோட்டமாக ஒரு மாதிரி ஆய்வினை (pilot study/ research) மேற்கொள்வது வழக்கம். இவ்வாறு மேற்கொள்வதன் மூலம் முழுமையான ஆய்விற்கான சில குறிப்புக்கள், அணுகுமுறையில் செய்யப்பட வேண்டிய திருத்தங்கள், நிறைகுறைகள் போன்றவை தெரிய வரும். இத்தகைய முன்னோடி மாதிரி ஆய்வு சரியாக அமையாத நிலையில் முழுமையான ஆய்வினை நாம் எதிர்பார்க்கும் முறையில் மேற்கொள்வது எளிதாக அமையாது.

நாட்டுப்புறவியல் ஆய்வில் அமைப்பியல் அடிப்படையில் இத்தகைய முன்னோடி ஆய்வுகளை நாம் மேற்கொள்ள வேண்டியது அவசியமாகிறது. இதற்குத் தேவையானவை மாதிரி வினாப்பட்டியல், நாட்டுப்புற இலக்கியம், அவை வழங்கும் இடம் போன்றவை பற்றிய பின்னணி, களப்பணி போன்றவையாகும். முன்னோடி ஆய்வின் அனுபவத்தைக் கொண்டு நாம் வினாப்பட்டியலில் காணப்படும் குறைகளைக் களைந்து நிறைவுசெய்ய இயலும். அதே போன்று தகவல்களைச் சேகரிப்பதிலும் சில மாற்றங்களைச் செய்து கொள்ள முடியும். எடுத்துக் காட்டாக, முதன்மை வினாவிற்குத் (main question) தக்வலாளிகள் தரும் பதிலை அடிப்படையாக வைத்துக்கொண்டு மேலும் அது பற்றிய அதிகமான தகவல்களைத் திரட்டச் சில துணை வினாக்களைக் (sub-questions) கேட்பதன் மூலம் பெறமுடியும். இது ஒரு வகையில் நமக்குத் தேவையான தரவையும் நிறைவான தரவையும் பெற்றுத் தரும் வகையில் அமையும்.

நாட்டுப்புறவியலாய்வில் முக்கியமான இரண்டு வகைகள் சிறப்பிடம் வகிக்கின்றன.

1. அதன் அமைப்பு
2. ஆய்விற்கான மூலங்கள்

அமைப்பு தொடர்பான ஆய்வு இரண்டு வகைகளில் அமையும். அவற்றில் ஒன்று பொதுப்படையான அமைப்பு; மற்றொன்று சிறப்பு அமைப்பு. முன்னதில் பொதுமைக் கூறுகள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன. பின்னதில் சிறப்புக் கூறுகள் தனிமைப்படுத்தப்பட்டு ஆய்வு செய்யப்படுகின்றன. எடுத்துக் காட்டாக நாட்டுப்புற இலக்கியத்தில் பொதுவாகக் காணப்படும் பண்புகள் அமைப்பில் வெளிப்படக் காண்கிறோம். அதாவது கதைகளிலும் கதைப் பாடல்களிலும் சில பொதுமைக் கூறுகள் நிறைந்திருக்கும். இதுபோன்று பொதுமைக் கூறுகளை விளக்க அடிப்படையமைப்பு வரையறை செய்யப்படுகின்றது. இத்தகைய ஆய்வுகளில் பொருள் பற்றிய ஆய்வு இடம் பெறுகிறது. இதில் 'Content Analysis' என்று சொல்லப்படும் உட்கருத்துக்கூறு சிறப்பிடம் வகிக்கிறது. அதாவது கதைப் பாடல் ஒன்றில் இடம் பெறும் நாயகன் - நாயகி போன்றோர் தொடர்பான அனைத்துக் கருத்துக்களையும் விளக்குவது இத்தகைய ஆய்வு.

சிறப்பு அமைப்பு என்பது ஒரு குறிப்பிட்ட இலக்கிய வகையில் அல்லது கலையில் அல்லது நம்பிக்கைகளில் காணப்படும் அமைப்பு விளக்கமாகும். எடுத்துக்காட்டாக மலைவாழ் மக்களது நம்பிக்கைகள், குறிப்பிட்ட சமுதாயப் பிரிவினரது பண்பாட்டில் காணப்படும் சிறப்பம்சங்கள், பல்வேறுபட்ட தொழில்களைச் செய்வோரது பண்பாடு - சமுதாய அமைப்பு

ஆகியவற்றில் காணப்படும் தனிமைக் கூறுகள் போன்று காணப்படும் அமைப்புக்களைச் சிறப்பாக விளக்குவது இத்தகைய ஆய்வாகும்.

அமைப்பைப்பற்றி ஆராயும் போது அதற்கான தரவுகளைத் தரும் மூலங்கள் மற்றும் அந்த ஆய்வோடு தொடர்புடைய மூலங்கள் ஆகியவற்றிலிருந்து நாம் நமக்குத் தேவையான செய்திகளைத் தெரிவு செய்தோ அப்படியேவோ பயன்படுத்த வேண்டியதாகிறது. முதன்மை மூலம், இரண்டாவது மூலம் என்று இவற்றைப் பாகுபாடு செய்வர். இவற்றிலிருந்து ஆய்விற்குத் தேவையான தரவுகள் தெரிந்தெடுக்கப்படுகின்றன. இவற்றோடு உற்று நோக்கல் (observation method) முறையைப் பயன்படுத்தியும் தரவு திரட்டுதல் ஒரு விதிமுறையாக இன்று இருந்து வருகிறது. தகவல்கள் திரட்டும்போது இரு வகையான சமுதாயச் சூழலை அனைவரும் எதிர்கொள்கின்றனர். ஒன்று கவனமாக இருக்கும் சூழலில் (careful context) வெளிப்படுத்தப்படுவது. மற்றொன்று கட்டிலாச் சூழலில் (casual context) வெளிப்படுத்தப்படுவது. மொழியியல் கள ஆய்வுகளில் இதுபோன்ற தரவு சேகரித்தல் முக்கியமான வழிமுறைகளாகப் பின்பற்றப்பட்டு வருகின்றன. முன்னோடியாய்வினை மேற்கொள்வதைப் போலவே முழுமையான ஆய்வையும் குறிக்கோள்களை அடையும் வகையில் உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். இவ்வாறு உறுதிப்படுத்திக் கொண்டபின் நம்மிடையே இருந்து வரும் பல்வேறு வகையான நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள் போன்றவற்றைக்குறித்த தரவுகளைச் சேகரிக்க வேண்டும். இதுபோன்ற தகவல்களைச் சேகரிப்பதற்குப் போதிய காலம், மூலங்களின் பயன்பாடு போன்றவை சரியாக அமையாதபொழுது நேரடியான தகவல்

சேகரிப்பு முறை மிகவும் பயனுள்ளதாக அமையும். நேரடித்தகவல் சேகரிப்பு என்பது பெரும்பாலான நாட்டுப்புறக் கலைகளைப் பொறுத்தவரை அல்லது இலக்கியங்களைப் பொறுத்தவரையில் அவ்வளவு கடினமானதல்ல. இதற்காக ஒவ்வொரு வகையான இலக்கியப் பிரிவுக்கும் அல்லது கலைக்கும் ஏற்ப தகவல் சேகரிப்பு உத்திகள் மேற்கொள்ளப்படல் வேண்டும். இவ்வுத்திகள் களப்பணிகளில் காணப்படும் சிக்கல்களை நீக்கவும் தீவிரமான கருத்துக்களைச் சேகரிக்கவும் நமக்கு வழிகாட்டுவனவாகும். இவற்றிற்கு ஏற்ப சில கருதுகோள்களை உருவாக்குவது தரவுகளின் தன்மையை நிலைநாட்டுவதற்குத் துணை செய்யும்.

களப்பணி என்பது ஒரு ஆய்வின் வெற்றிக்கு மிகவும் இன்றியமையாதது. களப்பணிக்கான கருவிகளாக ஆராய்ச்சியாளர், தகவலாளி, ஒலி-ஒளிப்பதிவு நாடாக்கள், மொழி, படங்கள் போன்றவையும் வேறு சில அளவு கோல்களும் (devices) நமக்குத் தேவைப்படுகின்றன. நல்ல தரவு சிறப்பான ஆய்வின் வெற்றிக்கு உதவுவது என்ற எண்ணம் நாட்டுப்புறவியலாய்வாளரின் கவனத்தில் நிலைத்து இருக்கவேண்டிய ஒன்றாகும். அப்பொழுதுதான் களப்பணியாளர் தேவையான தரவுகளை முறையாகத் தொகுப்பதிலேயும், தொகுத்தவற்றைப் பாகுபாடு செய்து பிரிப்பதிலேயும் (processing) அதிக கவனம் செலுத்துவார். ஆய்வாளரது கேள்விகளைச் சரியாகப் புரிந்து கொள்ளாத நிலையில் தகவலாளிகள் தவறான தகவல்களையும் சில நேரங்களில் தரக்கூடும். தவறான தரவு ஆய்வு எதிர்பார்ப்பில் குழப்பத்தை உண்டாக்கி அதனால்

நமக்கு எதிர்பார்த்த பயன் கிடைக்காமல் போகலாம். இதனை நிவர்த்தி செய்யச் சில தகவல் சேகரிப்புத் திட்டங்களை நாம் மேற்கொள்ள வேண்டியதாகிறது. குறிப்பாகப் பரப்பாய்வுத் திட்டங்கள், ஆழ்நிலையாய்வுத் திட்டங்கள் ஆகியவற்றை மேற்கொண்டு உரிய செயல்முறைப் பணிகளின் வாயிலாகத் தகவல்களைச் சேகரிக்கலாம். தகவல் சேகரிப்போர் கால மற்றும் இடப்பின்னணியை நன்கு தெரிந்து வைத்திருப்பதோடு கால அளவையும் கருத்தில் கொள்ளவேண்டும். அத்துடன் தகவல் சேகரிப்பு மையங்களில் நேச மனப்பான்மையுடன் தகவலாளிகளிடம் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அதன் பின்னரே அவர்களிடம் தேவையான தரவுகளைச் சேகரிக்க முயலவேண்டும். சில நேரங்களில் வினாப்பட்டியலில் சேர்க்கப்படாத கேள்விகளையும் கேட்டு அதற்கான பதிலைக் கேட்டறிதல் தேவையாகிறது.

பொதுவாக சேகரிக்கப்படும் கருத்துக்கள் தகவல் சேகரிப்போரின் ஆர்வம் - ஈடுபாடு மற்றும் தகவலாளி பதில் கொடுப்பதில் காட்டும் ஆர்வம் - ஈடுபாடு ஆகியவற்றைப் பொறுத்ததே. இருந்தாலும் இதுபோன்ற ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் ஏற்படுத்தும் வகையில் களப்பணிகளில் ஈடுபடுவோரும் அதற்கான கருவிகளும் களப்பணி முறைகளும் அமைந்தால் அதன் மூலம் சிறப்பான தகவல்கள் ஆய்வாளருக்குக் கிடைக்கும்.

## அடிக்குறிப்புகள்

1. Encyclopaedia Britanica, (7) p. 461 (Macropaedia Knowledge in depth)
2. Encyclopaedia Britanica, (7) p. 466 (Macropaedia Knowledge in depth)
3. நாட்டுப்புறவியல், பக். 5
4. நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், பக். 77
5. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணர் உரை, பக். 522-523
6. Sociolinguistic Patterns of Language Use, p. 41

இயல் - 4

# நாட்டுப்புறவியலுக்கான களப்பணி

## 4.1 களப்பணி

ஏதேனும் ஓர் அறிவுத்துறையில் ஆய்வு நடத்த ஒரு குறிப்பிட்ட ஆய்வுப்பொருளைத் தேர்ந்தெடுக்கிறோம். தேர்ந்தெடுத்தபின் ஆய்வு மேற்கொள்வதற்குச் சில அடிப்படைத் தேவைகள் இருப்பதை அறிகிறோம். அவ்வடிப்படைத் தேவைகளுள் ஒன்றே தரவு (data) என்பதாகும். ஆய்விற்குத் தேவையான தரவு நமக்கு இரண்டு வகையான மூலங்கள் வாயிலாகக் கிடைக்கின்றன. அவற்றில் ஒன்று முதன்மை மூலம் (primary source); மற்றொன்று துணை மூலம் (secondary source). முதன்மை மூலத்திலிருந்து ஆய்வாளர் தாமே தரவுகளை நேரிடையாகச் சேகரிக்கிறார். ஆனால் துணை மூலம் என்பது ஏற்கனவே ஓர் ஆய்வாளர் சேகரித்த அல்லது நடத்திய ஆய்விலிருந்து மற்றொரு ஆய்வாளர் தமது ஆய்விற்கு எடுத்தாள்வதாகும்.

இத்தகைய தரவு சேகரித்தல் முதன்மை மூலத்தின் வாயிலாக நடைபெற உதவுவதே களப்பணி (field work) யாகும். ஆய்வாளர் தமது ஆய்வுக்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்கத் தெரிந்தெடுக்கப்

பட்ட தகவலாளிகளிடம் தாமே நேரடியாகச் சென்று அவர்களிடம் தொடர்பு கொண்டு உரையாடி கேள்வி களைக் கேட்டு அவற்றிற்கான விடைகளைப் பெற்று வருவதே ஆய்விற்கான களப்பணி எனப்படுகிறது. இத்தகைய பணி ஒரு குறிப்பிட்ட இடத்தில் அல்லது பகுதியில் வாழும் மக்களிடம் அல்லது தொடர்புடைய வர்களிடம் ஆய்வுப்பொருளைப் பற்றிய தக்வல்களைத் திரட்டுவதாகும்.

## 4.2 களப்பணியின் தேவையும் இன்றியமையா மையும்

சில ஆய்வுக்ளை மேற்கொள்ள களப்பணி தேவையானதாக இருக்காது. அறிவியல் கூடத்தில் அமைக்கப்பட்டுள்ள கருவிகள், இயந்திரங்கள், அதற் கான பிற துணைப்பொருட்கள் இவற்றைக் கொண்டு, குறிப்பிட்ட செய்முறை, பரிசோதனை ஆகியவற்றைப் பயன்படுத்தி ஆய்வினைச் செம்மையாக முடிக்க முடி யும். சில ஆய்வுகளுக்குத் தேவையான பொருட்கள் வேறு இடங்களிலிருந்து கிடைக்கக்கூடியவையாக இருக்கும். அச்சூழலில் ஆய்வாளர் அப்பொருட்கள் கிடைக்கும் இடத்திற்கு அல்லது இடங்களுக்குச் சென்று அவற்றைச் சேகரித்து வந்து ஆய்வு மேற் கொள்ள வேண்டியிருக்கும். எடுத்துக்காட்டாக, தாவர வியல் ஆய்வாளருக்குத் தேவையான குறிப்பிட்ட சில தாவரங்கள் மலைப்பகுதிகளிலேயே கிடைக்கும். ஆகவே அவர் அம்மலைப் பகுதிக்குச் சென்று அவற் றைச் சேகரிக்க வேண்டியதாகிறது. மானிடவியல், மொழியியல் போன்ற துறைகளில் மலைவாழ் மக்களது மொழி, பண்பாடு, சமுதாய அமைப்பு போன்றவற் றைக் குறித்து ஆய்வு மேற்கொள்வோர் அப்பகுதிகளுக் குச் சென்று அவர்களது மொழி, சமுதாய அமைப்பு,

பண்பாடு போன்றவை தொடர்பான தகவல்களைச் சேகரித்த பின்னரே முறையான ஆய்வினை மேற்கொள்ளமுடியும். இவ்வாறு பல்வேறு துறைகளில் ஆய்வுகள் மேற்கொள்ளும் நிலையில் தரவு திரட்டுதல் (data collection) முக்கியமான தேவையாகவும் பணியாகவும் அமைகிறது.

இத்தகைய களப்பணி நாட்டுப்புறவியல் ஆய்வில் இன்று சிறப்பிடம் பெற்று வருகிறது.[1] இதற்குக் காரணம் எல்லா இடங்களிலும் எல்லாவிதமான நாட்டுப்புற இலக்கிய வகைகள், கலைகள் போன்றவை வழக்கில் இருப்பதில்லை. ஒரு சில இடங்களில் ஒரு சில வகைகள் மட்டுமே வழக்கில் இருந்து வருகின்றன. வேறு சில இடங்களில் வேறு சில வகைகள் நடைமுறையில் இருந்து வருகின்றன. குறிப்பாக, நாட்டுப்புறங்களில் வாழும் மக்களிடம் இத்தகைய இலக்கிய வகைகளும் கலைகளும் பெருமளவில் அவர்களது வாழ்வோடும் வளர்ச்சியோடும் பின்னிப்பிணைந்து வழக்கில் இருந்து வருகின்றன என்பது கண்கூடு. இந்த நிலையில் நாட்டுப்புறவியல் ஆய்வுகளுக்குத் தேவையான தரவுகள் கிராமப்புறங்களிலிருந்தும், மலைவாழ் மக்களிடமிருந்துமே அதிகமாகச் சேகரிக்கப்பட வேண்டியுள்ளது. தேவையான தரவுகளின்றி வெறும் யூகத்தினடிப்படையில் மட்டுமே ஆய்வுகளை மேற்கொள்ள முடியாது; மேற்கொள்ளவும் கூடாது. ஏனெனில், யூகங்களை நிரூபிக்க நமக்கு அடிப்படைச் செய்திகள் - கருத்துக்கள் நிச்சயம் தேவைப்படுகின்றன. இவ்வடிப்படைச் செய்திகளும் கருத்துக்களும் ஏதேனும் ஒரு வழியில் நமக்குக் கிடைத்தாலொழிய நாம் நம்முடைய யூகங்களை நிரூபிக்க முடியாது போகலாம். மேலும் நம்முடைய மனவுணர்வுகளை அல்லது நாம் நினைக்கும்

சில கருத்துக்களை அவை சரியானவை என்று எண்ணு கிறோம். சில வாதங்களை முன்வைத்து அவை சரி யென்றும் வாதிடுகிறோம். சில நேரங்களில் அத்த கைய வாதங்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய வகையாக வும் அமைந்து விடுகின்றன. சில சமயங்களில் இது சாத்தியமாக அமைந்தாலும் அறிவியல் பூர்வமாக நிரு பிக்கப்படும்பொழுதே நிறைவான ஆய்வாகவும், முழு மையான ஆய்வாகவும், சரியான ஆய்வாகவும் கொள் ளப்படும் நிலை ஏற்படும். இவ்வாறு ஓர் ஆய்வு அமைய வேண்டுமென்றால் அதற்கான தரவு நமக்கு முறைப்படி கிடைக்க வேண்டும். ஆகவே இவற்றைப் பெறுவதற்கான வழி முறைகளை முதலில் கண்டறிய வேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டுமே தரவு கிடைக்கிறது என்றால் அங்கு சென்று களப்பணி செய்ய வேண்டும். ஓரிடத்தில் வாழும் ஒரு குறிப்பிட்ட சமுதா யப் பிரிவினரிடம் மட்டுமே தரவு கிடைக்குமென்றால் அப்பிரிவினரைச் சென்று சந்தித்து ஆய்விற்குத் தேவை யான தரவுகளைச் சேகரிக்க வேண்டும் அல்லது அவர் களை நம்மிடம் அழைத்து வந்து தரவுகளைச் சேகரிக்க வேண்டும். எப்படிச் செய்தாலும் தரவு என்பது ஆய் வின் அடிப்படையாகவும் அதனையொட்டியுமே அமை வதைக் காண்கிறோம். தரவு சேகரிக்கப் பல்வேறு இடங்களுக்குச் செல்கிறோம், பலரைச் சந்திக்கிறோம், தகவல்களைப் பெறுகிறோம். ஆக, ஆய்வின் தேவையை முன்னிட்டு இப்பணிகளை முறையாக மேற் கொள்கிறோம். இதிலிருந்து களப்பணி என்பது ஆய் விற்கு மிகவும் தேவையான ஒன்று என்பதை நன்கு உணர்ந்து கொள்ள முடிகிறது.

களப்பணி மேற்கொள்ளாமலே தகவல்களைத் திரட்ட முடியாதா? என்ற வினா எழலாம். சில

நேரங்களில் ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பற்றியும் மக்களைப் பற்றியும் அறிந்த சிலரிடம் நாம் கேட்டறிந்து தகவல்களைப் பெறமுடியும். அவர்கள் நமக்குத் தரும் தகவல்கள் முழுமையானவையாகவும் இருக்கலாம், ஓரளவு மட்டுமே சரியானவையாகவும் இருக்கலாம், முற்றிலும் தவறானவையாகவும் இருக்கலாம். நாம் நேரடியாக இப்பணியில் ஈடுபடாத நிலையில் நமக்கு இத்தகைய தகவல்களின் உண்மை நிலைபற்றி எதுவும் தெரிந்திட வாய்ப்பில்லை. ஆகவே மூன்றாமவர் சொல்வதை அப்படியே ஏற்றுக்கொண்டு நாம் ஆய்வினை நடத்த வேண்டிய சூழல் ஏற்பட்டு விடுகிறது. உண்மையான ஆய்வுக்கு இது உகந்த முறையல்ல. மேலும் இது தவறான முடிவுகள் பெற வழி வகுத்துவிடும். அதனால்தான் துணை மூலங்கள் மூலம் பெறும் தகவல்கள் அல்லது நேரடியாக ஆய்வாளரே முன்னின்று பெறாத தகவல்கள் போன்றவை பல நேரங்களில் ஆய்வுக்கு ஏற்றதாக அமைவதில்லை என்று உணரப்படுகின்றன. சில தகவல்கள் புத்தகங்கள், கட்டுரைகள், அறிக்கைகள், ஆய்வேடுகள் போன்றவற்றில் இடம் பெற்றிருக்கும். அவற்றை நாம் அடிப்படையாகக் கொண்டு ஆய்வு மேற்கொள்ள முடியும். இருந்தாலும் நாமே நம் தேவையை உணர்ந்து நேரடியாகத் தகவல்களைத் திரட்டி அவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு மேற்கொள்வது ஆய்வு குறித்த நம் ஈடு பாட்டினையும், ஆர்வத்தினையும், தன்னம்பிக்கையினையும் வளர்த்துக்கொள்ள மிகவும் உதவியாக இருக்கும். மேலும் நாமே நேரடியாகக் களப்பணியில் ஈடுபடும் பொழுது சூழலுக்கு ஏற்பவும் தேவைக்கு ஏற்பவும் தகவல்களைப் பெறுவதற்கு முயற்சி செய்ய முடியும். அதாவது இதன் மூலம் தகவல்கள் நிறைவாகக் கிடைக்க வழியேற்படும். சில சமயங்களில் நாம் சேக

ரித்த தகவல் சரியானதல்ல என்று நமக்குத் தெரிய வந்தால் பிறரிடம் மீண்டும் கேட்டு அவை சரிதானா என்று முடிவுசெய்ய வாய்ப்பு ஏற்படும். ஆகவே களப்பணி என்பது அறிவியல் பூர்வமான, முழுமையான, முறையான ஆய்விற்கு வழிவகுக்கும் வகையில் அமையவேண்டும் என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

நேரடியாக களப்பணி மேற்கொள்வதால் தரவுகள் அதிகமாகக் கிடைக்கும் என்பதும் இன்று கண்டறியப்பட்டுள்ள நடைமுறை உண்மை. ஏனெனில் ஒரு குறிப்பிட்ட ஆய்வாளருக்கு ஏற்படும் அல்லது அவர் கொண்டுள்ள ஐயப்பாடுகளை நேரடியாக போக்கிக் கொள்ளவும் வாய்ப்பு ஏற்படும். ஏற்கனவே கண்டறியப்பட்ட தரவுகளைத் திருத்தியமைத்துக் கொள்ளவும் வாய்ப்பு ஏற்படும். தகவலாளிகளுடன் மிகவும் ஒன்றி ஈடுபாட்டோடு விவாதிக்கும் நிலையில் சில விளக்கங்கள் வெளிப்படவும் வாய்ப்புக்கள் அதிகம். களப்பணியின்போது நேரடியாகச் சிலவற்றை நாம் உற்று நோக்கல் (observation) முறையிலும் கண்டறிய முடியும். அதுவும் மொழியியல், நாட்டுப்புறவியல், சமுதாயவியல், மானிடவியல் போன்ற ஆய்வுகளைப் பொறுத்தவரையில் இதுபோன்ற உற்றுநோக்கல் முறையைக் கொண்டு அந்தக் குறிப்பிட்ட மொழி, இனம், சமுதாயம் போன்ற பிரிவுகளைச் சார்ந்தோர் பேசுவதை, பாடுவதை, கலந்துரையாடுவதை செயற்படுமுறையை அவர்கள் அறியாமலேயே கண்டறிந்து கொள்ளமுடியும். எடுத்துக்காட்டாக, மொழியாய்வில் இது போன்ற உற்று நோக்கல் நெறிமுறை (casual speech அல்லது spontaneous speech), இயல்புப் பேச்சு வழக்கினைக் கண்டறிய மிகவும் பயனபடும் என்று குறிப்பிடு

வர். இவ்வாறு சிலவற்றை உற்று நோக்கி அறிந்து கொண்ட பின்னர் அவை சரியானவைதானா என்பதை வேறு கேள்விகள் கேட்பதன் மூலம் தெளிவுபடுத்திக் கொள்ளமுடியும். இதுபோன்ற வழி முறைகளைக் களப்பணியில் பயன்படுத்தி ஆய்வு சிறப்பாக அமையும் வகையில் தேவையான தரவினைத் திரட்ட முடியும். ஆகவே, களப்பணி என்பது ஆய்வுகளுக்கு அடித்தளம் என்றும், அதை வைத்தே நாம் ஆய்வினைச் செம்மை யாகச் செய்துமுடிக்க முடியும் என்றும் குறிப்பிடப் படுகிறது.[2]

## 4.3 களப்பணியின் அடிப்படையும் சூழலும்

எந்தவொரு பணிக்கும் அடிப்படையும் சூழலும் உண்டு. இதனோடு குறிக்கோளும் உண்டு. அந்தக் குறிக்கோளினை அடைய முனைபவர்களே ஆய்வாளர் கள் அல்லது அப்பணியைச் செம்மையாக நிறைவேற்று வோர். இவர்கள் தங்கள் பணியினைச் செவ்வனே நிறைவேற்ற அவர்களுக்குச் சில வரையறுக்கப்பட்ட நெறிமுறைகளும் அவற்றைச் செயல்படுத்துவதற்கான சூழலும் தேவையாகின்றன. களப்பணி ஆய்வுக்கு இவை அடிப்படை என்று முன்னர்க் குறிப்பிட்டோம். சுவரின்றி சித்திரம் இல்லை என்பதற்கேற்ப, இந்த அடித்தளம் சுவராக அமைந்து ஆய்வு எனும் சித்தி ரத்தை உருவாக்க உதவுகிறது. சமுதாயச் சூழலுக்கு ஏற்ப பணியை நிறைவேற்றும் முறை ஓரளவிற்கு மாறி யமையும். அதோடு அப்பணியில் ஈடுபடுவோரது இயல்பு, ஆற்றல் போன்றவற்றிக்கேற்பவும் பணியின் தன்மையும் வேறுபடும். இதனால்தான் களப்பணியில் சூழலுக்கும், பங்கேற்போர்க்கும், அடிப்படைக்கும் முக் கியத்துவம் தரப்படுகிறது. களப்பணியில் பங்கேற்போ

ராக ஆய்வாளரும், தகவலாளிகளும், மொழிபெயர்ப்பா ளர்களும் அமைகின்றனர். சமுதாயத்தின் பல்வேறு சூழல்கள் களப்பணியைக் கட்டுப்படுத்துகின்றன அல் லது வரன்முறை செய்கின்றன. தகவல் சேகரிக்கும் போது நேரம், பொருள், தொடர்பு, முன்னெச்சரிக்கை போன்ற பலவும் கருத்தில் கொள்ளப்படுகின்றன. இதனை ஒட்டியே தகவலாளிகளைத் தேர்ந்தெடுப்பது முதல் அவர்களிடம் சென்று வினாப்பட்டியலைப் பயன் படுத்தி, கேள்விகளைக் கேட்டு அவர் சொல்லும் பதி லைப் பதிவு செய்து கொள்வதுவரை முறையாகச் செய் யப்படுகின்றன.

சூழல் என்பது பல்வேறு காரணிகளால் விளக்கப் படுவது. இயல்பான சமுதாயச் சூழலை உருவாக்கி, தகவலாளியோடு பேசுவது நமக்குத் தேவையான தர வினைப் பெற்றுத் தருவதற்கு அடிப்படையாக அமை யும். எந்த ஆய்வாளரும் சூழல்களை ஏற்படுத்திக் கொள்ளப் பொதுவாகத் தவறுவதில்லை. எனினும் சில ஆய்வாளர்கள் ஓரிடத்திற்குச் சென்றவுடனே களப் பணியைத் தொடங்கும் ஆவலில் தகுந்த சூழலை உருவாக்கிக் கொள்ளத் தவறிவிடுகின்றனர். இதனால் அவர்கள் எதிர்பார்த்த வண்ணம் களப்பணி அமையா மல் போய் விடுகிறது. இதற்குக் காரணம் அவர்கள் தகவலாளிகளுக்கும் அவர்களது மனப்பாங்கிற்கும் அவ்வளவு முக்கியத்துவம் தராததேயெனில் அது மிகை யன்று. எடுத்துக்காட்டாக மொழியாய்வில் தகவலாளி உரிய முறையில் தரவினை வெளிப்படுத்தாவிட்டால் ஆய்வினை நிறைவாக முடிக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டு விடக்கூடும். இதனை முன்னிட்டே களப் பணியானது கால தேச வர்த்தமானத்திற்குக் கட்டுப் பட்டு மேற்கொள்ளப்படவேண்டுமென்ற கருத்து இன்று

பெருமளவில் வலியுறுத்தப்பட்டு வருகிறது. மொழி யென்பது சூழலுக்கு உட்பட்டதுதான், சமுதாயக்கட்டுக்கோப்புக்குள் வருவதுதான் என்ற கருத்துக்களைக் குறிப்பிடும் பொழுது 'language is context bound, culture bound, society bound' என்றும், 'language is described interms of varying social contexts' என்றும் சமுதாய மொழியியல் விளக்கங்களில் (sociolinguistic descriptions) குறிப்பிடுவார்கள்.[3] ஒரு சமுதாய மொழியியல் ஆய்வாளர் தமது களப்பணியின்போது இதற்கு சூழல்களை நிச்சயமாகச் சந்திப்பதை அவரது கள அனுபவம் (field experience) எடுத்துக்காட்டத் தவறுவதில்லை. இவற்றை எல்லாம் கருத்திற்கொண்டே களப்பணிச் சூழல்கள் (field contexts) விளக்கப்படுகின்றன.

நாட்டுப்புற ஆய்வுகளப்பணிக்குச் சூழல் பெரிதும் துணை செய்கிறது. நாட்டுப்புறவியல் இலக்கியங்கள் அல்லது கலைகள் போன்றவற்றைச் சூழல்களை மீறி நாம் பதிவு செய்திட முடியாது. சூழல் கண்முன் இருந்தால்தான் இவ்விலக்கியங்களும் கலைகளும் நடத்தப்படும். ஒரு தகவலாளியை அழைத்து ஒரு நாட்டுப்புறப்பாடலைப் பாடச் சொன்னாலோ, நாட்டுப்புறக் கலையின்பத்தை அளிக்கச் சொன்னாலோ அவர் உடனே செய்துகாட்டுவது இல்லை. அப்படியே செய்து காட்டினும் அது இயல்பானதாக நமக்குத் தோன்றுவதில்லை. ஏனெனில் ஒரு பாடலைப் பாடு என்றதும் அவர் கண்முன் நிற்பது அது எந்தச் சூழலில் பாடப்பட வேண்டும் என்பதே. ஆகவே சூழலின் இன்றியமையாமை இதிலிருந்து புலனாகிறது. சில சமயங்களில் சூழலைப்பற்றிக் கவலைப்படாமல் பாடப்படும் பாடல், சொல்லப்படும் கதை, ஆடப்படும் கலை போன்றவை

இயற்கையாக இல்லாமல் செயற்கை வடிவு பெறுவதை ஆங்காங்கே கண்டு வருகிறோம். இத்தகைய செயற்கை/அமைப்பால் எதிர்பார்த்த முறையில் விளைவுகள் நமக்கு ஏற்படுவதில்லை.

## 4.4 சேகரிக்கப்பட வேண்டிய தகவல்கள், தகவல் பெறும் மூலங்கள், தகவலாளிகளைத் தேர்ந்தெடுத்தல்

தகவல் என்பது ஒருவர் கேட்ட கேள்விக்கு அல்லது சொன்ன கருத்துக்கு மற்றொருவர் பதிலளிப்பதாகும். ஒரு குறிப்பிட்ட ஆய்வுப்பொருள் (research work) குறித்து தகவலாளியிடம் கேட்கப்படும் பல்வேறு வினாக்களுக்கு அவர்தரும் பதில்கள் தகவல்களாக நமக்குக் கிடைக்கின்றன. இதில் பல்வேறு வகையான பிரிவுகள் அமைகின்றன. எடுத்துக்காட்டாக, பின்னணியைப் பற்றிய தகவல்கள்-மொழி, மற்றும் சமுதாயப் பின்னணி குறிப்பவை, இவை இடம் பெறும் சூழல், இதற்காகப் பயன்படுத்தப்படும் தகவல் தரும் மூலங்கள் ஆகியவை ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு கொண்டவை. மூலங்கள் இன்றைய நிலையில் மிகவும் ஆற்றல் மிகுந்தவையாகவும் தகவல் சேகரிப்பதற்கு ஏற்புடையனவாகவும் அமைந்து வருவதைப் பார்க்கிறோம். ஒரு குறிப்பிட்ட சூழலில் தகவல் சேகரிப்பதற்கு நாம் சில வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டியவர்களாக உள்ளோம். இதற்கு அடிப்படையாக களப் பணிக்கான வினாப்பட்டியலும் (questionnaire) அதனைச் சமுதாயத்தில் பயன்படுத்தக்கூடிய சூழலும் நமக்கு மிகவும் அவசியமாகின்றன.

தகவலாளிகளைத் தேர்ந்தெடுப்பது (sampling) களப்பணியின் ஒரு முக்கிய அம்சமாகும். தகவலாளி இல்லாமல் களப்பணி சரியாக அமையாது. குறிப்பாகப் பல்வேறு சமுதாயக்காரணிகளால் சமுதாயமானது பாகுபாடு செய்யப்பட்டு அதனடிப்படையில் பல்வேறு பிரிவுகளுக்கும் உரிமை தரப்பட்டு (representation) தகவலாளிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவ்வாறு செய்யும்போது சில சமயங்களில் சில குறிப்பிட்ட பிரிவுகளிலிருந்து நமக்குத் தக்வலாளிகள் கிடைக்காமலும் போகலாம். இதைத்தான் ஆங்கிலத்தில் ‘ gaps that occur due to social hierarchical levels ’ என்று குறிப்பிடுவார்கள். வளர்ந்துவிட்ட சமுதாயத்தில் அதுவும் குறிப்பாக, கற்றோர் விழுக்காடு அதிகமிருக்கும் சமுதாயத்தில், கீழ்மட்டத்தில் மட்டுமே இதுபோன்ற இடைவெளிகள் (gaps) ஏற்பட்டு வருகின்றன. அதாவது, கல்லாத பிரிவினரை இங்கு காணமுடியாது. ஆனால் அதே நேரத்தில் அச்சமுதாயத்தில் கூட எல்லோரும் ஒரே நிலைக் கல்வியறிவைப் பெற்றிருப்பதில்லை. அப்பொழுதும் இதுபோன்ற இடைவெளி ஓரளவு இருக்க வாய்ப்புண்டு.

தகவலாளிகளைத் தேர்ந்தெடுத்தல் ஒரு முக்கியமான செயல் என்று முன்னர்க்குறிப்பிட்டோம். இதற்கு முன்னோடியாக அமைவது சமுதாயப் பின்னணியாகும். (social background). இப்பின்னணி ஆய்வாளருக்குத் தெளிவாகத் தெரிந்து இருந்தால்தான் அதற்கேற்ப அவர் தகவலாளிகளைத் தெரிவு செய்யமுடியும். இதனோடு இணைத்து செயல்படுத்தப்பட வேண்டியது தகவலாளி பெற்றுள்ள கருத்துப்பரிமாற்றத்திறனும் (communicative competence) ஆய்வாளர் அவரோடு ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்புமே (rapport)

ஆகும். தகவலாளி - ஆய்வாளர் தொடர்பு எந்த அள விற்கு நெருக்கமானதாக சுமுகமானதாக அமைகிறதோ அந்த அளவிற்குத் தகவல்கள் அதிகமாகவும் இயல்பான தாகவும் நம்பக்கூடிய வகையிலும் கிடைக்கும் என்ற கருத்து இன்று ஏற்கப்பட்டுள்ளது. இத்தகைய தொடர்பு இல்லாத சூழலில் களப்பணி எதிர்பார்த்த வகையில் முழுமை பெறுவதில்லை, அல்லது வெற்றிகர மாக நிறைவேறுவதில்லை என்றே குறிப்பிடலாம்.

களப்பணிக்குச் சில முன் தேவைகள் (pre re-quists) இருக்கின்றன. அவையாவன :

(1) தகவலாளிகளின் தேர்ந்தெடுப்பு
(2) வினாப்பட்டியல்
(3) முன்னோடியாய்வு போன்றவை.[4]

இவை மூன்றும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு கொண்டவை. ஒன்றின் வெற்றிக்கு மற்றவை துணை யாக அமைபவை. எடுத்துக்காட்டாக நல்ல வினாப் பட்டியலைப் பயன்படுத்தித் தகவல்கள் சேகரிக்க முனை வதற்கு அடிப்படை முன்னோடி ஆய்வு என்றால் அது மிகையன்று. எதிர்பார்த்த தகவல்கள் கிடைக்கத் தக வலாளிகளைத் தேர்ந்தெடுத்தல்முறை அடிப்படையா னது. தகவலாளிகளை அணுகி வினாப்பட்டியலைப் பயன்படுத்திப் பார்க்கும் நிலையில் வினாப்பட்டியலின் நிறைகுறைகள் நமக்குத் தெரியவரும். இவ்வாறு இவற்றின் தொடர்பு அமைந்துள்ளதால் இவற்றை நாம் களப்பணிக்கு முக்கியமானவையாகக் கருது கிறோம்.

ஓர் ஆய்விற்குத் தேவையான தகவல்களைத் திரட்டுவதற்கு தகவலாளிகள் மிகவும் இன்றியமையா

தவர்கள் என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இவர்களைத் தேர்ந்தெடுப்பதற்குப் பயன்படுத்தப்படும் முறைக்கு மாதிரி தேர்ந்தெடுப்பு (sampling) என்று பெயர். ஒரு சமுதாயத்தை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளும்போது அச்சமுதாயத்தைச் சார்ந்த அனைவரையுமே கண்டுபேசி தகவல் திரட்டுவது என்பது எளிதானதல்ல. அதற்கு மிகுந்த காலம், பொருளாதாரம், ஆய்வாளர்கள், ஏற்பாடுகள் போன்றவை தேவைப்படும்.

ஆகவே சமுதாயத்தைப் படிம (hierarchy) அடிப்படையில் பாகுபாடு செய்து ஒவ்வொரு படிமத்தையும் சார்ந்த தகவலாளிகள் சிலரைத் தேர்ந்தெடுப்பது எளிதானதும் நடைமுறைப்படுத்தக் கூடியதுமாகும். எடுத்துக்காட்டாக், ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஐந்து சமுதாயப்பிரிவினர் சம விழுக்காடு மக்கட்தொகை கொண்டிருக்கும் நிலையில் ஒவவொரு பிரிவிற்கும் சரி சமமான எண்ணிக்கையில் மாதிரியைத் (தகவலாளிகளின்) தேர்ந்தெடுப்பது வரவேற்கத்தக்கது. இதனால் தகவலாளிகளின் தேர்ந்தெடுப்பில் சமநிலை (balance) ஏற்படும். இவ்வாறு மாதிரி தேர்ந்தெடுக்கப் பல்வேறு சமுதாய மாறிகள் (social variables) தேவைப் படுகின்றன. எடுத்துக்காட்டாக பால், வயது, கல்வி நிலை, பொருளாதார நிலை, தொழில், சமுதாயநிலை போன்றவை முதன்மை மாறிகளாகவும், ஆண்-பெண் (பால்), முதுமை-இளமை (வயது) உயர் கல்வி - இடைநிலைக்கல்வி - தொடக்கக்கல்வி (கல்விநிலை), உயர்வருவாய் - இடைநிலை வருவாய் - கீழ்நிலை வருவாய்ப் (பொருளாதார

நிலை) பிரிவினர், அலுவலக வேலை - பிற (தொழில்), மேல்-இடை-கீழ் வகுப்புப் பிரிவு (சமுதாய நிலை) என்பவை துணை மாறிகளாகவும் பயன்படுத்தப்பட்டு, தேர்ந்தெடுப்பில் ஈடுபடுத்தப்படு கின்றன. இவ்வாறு செய்வதால் ஒரு சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரும் மாதிரியில் இடம் பெறுகின்ற னர். மக்கட்தொகை எண்ணிக்கைக்கு ஏற்பவும் மாதி ரித் தேர்ந்தெடுப்பு அமையும். எடுத்துக்காட்டாக பத் துக்கு ஒருவர் நூறுக்கு ஒருவர், ஆயிரத்திற்குப் பத்து பேர் என மாதிரி அமையலாம். மாதிரி தேர்ந்தெடுப் பில் பிற சமுதாயக் கூறுகளும் முக்கியத்துவம் பெறும். எடுத்துக்கர்ட்டாக மொழியாய்வில் ஒருவர் ஓரிடத்தில் வாழ்ந்து வரும் காலம் (length of residency) சிறப் பிடம் பெறும். வரலாற்று ஆய்வில் குறிப்பிட்ட இடங் களைத் (places of historical significance) தேர்ந் தெடுப்பது முக்கியமானதாகக் கருதப்படும்.

பொருளாதாரம் மற்றும் தொழில் தொடர்பான ஆய்வுகளில், நகர்ப்புறம் (urban centres), தொழிற் பகுதிகள் (industrial places), நாட்டுப்புறம் (rural areas) போன்றவை சிறப்பிடம் பெறும். இதே போன்று பண்பாடு, சமயம் போன்ற ஆய்வுகளிலும் சில கூறுகள் முக்கியத்துவம் தரப்பட்டு அதற்கேற்ப மாதிரித் தேர்ந்தெடுப்பு அமைக்கப்படும். இவ்வாறு மாதிரித் தேர்ந்தெடுப்பு தகவலாளிகளைத் தேர்ந்தெடுப் பதிலும், தகவல் சேகரிப்பதற்கான இடங்களைத் தேர்ந் தெடுப்பதிலும், தகவல் சேகரிப்பதற்கான கேள்விகள் மற்றும் முறைகளைத் தேர்ந்தெடுப்பதிலும் அமை கிறது. இவ்வாறு அமைந்தால்தான் ஆய்வாளர் எதிர் பார்க்கும் தரவுகள் கிடைக்கக்கூடிய சூழ்நிலை ஏற்படும் என்று குறிப்பிடப்படுகின்றது. இவற்றோடு தகவல்

சேகரிக்கும் நேரத்தைக்கூட நாம் முன்கூட்டியே தேர்ந் தெடுப்பது தகவல் சேகரிப்புக்கும் பயனுள்ளதாக அமையும் என்றும் கருத்துரைக்கப்படுகிறது. ஏனெ னில் தகவலாளிகளுடைய ஓய்வு நேரம் அல்லது அலு வல் ஏதும் இல்லாத நேரம் தகவல் சேகரிப்பதற்குப் பொருத்தமானதாக அமையும். இதையும் மாதிரி தேர்ந்தெடுப்பின்போது ஆய்வாளர் கவனத்திற்கொள்ள வேண்டும்.

முன்னோடியாய்வின் வாயிலாகக் குறிப்பிட்ட சமு தாயத்தைப்பற்றி, இடத்தைப்பற்றி, அங்குள்ள மக் கள், மரபுகள், தொழில்கள், வரலாற்றுப் பின்னணி போன்றவற்றைக் கண்டறிந்து அவற்றிற்கேற்பவும் மாதிரியினைத் தேர்ந்தெடுப்பது நல்லது என்றும் கரு தப்படுகிறது. இவ்வாறு செய்வதால் சரியான மற்றும் தேவையான தகவலாளிகள் கிடைப்பார்கள்; தகவல் களும் கிடைக்கும்.

தகவல் சேகரிப்பிற்குத் தகவலாளிகள் முக்கிய மானவர்களாக இருந்தாலும் தகவல் சேகரிப்பில் பயன்படுத்தப்படும் கருவிகள் மற்றும் முறைகள் ஆகி யவையும் சிறப்பிடம் பெறுகின்றன என்றே குறிப்பிட வேண்டும். இதற்குக் காரணம் சரியான வினாப்பட்டி யல், வினாக்களைத் தொகுத்து விடைகளைப் பெறும் முறை இருந்தாலொழிய நேர்காணல் (interview) முறை வெற்றி பெறாது என்பதே. நேர்காணல் முறை பலகோணங்களிலிருந்து (different dimen- sions) தகவல்களைக் கண்டும் கேட்டும் அறிய உறு துணையாக அமைவதாகும். இவற்றோடு தகவல்க ளைச் சேகரிக்கும்போது தகவலாளிகளின் தொழில், மனப்பாங்கு (attitude), அவர் பதில் சொல்லும்முறை

போன்றவற்றைக் கவனத்திற்கொண்டும் அதற்கேற்ப சில வினாக்களை மாற்றி அமைத்துக்கொள்ளுவது, சில வினாக்களைக் கேட்காமலேயே விட்டுவிடுவது போன்றவை நல்லது என்றும் கருதப்படுகிறது. ஏனெனில் இவ்வாறு கேட்டு அதன் மூலம் தகவலாளியின் வெறுப்பைப் பெற்றுக்கொள்ள நேரிட்டால் எதிர்பார்த்த தகவல்களும் கிடைக்காது; இதற்காக மேற்கொள்ளும் செயலும் பயனற்றுப்போகும்.

மேலும் தகவல் சேகரிக்கும்போது இடைவிடாமல் வினாக்களைத் தொடர்ந்து கேட்டு அதன் மூலம் தகவலாளிக்கு மனச்சோர்வினையும் உடற்சோர்வினையும் ஏற்படுத்துவது தவிர்க்கப்பட வேண்டும். இவ்வாறு செய்யாவிட்டால் ஆய்வாளர் எதிர்பார்க்கும் தரவினைப் பெற முடியாது. தரவு சேகரிக்கும்போது கால இடைவெளியும் தகவலாளி சோர்வடையாவண்ணம் அவரோடு உரையாடலை மேற்கொள்வதும் அவரது ஈடுபாட்டினையும், ஆர்வத்தினையும் குறைவுபடாமல் இருக்கச்செய்யும். முதன்மைக் கேள்விகளை ஒட்டித் துணைக்கேள்விகளைக் கேட்கும் பழக்கம் நேரடித் தகவல் சேகரிப்பின் பண்பையும், பயனையும் கூட்டும். தகவலாளி சில வினாக்களுக்குப் பதில் சொல்ல சிரமப் படும்பொழுது ஒரிரு குறிப்புக்களை (clues) எடுத்துக் காட்டி அதை வைத்து, தமக்குத் தெரிந்ததை வெளிப் படுத்த வாய்ப்பேற்படுத்திக் கொடுப்பது நல்லது. சில சமயங்களில் தகவலாளியே முன் வந்து நாம் எதிர் பார்க்காத சில தகவல்களைத் தரக்கூடும். அவற்றையும் பெற்று பிற தகவல்களோடு சேர்த்துக்கொள்வது தகவலின் தன்மையையும் பயனையும் கூட்டுவதாக அமையும். இவ்வாறெல்லாம் தகவல் சேகரிப்பு முறையை அமைத்துக்கொள்வது ஆய்வின் நிறைவிற்கு வழி செய்யும்.

## 4.5 முன்னோடியாய்வு

ஒரு குறிக்கோளினையடைய முழுமையான நிலையில் ஆய்வினை மேற்கொள்வதற்கு முன்னர் முன்னோடியாய்வினை (pilot study) சிறு அளவில் மேற்கொள்வது முழுமையான ஆய்வின் வெற்றிக்கு வழிகாட்டுவதாக அமையும் என்று குறிப்பிடப்படுகிறது. ஆய்வின் அடிப்படைத் தேவைகளான வினாப்பட்டியல், மாதிரி அணுகுமுறைகள் போன்றவற்றை முடிவு செய்த பின்னர் அவற்றைக் களஆய்வுப்பணிக்குப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு பயன்படுத்த முனையும்போது சிறு அளவில் தகவலாளிகளைத் தேர்ந்தெடுத்து அவர்களிடம் கேள்விகளைக் கேட்டு அதற்கான பதில்களைப் பெறுகிறோம். இப்பதில்களைத் தரவாகக்கொண்டு அணுகுமுறைகளைப் பயன்படுத்திப் பகுப்பாய்வு செய்யும்போது நமக்குக் கீழ்க்காணும் கருத்துக்கள் தெளிவாகும்.

(1) வினாக்களின் தன்மை - எளிமை போன்றவை

(2) தகவலாளிகளின் தகுதிகள் பற்றிய மதிப்பீடு

(3) மதிப்பீட்டின் அடிப்படையில் மேற்கொள்ளப்படவேண்டிய முயற்சிகள்

இவற்றை மேற்கொள்ளும்போது வினாப்பட்டியல், தகவலாளிகளின் தேர்ந்தெடுப்பு, அணுகுமுறைகளின் நிறைவு - குறைவு போன்றவற்றையும், தகவல் பெறுவதில் அனுசரிக்கப்படவேண்டிய முறைகளையும் தேவைக்கு ஏற்ப மாற்றியமைத்து நிறைவு செய்து கொள்ளவும், நிலைபேறு கொண்டதாக ஆக்கிக்கொள்

ளவும் முடியும். அதாவது முன்னோடி ஆய்வின் முடிவுகளைக்கொண்டு முழு ஆய்வு மேற்கொள்ளுமுன் அதற்கான அனைத்துத் தேவைகளையும் வலுப்படுத்திக் கொள்ளவும், வளப்படுத்திக் கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. இவ்வாறு செய்வதால் முழுமையான ஆய்வில் அதிகமான குறைகள் ஏற்பட வாய்ப்புக்கள் இல்லையென்று சொல்லலாம் அல்லது பெருமளவில் குறைகள் ஏற்படா என்றே சொல்லலாம்.

## அடிக்குறிப்புகள்

1) கள ஆய்வியல் சில அனுபவங்கள், பக். 1-3

2) Study of Social Dialects in Tamil, pp. 11-32

3) Study of Social Dialects in American English, pp. 84

4) Study of Social Dialects in Tamil, pp. 30-32

இயல் - 5

# வினாப்பட்டியல்

## 5.1 முன்னுரை

தரவு திரட்டுதலுக்குத் தேவையான கருவிகளில் ஒன்று வினாப்பட்டியலாகும். தேர்ந்தெடுக்கப்பட்ட தகவலாளிகளிடம் கேட்டு அறியும் வகையில் பல்வேறு வகையான வினாக்கள் இப்பட்டியலில் இடம் பெறும். வினாப்பட்டியல் இரண்டு வகைப்படும். நேர்காணல் முறையில் தகவல்களைத் திரட்டுவதற்குத் தகுந்தாற் போல் அமைக்கப்பட்டுள்ள வினாப்பட்டியல் ஒரு வகை. தேர்ந்தெடுக்கப்பட்ட தகவலாளிகளிடம் பட்டியலைக் கொடுத்து அவர்களே அவற்றிற்கான பதில்களைப் பூர்த்தி செய்யும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது இன்னொரு வகை.[1] இவ்விருவகை வினாப்பட்டியல்களிலும் இரு பிரிவுகளில் கேள்விகள் அமைக்கப்பட்டிருக்கும். தகவலாளிகளைப் பற்றிய அடிப்படைச் செய்திகள் (basic - information), அதாவது தகவலாளியின் பெயர், வயது, கல்வித்தகுதி, தொழில், தாய்மொழி, குடும்பம் போன்ற பல்வேறு செய்திகளைப் பெறும் வகையில் அமைக்கப்பட்டிருக்கும் கேள்விப் பிரிவு முதலாவதாகவும், ஓர் ஆய்வாளர் மேற்கொண்டுள்ள ஆய்விற்குத் தேவையான கருத்துக்கள் செய்தி

கள் போன்றவற்றைப் பெறுவதற்கு ஏற்ற வகையில் அமைக்கப்பட்டுள்ள கேள்விப் பிரிவு இரண்டாவதாகவும் அமைந்திருக்கும்.[2] நேர்காணல் முறைக்கான வினாப்பட்டியலில் கேள்விகள் மட்டுமே இடம் பெற்றிருக்கும், அதாவது பதில்களைக் குறித்துக்கொள்ள இதில் இடம் விடப்பட்டிருக்காது. Schedule எனப்படும் இரண்டாவது வகை வினாப்பட்டியலில் ஒவ்வொரு கேள்விக்கும் கீழே இடம் விடப்பட்டிருக்கும். ஏனெனில் இதனைத் தகவலாளிகளே நிரப்பித்தர வேண்டியுள்ளது. இதனை அஞ்சல்வழி வினாப்பட்டியல் (postal-questionnaire) என்றும் குறிப்பிடுவார்கள்.[3] இதனைப் பயன்படுத்தும்போது ஆய்வாளர் நேரிடையாகத் தகவலாளிகளிடம் அமர்ந்து வினாக்களைக் கேட்டு விடைகளைப் பெறுவதில்லை. அதாவது நேரடியாக ஆய்வாளர் தகவல் சேகரிப்பில் ஈடுபடுவதில்லை.

வினாப்பட்டியலில், குறிப்பாக இரண்டாவது பகுதியில் இடம்பெறும் வினாக்களை ஆய்வுப் பொருளை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு உட்பிரிவுகளாகப் பிரித்து, வினாக்கள் அமைக்கப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாக மொழிப்பயன்பாடு (language use) பற்றிய ஆய்வினை மேற்கொள்வதற்குத் தயாரிக்கப்பட்டுள்ள வினாப்பட்டியலில் கீழ்க்காணும் தலைப்புக்களில் வினாக்கள் குறிக்கப்பட்டிருக்கும் :

i) தகவலாளியின் மொழிப்பயன்பாடு (தாய்மொழிப் பயன்பாடு, பிறமொழிப்பயன்பாடு) குறித்த வினாக்கள்.

ii) தகவலாளியின் மொழி பேணல் (language maintenance) குறித்த வினாக்கள்.

iii) தகவலாளியின் மொழி மாறல் (language shift) மற்றும் மொழி இழப்பு (language loss) குறித்த வினாக்கள்.

iv) தகவலாளி கொண்டுள்ள மொழித்தூய்மை (language purism) மற்றும் மொழித்தழுவல் குறித்த வினாக்கள்.

v) தகவலாளி வாழும் இடத்தில் அல்லது தகவலாளி பயன்படுத்தும் மொழிகளுக்கிடையே காணப் படும் மொழியியல் குவியம் (linguistic convergence) குறித்த வினாக்கள்.

vi) தகவலாளியின் சமுதாய மொழியியல் மனப்பாங்கு களைக் கண்டறிவதற்கான வினாக்கள்.

vii) தகவலாளி கொண்டுள்ள மொழி இணங் காணல் (language identity)

வினாப்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள கேள்வி கள் பொதுவாக முழுமை பெற்றவையாக இருந்தாலும் நேர்காணலின்போது தோன்றும் சூழ்நிலைக்கு ஏற்ப களப்பணியாளர் கேள்விகளைக் கூட்டிக்கொள்வதும் சில கேள்விகளை விட்டுவிடுவதும் ஒரு வழிமுறையா கக் களப்பணியில் பின்பற்றப்படுவதால் தயாரிக்கப் படும் வினாப்பட்டியலில் இதுபற்றிய குறிப்பினை இடம்பெறச் செய்யவேண்டும்.[4]

வினாப்பட்டியலில் தேவையான சில இடங்களில் படங்கள், அமைப்பு விளக்கம் (மறைமுகமாக) போன்ற வற்றைக் கொடுக்கலாம் அல்லது களப்பணியாளர் நேர்காணலின்போது தகவலாளி தரும் பதில் நிறை வானதாக இல்லையென்று கருதும் நிலையில், சில படங்களையோ, மறைமுக விளக்கங்களையோ

கொடுத்து இன்னும் நிறைவான தகவல்களைப் பெற லாம். இவையனைத்துமே களப்பணியாளருக்குத் தரப்படும் குறிப்புக்களில் (instructions) இடம்பெறு தல் வேண்டும்.

எந்த வகையான பதில்களைக் களப்பணியா ளரே நேரடியாக எழுதிக்கொள்வது, எவ்வெவற்றை நேரடியாக எழுதிக்கொள்ளாமல் ஒலிப்பதிவு நாடாவில் பதியச்செய்வது என்பன பற்றியும் சில குறிப்புக்களை வினாப்பட்டியலில் சேர்க்கவேண்டும். நாட்டுப்புற ஆய்வில் தங்கு தடையின்றித் தகவல்கள் கிடைக்க ஒலிப்பதிவு நாடாவைப் பயன்படுத்துதல் சாலச்சிறந் தது. நாட்டுப்புறக்கலைகளைப் பற்றிய ஆய்வுகளுக் கான தரவுகளைத் திரட்ட ஒலி-ஒளிப்பதிவு முறை மிக வும் பொருத்தமானதாகும். மொழிப்பயன்பாடு மற்றும் கொள்கைகள் குறித்த சமுதாயமொழியியல் மனப்பாங் குகள் ஆகியவற்றை அறிவதற்கான வினாக்களுடன் அளவீட்டு முறைக்கான வரைபடமும் இடம் பெறுதல் வேண்டும். எடுத்துக்காட்டாக நாட்டுப்புறக்கலையான கூத்து உங்களுக்குப் பிடிக்குமா? என்ற கேள்விக்கு விடைபெற ஐந்து அளவீடுகளை அடிப்படையாகக் கொள்ளலாம் :

அளவீட்டு முறை-1

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| மிகவும் பிடிக்கும் | ஓரளவு பிடிக்கும் | நடுநிலை (பதில் இல்லை) | ஓரளவு பிடிக்காது | முற்றிலும் பிடிக்காது |

இவ்வாறு அளவீடு செய்வதால் மனப்பாங்குகளைச் சரி யான முறையில் கண்டறிந்து அதற்கேற்ப நிகழ்ச்சி களை நடத்தவும் கொள்கைகளை வகுக்கவும், செயல்

முறைப்படுத்தலை மாற்றிக்கொள்ளவும் வாய்ப்பு ஏற்படும்.

## வினாப்பட்டியல் : பகுதி-1

### தகவலாளியைப் பற்றிய வினாக்கள்

(அடிப்படைத் தகவல்களைத் திரட்டல்)

| | | |
|---|---|---|
| 1.1 | தகவலாளியின் பெயர் | : |
| | ஆண் / பெண் | : |
| 1.2 | வயது | : |
| 1.3 | இருப்பிடம் | : |
| 1.4 | கல்வித் தகுதி | : |
| | அ) ஆரம்பக்கல்வி | : |
| | ஆ) உயர்நிலைக் கல்வி | : |
| | இ) உயர்கல்வி | : |
| 1.5 | கல்வி கற்கவில்லை | : |
| 1.6 | மதம் / ஜாதி / பிரிவு | : |
| 1.7 | சொந்த ஊர் / வட்டம் / மாவட்டம் / மாநிலம் | : |
| 1.8 | தொழில்/வேலை | : |
| 1.9 | நாள் / மாத / வருமானம் | : |
| 1.10 | பூர்வீகம் | : |
| 1.11 | தாய்மொழி | : |
| 1.12 | அறிந்துள்ள பிற மொழிகள் | : |

1.13 உங்களைச் சுற்றியுள்ளவர்கள்
என்ன மொழி பேசுவார்கள் ? :

1.14 நீங்கள் வீட்டில் / உறவினருடன்
என்ன மொழி பேசுவீர்கள் ? :

1.15 நீங்கள் இந்த ஊரில் வசித்து
வரும் கால அளவு :

1.16 நீங்கள் திருமணம் ஆனவரா ?
போன்றவை. :

## வினாப்பட்டியல் : பகுதி-2

### நாட்டுப்புற இலக்கியம், கலைகள் மற்றும் நம்பிக்கைகள் தொடர்பான வழக்காறு மற்றும் பயன்பாடு-ஆய்விற்கான வினாப் பட்டியல்.

### (மாதிரி வினாப்பட்டியல்)

2.1 நாட்டுப்புற இலக்கியங்கள்

2.1.1 உங்கள் வீட்டில் / சமுதாயத்தில் / ஊரில்
பாடல்கள், கதைப்பாடல்கள் பாடும் /
விளையாட்டுக்கள் விளையாடும் /
நாட்டுப்புற மருத்துவம் செய்யும் /
கலைகள், பழமொழிகள், விடுகதைகள்
சொல்லும் பழக்கம் உண்டா ? :

உண்டெனில்

என்னென்ன வகையான பாடல்கள் பாடுவர் / 1
விளையாட்டுகள் விளையாடுவர் / 2
கதைகள், பழமொழிகள், விடுகதைகள் 3
சொல்வர் / மருத்துவம் செய்வர் ? 4
5
......

இவற்றை

2.1.2 (ஆண் / பெண்)

i) யார் பாடுவர் ?
ii) யார் விளையாடுவர் ?
iii) யார் சொல்வர் ?
iv) யார் செய்வர் ?

இவற்றை

i) எந்த வயதினர் பாடுவர் ?
ii) எந்த வயதினர் விளையாடுவர் ?
iii) எந்த வயதினர் சொல்வர் ?
iv) எந்த வயதினர் செய்வர் ? :

இவற்றை

i) எந்தத் தொழில் செய்பவர் பாடுவர் ?
ii) எந்தத் தொழில் செய்பவர் விளையாடுவர்?
iii) எந்தத் தொழில் செய்பவர் சொல்வர் ?
iv) எந்தத் தொழில் செய்பவர் செய்வர் ? :

இவற்றை

i) எந்தச் சமுதாயப் பிரிவினர் பாடுவர்/
விளையாடுவர்/செய்வர்/சொல்வர் ? :

2.1.3 அ) எம்மாதிரியான சூழலில்.

i) பாடல்களைப் பாடுவர் ? 1
ii) விளையாட்டுகளை விளையாடுவர் ? 2
iii) கதைகள்/பழமொழிகள்/விடுகதைகள்
சொல்வர் ? 3
iv) மருத்துவம் செய்வர் ? 4
5
......

(பல்வேறு வயதுப் பிரிவினர், ஆண்-பெண், சமுதாயப் பிரிவினர் போன்று)

ஆ) வயதிற்கேற்ப, தொழிலுக்கேற்ப, 1
இடத்திற்கேற்ப (பாடுவோர், 2
விளையாடுவோர், சொல்வோர், 3
செய்வோர்-கேட்போர், காண்போர்) 4
நிகழ்ச்சிகள் வேறுபடுகின்றனவா ? 5
......

2.1.4 பாடல்கள், கதைப்பாடல்கள்/பழமொழிகள், 1
கதைகள், விடுகதைகள்/விளையாட்டுகள்/ 2
மருத்துவம் போன்றவை எந்தச் சூழலில் 3
யாருக்குப் பயன்படுகின்றன ? 4
5
......

2.1.5 இவற்றை

எப்படிப் பாடுகிறார்கள் ? 1
எப்படி விளையாடுகிறார்கள் ? 2
எப்படிச் சொல்கிறார்கள் ? 3
எப்படிச் செய்கிறார்கள் ? 4
5
......

2.1.6 இவற்றிற்கென்று தனியான நேரம் காலம் 1
உண்டா ? 2

(காலை/மாலை/இரவு/அறுவடை/நடவு/ 3
ஏற்றம்/கடற்பயணம்/தொழில்/விழா/ 4
திருமணம்/இறப்பு போன்று) 5
......

2.1.7 இவற்றின் பொருள் எதைப்பற்றியதாக அமைந்துள்ளது ? 1

i) கதை, பழமொழி, விடுகதை 2

ii) கதைப்பாடல், பாடல் 3

iii) விளையாட்டு 4

5

......

(தாய்வீட்டுப்பெருமை, கடவுள் நம்பிக்கை, வரலாற்று-புராண நிகழ்ச்சிகள், வீரம், ஏசுதல், பொழுதுபோக்கு)

2.1.8 இவற்றை நீங்கள் யாரிடம் தெரிந்து கொண்டீர்கள் ? எப்படித் தெரிந்து கொண்டீர்கள் ?

2.1.9 இதில் உங்களுக்குப் பிடித்தமானது எது ? 1
ஏன் ? (பாடல், கதைப்பாடல், கதை, 2
பழமொழி, விடுகதை, விளையாட்டு) 3

......

(தகவலாளியின் பதிலைப்பொறுத்து, துணைக் கேள்வியாக உங்களுக்கு இவற்றில் மிகவும் பிடித்தது எது ? எனக் கேட்கலாம்)

2.1.10 இவற்றைக் கற்றுக்கொள்ள எவ்வளவு 1
காலம் பிடித்தது ? 2
3

......

2.1.11 இவற்றை யாரிடம் கற்றுக்கொண்டீர்கள்? 1
(பெற்றோர், உறவினர், ஆசிரியர்) 2
3

......

2.1.12 இவற்றை நீங்கள் விரும்பிக் கற்றுக்கொண்டீர்களா? (அ) பிறருடைய வற்புறுத்தலினாலா?

2.1.13 இவற்றில் என்னென்ன வகைகள் உங்களுக்குத் தெரியும்?
1
2
3
......

2.1.14 நீங்கள் உங்களுக்குத் தெரிந்த இவற்றைப் பிறருக்குக் கற்றுத் தருகிறீர்களா?

ஆமெனில்

யாருக்கு, எந்த அடிப்படையில் கற்றுத் தருகிறீர்கள்? (வயது, தொழில், ஆண் - பெண் போன்று)
1
2
3
......

| | இலக்கியம் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | விளையாட்டு | பாடல் | கதைப் பாடல் | கதை | பழமொழி | விடுகதை | மருத்துவம் |
| உறவு முறைகள் | | | | | | | |
| தொழில் முறைகள் | | | | | | | |

2.1.15 பாடப்படும் பாடல்கள், கதைப்பாடல்கள், சொல்லப்படும் கதைகள், பழமொழிகள், விடுகதைகள், விளையாடப்படும் விளையாட்டுகள், செய்யப்படும் மருத்துவம் போன்றவையும் ஊருக்கு ஊர், சாதிக்குச் சாதி மாறுபடுகின்றனவா ? எப்படி ?

2.1.16 மாரியம்மன் திருவிழாவில் பாடப்படும் பாடல்கள் என்னென்ன ?
1
2
3
......

2.1.17 வீட்டில் நடத்தப்படும் விழாக்களின் போது பாடப்படும், நடத்தப்படும், விளையாடப்படும் நிகழ்ச்சிகள் என்னென்ன ?
1
2
3
......

2.1.18 தெருவில், பொது இடங்களில், வயலில், ஊருக்கு வெளியில் நிகழ்த்தப்படும் பாடல்கள் - ஆடல்கள் யாவை ?
1
2
3
......

2.1.19 இவற்றை யார் செய்கிறார்கள் ?
1
2
3
......

2.1.20 இவற்றை யாருக்காகச் செய்கிறார்கள் ?
1
2
3
......

2.1.21 இவற்றை எதற்காகச் செய்கிறார்கள் ?
1
2
3
......

2.1.22 உங்களுக்குத் தெரிந்து இவையெல்லாம் வழி வழியாக அப்படியே வருகின்றனவா ? அல்லது தற்போது இவற்றில் மாற்றம் ஏற்பட்டுள்ளதா ?

2.1.23 தற்போதைய நாடகம் ,சினிமா, தொலைக் காட்சி, கல்விச்சூழல், தொழிலமைப்பு போன்ற மாற்றங்களால் இதுபோன்ற நாட்டுப்புற இலக்கியங்களிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளனவா ? எப்படி ?

2.1.24 உங்கள் ஊரில் வழங்கும் பாடல், 1
கதைப்பாடல், கதை, பழமொழி, 2
விடுகதை, விளையாட்டு, மருத்துவம் 3
போன்றவற்றில் சமுதாயத்திற்குச்
சமுதாயம் மர்றுபாடு உள்ளதா ? எப்படி ?
......

2.1.25 உங்கள் ஊரைச் சுற்றியுள்ள ஊர்களில் 1
இவற்றின் வழக்காறுகளில் வேறுபாடு 2
காணப்படுகின்றதா ? என்னென்ன ? 3
......

2.1.26 தற்போது நீங்கள் பாடும் பாடல், 1
கதைப்பாடல், கதை, பழமொழி, 2
விடுகதை விளையாட்டு, மருத்துவம் 3
போன்றவை உங்கள் குடும்பத்தார்
முன்பு செய்ததுடன் ஒன்றுபட்டு
அமைந்துள்ளதா? அல்லது வேறுபட்டு
அமைந்துள்ளதா ? எப்படி ? ......

2.1.27 அ) நீங்கள் பாடுவது விளையாடுவது சொல்வது செய்வது போன்று உங்கள்

குழந்தைகளும் செய்கின்றனரா ?
அல்லது மாறுபட்டுச் செய்கின்ற
னரா ?

ஆ) மாறுபட்டிருப்பின் எவ்வாறு, 1
எதனால் என்று சொல்ல முடியுமா ? 2
3
.....

2.1.28 குறிப்பிட்ட வயதினர்தான் ஒரு குறிப்
பிட்ட பாடலைப் பாடவேண்டும், கதை
சொல்லவேண்டும், தொழில் செய்ய 1
வேண்டும், விளையாட்டுகள் விளை 2
யாடவேண்டும், மருத்துவம் செய்ய 3
வேண்டும் என்ற வரன்முறை ஏதேனும்
உண்டா ? என்னென்ன ? ......

2.1.29 உங்கள் பாடல்கள், கதைப்பாடல்கள், 1
கதைகள், பழமொழிகள், விடுகதைகள், 2
விளையாட்டுகள், மருத்துவம் எல்லாம் 3
தாய்மொழியைச் சார்ந்தவையா ? (அ)
வேற்றுமொழியைச் சார்ந்தவையா ? ......

2.1.30 வேற்றுமொழி என்றால் நீங்கள் அதை
யாரிடம் கற்றுக்கொண்டீர்கள் ? உங்கள்
தாய்மொழித்தாக்கம் அதில் உள்ளதா ?

2.1.31 நீங்கள் பங்கேற்கும் இந்நிகழ்ச்சிகள் எல்
லாம் தனியாகப் பங்கேற்கக் கூடியனவா
(அ) கூட்டாகச் செய்யக்கூடியனவா ?

2.1.32 உறவுமுறைக்கேற்ப பாடும் பாடல்கள், 1
கதைப்பாடல்கள், சொல்லும் கதைகள், 2
பழமொழிகள், விடுகதைகள், விளையாடும் 3
விளையாட்டுகள் மாறுபடுமா ? எப்படி ? .....

2.1.33 பாடல், கதைப்பாடல் பாடுவதனால் 1
கதைகள், விடுகதைகள், பழமொழிகள் 2
கூறுவதனால் விளையாட்டுகள் விளை 3
யாடுவதனால், நாட்டுப்புற மருத்துவம்
செய்வதனால் என்ன பயன்கள் விளை
கின்றன ? ......

2.1.34 குறிப்பிட்ட பிரிவினர்தான்
குறிப்பிட்ட பாடல், ஆடல், கதைகள்
கதைப்பாடல்கள், விளையாட்டுகள் 1
மருத்துவம் போன்றவற்றைப் 2
பாட, ஆட, சொல்ல, செய்ய 3
வேண்டும் என்ற வரன்முறை உண்டா ?
எதை யார் செய்கின்றனர் ? ஏன் ? ......

2.1.35 இந்நிகழ்ச்சிகளை மக்கள் எவ்வாறு விரும்பு
கின்றனர் என்று சொல்லமுடியுமா ?

(அளவீட்டு அடிப்படையில்)[4]

அ) எ. கா.

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| மிகவும் பிடிக்கும் | ஓரளவு பிடிக்கும் | நடுநிலை | ஓரளவு பிடிக்காது | முற்றிலும் பிடிக்காது |

ஆ)

| 1 | 2 | 3 |
|---|---|---|
| பிடிக்கும் | நடுநிலை | பிடிக்காது |

2.1.36 இவற்றை எந்தப் பிரிவினர்,
எந்த வயதினர், எந்தச் சமூகத்தினர், 1
அதிக அளவில் கண்டு ரசிக்கின்றனர் 2
என்று வரையறைப்படுத்த முடியுமா ? 3
எப்படி ? .....

2.1.37 விளையாட்டு, பாடல். கதைப்பாடல்,
கதைகள், பழமொழி, விடுகதை, 1
மருத்துவம் போன்றவற்றில் ஆண்-பெண் 2
என்ற இரு பாலினரில் அதிக பங்கு 3
பெறுபவர்கள் யார்? ஏன் என்று
வரையறுக்க முடியுமா? .....

## 2.2 நாட்டுப்புறக் கலைகள்

2.2.1 அ) உங்கள் ஊரில் ஆட்டம், கூத்து
போன்றவை பண்டிகை நாட்களில்,
விழாக்காலங்களில் நடைபெறுவ
துண்டா?

ஆ) உண்டெனில் அவை என்னென்ன 1
என்று குறிப்பிட்டுச் சொல்ல 2
முடியுமா? 3
......

2.2.2 இந்த ஊரில் என்ன வகையான கலைகள் 1
பிரசித்தி பெற்றவை? அவற்றைப் பற்றிச் 2
சிறிது விளக்கமாகச் சொல்ல முடியுமா? 3
......

2.2.3 கூத்து, பொம்மலாட்டம், கரகம், ஒயி 1
லாட்டம், தேவராட்டம் போன்றவற்றை
யார் நடத்துகிறார்கள்? 3
......

2.2.4 இக்கலைகள் எப்போது, எப்படி, எதற் 1
காக நடத்தப்படுகின்றன? 2
3
......

2.2.5 இந்த விழாவிற்கு இந்தவிதமான கலை 1
நடத்தப்படவேண்டும் என்ற நியதி 2
உண்டா ? எப்படி ? 3
......

2.2.6 திருவிழாவிற்குரியவை, பொதுவிழாவிற்
குரியவை என்ற பாகுபாடு இக்கலை
களில் உண்டா ? ஏன் ?

2.2.7 இக்கலைகளுக்கு வாயினால் பாடுவதோடு 1
இசைக் கருவிகள் ஏதேனும் இசைக்கப்படு 2
வதுண்டா ? 3

உண்டெனில் என்னென்ன என்று
சொல்லமுடியுமா ? .....

2.2.8 இவற்றில் பாடு பொருள், சொல்லப்படும் 1
நீதி எத்தன்மையனவாக இருக்கும் ? 2
3
......

2.2.9 இக்கலைகளில் பங்கேற்போர் யார் ? 1
2
3
......

2.2.10 எல்லாக் கலைகளிலும் பங்கேற்போர் 1
வேறுவேறு சமூகத்தைச் சார்ந்தவர்களா ? 2
எந்தெந்தச் சமூகத்தைச் சார்ந்தவர்கள் ? 3
......

2.2.11 குறிப்பிட்ட கலைக்குக் குறிப்பிட்ட 1
சமூகத்தினர் என்ற சமுதாயப் பாகுபாடு 2
உண்டா ? எப்படி ? 3
......

2.2.12 இக்கலைகளை நடத்த மரபுவழிக் 1
கலைஞர்கள் இருக்கிறார்களா ? 2
யார் என்று குறிப்பிட்டுச் சொல்ல 3
முடியுமா ? ......

2.2.13 இக்கலைகளை மரபுவழியன்றி விருப்ப 1
முள்ள வேறு பலருக்கும் கற்றுத் தருகி 2
றார்களா ? யாருக்கு ? 3
......

2.2.14 இந்தக்கலையை இந்த நேரத்தில்தான் 1
நடத்தவேண்டும் என்ற நியதி 2
உண்டா ? எந்த நேரம் ? 3
......

2.2.15 கலைகளுக்கு ஏற்ப இசைக்கருவிகள் 1
மாறுபடுகின்றனவா ? எப்படி ? 2
3
......

2.2.16 ஒரே கலை இடத்திற்கு ஏற்ப நிகழ்த் 1
தப்படுவதில் மாறுபடுவதுண்டா ? 2
3
......

2.2.17 வாய்மொழியாகக் கதைப்பாடல் 1
சொல்லி, பாடி நடத்தப்படுகிறதா ? 2
(அ) வாய்மொழி இன்றியும் கலைகள் 3
நடத்தப்படுகின்றனவா ? ......

2.2.18 இக்கலைகளின் பாடுபொருள் அல்லது 1
கூறுபொருள் என்னென்ன ? 2
3
......

2.2.19 தொலைக்காட்சி, வானொலி, நாடகம், சினிமா போன்றவற்றின் தாக்கத்தால் 1
இவற்றின் பாடுபொருள், ஆடல்முறை 2
போன்றவை மாறி இருக்கிறதா? 3
எப்படி என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியுமா? ......

2.2.20 இவற்றை நடத்த குறிப்பிட்ட சமூகத் 1
தினர் என்று யாரேனும் உள்ளனரா? 2
யார் என்று சொல்ல முடியுமா? 3
......

2.2.21 இவற்றை இன்ன நேரத்தில் இன்ன 1
இடத்தில்தான் நடத்தவேண்டுமென்ற 2
நியதி ஏதேனும் உண்டா? என்ன 3
என்று சொல்ல முடியுமா? ......

2.2.22 எதற்காக இத்தகையக் கலைகளை நடத்து கின்றனர்?

| | கலைகள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | பொம மலாட் டம் | கூத்து | பொய்க் குதிரை | கரகம் | காவடி | ஒயி லாட் டம் | தேவ ராட் டம் |
| உறவு முறைகள் | | | | | | | |
| தொழில் முறைகள் | | | | | | | |

## 2.3 நாட்டுப்புற மந்திரங்கள், நம்பிக்கைகள் சடங்குகள் பற்றிய வினாக்கள்.

2.3.1 உங்கள் ஊரில் மந்திரங்கள், நம்பிக்கைகள், சடங்குகள் போன்றவை பின்பற்றப் படுகின்றனவா ?

ஆமெனில்

என்னென்ன என்று குறிப்பிட முடியுமா ?

1
2
3
......

2.3.2 மந்திரங்கள், நம்பிக்கைகள், சடங்குகள் போன்றவற்றில் நல்லவை, தீயவை என்ற வகைப்பாடு உண்டா ? என்னென்ன என்று குறிப்பிட முடியுமா ?

1
2
3
.....

2.3.3 நல்ல மந்திரங்களை எப்போது பயன் படுத்துவார்கள் ?

1
2
3
......

2.3.4 யாருக்குப் பயன்படுத்துவார்கள் ?

1
2
3
......

2.3.5 எதற்காகப் பயன்படுத்துவார்கள் ?

1
2
3
......

2.3.6 தீய மந்திரங்களை எப்போது பயன் 1
படுத்துவார்கள் ? 2
3
......

2.3.7 யாருக்குப் பயன்படுத்துவார்கள் ? 1
2
3
......

2.3.8 எதற்காகப் பயன்படுத்துவார்கள் ? 1
2
3
......

2.3.9 வயதிற்கேற்ப, சமூகத்திற்கேற்ப 1
சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவை 2
மாறுபடுமா ? எப்படி ? 3
......

2.3.10 சடங்குகளில், நம்பிக்கைகளில் தீயவை,
நல்லவை என்ற பாகுபாடு உண்டா ?
இதன் முக்கியத்துவம் என்ன ?

2.3.11 வயதிற்கேற்ப செய்யும் சடங்குகளில் 1
மாறுபாடு காணப்படுகிறதா ? 2
எப்படி ? 3
......

2.3.12 வயதிற்கேற்ப நம்பிக்கைகளும் மாறுபடு
கின்றனவா ? எப்படி ?

2.3.13 எந்தெந்த சமயங்களில் நேரங்களில் 1
என்னென்ன சடங்குகள் செய்வார்கள் ? 2
3
......

2.3.14 இடம், சூழலுக்கு ஏற்ப சடங்குகள் மாறுபடுவதுண்டா ? எப்படி ?
1
2
3
......

## அடிக்குறிப்புகள்

1. A Sociolinguistic Survey of Tamil and Telugu speech varities in the Western Districts of Tamilnadu, pp. 1-4
2. Questionnaire for the Study of Multilingualism, pp. 1-2
3. நாட்டுப்புற இயல் ஆய்வு, பக். 185
4. Questionnaire Bank for Sociolinguistic Surveys in India, pp. 57-67

இயல் - 6

# தரவு தொகுத்தல் - வகுத்தல் முறைகளும் பகுப்பாய்வும்

## 6.1 தரவு தொகுத்தல் - வகுத்தல்

களப்பணி மேற்கொண்டு நேர்காணல், அஞ்சல் வழி, உற்று நோக்கல் போன்ற முறைகளின் வாயிலாகக் களப்பணியாளர் அல்லது ஆய்வாளர் திரட்டிய தரவுகளைப் பகுப்பாய்வின் தேவைக்கு ஏற்ப ஒழுங்கு படுத்துதல் (processing) இன்றியமையாத பனியாகும்.[1] களப்பணியின்போது முறையாகத் தரவு சேகரிக்கப்பட்டிருந்தாலும் சில சமயங்களில் சில செய்திகள் புதிதாகக் கிடைக்கும்பொழுது அவற்றையும் ஆங்காங்கே களப்பணியாளர் (field worker) பதிவு செய்திருப்பார். மேலும் களப்பணியின்போது சில தகவல்களை எழுதிப் பதிவு செய்திருப்பார். இன்னும் சிலவகைத் தரவுகளை எழுதிப் பதிவு செய்யாமல் ஒலிப்பதிவு அல்லது ஒலி-ஒளிப்பதிவு நாடாவில் மட்டுமே பதிவு செய்திருப்பார். இவ்வாறு ஒலி-ஒளிப்பதிவு நாடாக்களில் பதிவு செய்யப்பட்ட தரவுகளைக் களப்பணி முடிந்தபின் மீண்டும் கேட்டு அல்லது கண்டு அவற்றைக் கையால் எழுதிப் பதிவுசெய்து கொள்ளவேண்டும்.

இவ்வாறு பதிவு செய்துவந்த தரவுகள் அனைத்தையும் அணுகுமுறைகளில் காணப்படும் கொள்கைகளைப் பயன்படுத்துவதற்கு ஏற்ற வகையில் இனங்காண வேண்டும். அதாவது அவற்றைப் பகுத்து அறியவேண்டும். எடுத்துக்காட்டாக, மொழியியலாய்வில் மொழியமைப்பு விளக்கத்திற்காகத் தரவு திரட்டும் போது சொற்கள், வாக்கியங்கள், தொடர்கள், உரைக் கோவை, பாடல், உரையாடல் எனப் பல்வேறுவகையான அமைப்புக்களும் மொழியியலாளருக்குக் கிடைக்கும். மொழியமைப்பு விளக்கத்தில் ஒலிகள் (speech sounds) முதல் உரைக்கோவை (discourse) வரையுள்ள கூறுகள் இடம்பெறும். சொல்லியல் அமைப்பினைக் (morphological structure) கண்டறிவதற்குத் தனிச்சொற்கள் மற்றும் அவற்றோடு சேர்ந்துவரும் உருபுகள் தேவைப்படுகின்றன. அதாவது தனிச்சொற்கள், அவற்றின் அடிப்படையில் பெறப்படும் சொல்லமைப்புக்கள் நமக்குத் தேவையாகின்றன. ஆகவே உரைக்கோவையிலிருந்தும், வாக்கியங்களிலிருந்தும், தொடர்களிலிருந்தும், சொற்கோவையிலிருந்தும் நாம் தனிச்சொற்களையும், அவற்றோடு இடம் பெறும் ஒட்டுக்களையும் (affixes) முதலில் பகுத்துத் தொகுக்கவேண்டும். இத்தகைய பகுப்பும் தொகுப்பும் சொல்லியல் அமைப்பினை ஒட்டியும், விதிகளை ஒட்டியும் செய்யப்பட்டால்தான் சொல்லியல் ஆய்விற்கு ஏற்ற முறையான, செம்மையான தரவுகள் நமக்குக் கிடைக்கும். அப்பொழுதுதான் அணுகுமுறையில் காணப்படும் சொல்லியல் கோட்பாடுகளைப் பயன்படுத்தி உருபன்களை இனங்கண்டு சொல்லியல் விளக்கம் தரமுடியும்.

இத்தகையமுறை மொழியியலில் மட்டுமல்லாமல், பிற அறிவுத்துறைகளிலும் மேற்கொள்ளப்பட்டு வரும் ஒன்றேயாகும். நாட்டுப்புறவியலாய்விலும் இம்முறை செயற்பட்டு வருவதைக் காண்கிறோம். எடுத்துக்காட்டாக, நாட்டுப்புற இலக்கிய வகையான கதைப் பாடல்களை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளும் நிலையில் ஒரு குறிப்பிட்ட கதைப்பாடலைப் பற்றிய தரவுகளை நாம் திரட்டுகிறோம். ஒரு கதைப்பாடல் எவ்வாறு இடத்திற்கு இடம், சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபடுகிறது என்பதனையும் பொருள் மாற்றம் பெற்று விளங்குவதையும் பதிவு செய்துகொள்கிறோம். இதனோடு தொடர்புடைய சூழலையும் (context) அறிந்து கொள்கிறோம். இவ்வாறு திரட்டிய தரவுகள் அனைத்தையும் ஆய்வுக்கு உட்படுத்துகிறோம். உட்படுத்தும் நிலையில் அவற்றை ஆய்வு அணுகுமுறையின் தேவைக்கு ஏற்பப் பிரிக்கவேண்டியதாகிறது. கதையைச் சொல்லும்போது எவ்வாறெல்லாம் உரைநடையும் பாடலும் இடம் பெறுகின்றன, எந்தச் சூழலில் இடம் பெறுகின்றன, யாருடைய வழக்கில் இடம் பெறுகின்றன, அவ்வாறு இடம் பெறும்போது அவற்றை விளக்கும் முறைகள் எவவாறு அமைகின்றன என்பவற்றையெல்லாம் மொத்தத் தரவுகளிலிருந்து தனித் தனியாகப் பிரிக்கவேண்டும். இவ்வாறு பிரித்து வகைப் படுத்தினால்தான் அது அணுகுமுறைகளில் சொல்லப் பட்டுள்ள கொள்கைகளைப் பயன்படுத்திப் பகுப்பாய்வு செய்வதற்கு ஏற்றதாக அமையும்.

நாட்டுப்புறவியலில் கலைகளை ஆராயும் நிலையில், கலைகளை நிகழ்த்தும்போது பயன்படுத்தும் மொழி, இசை, ஆடல், கருவி, பொருள், அபிநயம் போன்றவற்றையும் பயன்படுத்தப்படும் ஆடை, அணி

கலன்கள், திரை அலங்காரங்கள், மேடை அமைப்பு, போன்றவற்றையும் பிரித்து இனங்காணவேண்டும். இவ்வாறு பகுத்துத் தொகுப்பதால் கலைகள் தொடர்பான பல்வேறு கூறுகளைப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் ஓரிடத்தில் இடம்பெறச் செய்யமுடியும். இவ்வாறு செய்யும்பொழுது எந்தவகையான பகுப்பாய்விற்கு ஏற்ற தரவுகள் நமக்குக் கிடைக்கவில்லை என்பதும், எந்தவகையான பகுப்பாய்விற்குத் தரவு இன்னும் தேவைப்படுகிறது என்பதனையும் தெளிவாக அறிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படும். இதைக் கண்டறிந்த பின் தேவைக்கு ஏற்ப மீண்டும் களப்பணிக்குச் சென்று விடுபட்டவற்றையும் இன்னும் தேவையானவற்றையும் திரட்டி வரவும் முடியும்.

இன்றைய ஆய்வுகளில் குறிப்பாகத் தரவு பகுத்தல் - தொகுத்தலில் புள்ளியியல் அறிவும் களப்பணியியல் அறிவும் மிகவும் பயனுள்ளதாக அமைந்து வருகின்றன. எடுத்துக்காட்டாக, தரவு வகைகளை முறைப்படுத்தி, தரவுகளைக் கணிப்பானில் செலுத்தினால் கணிப்பான் அவற்றைப் பகுத்தும் தொகுத்தும் கொடுத்துவிடும். இதனால் ஆய்வாளருக்கு அவர்தம் பணி எளிதாக முடிவதுடன் அவர் எடுத்துக்கொள்ளும் காலமும் மிகக்குறைந்த அளவினதாகவே இருக்கும். இதனையே இன்று data processing என்று குறிப்பிடுகிறார்கள்.[2] தற்பொழுது இதற்காகப் பயிற்சியினையும் கொடுக்கிறார்கள். சமுதாய அறிவியல் (social sciences) ஆய்வுகளுக்கும் கூட இத்தகைய தரவு தொகுத்தல் பகுத்தல் முறைகள் மிகவும் பயனுள்ளதாக அமைந்து வருவதைப் பார்த்து வருகிறோம். இந்தியச் சமுதாய அறிவியல் ஆய்வுக்கழகம் (ICSSR) கடந்த பத்து ஆண்டுகளுக்கும் மேலாகச் சமுதாய அறிவியல் ஆய்வுகளுக்கான தரவுகளைத் தொகுத்தல் - பகுத்தல்

தொடர்பான பயிற்சி வகுப்புக்களை நடத்தியும், பல் வேறு ஆய்வாளர்களுக்கு உதவியும் வருகிறது. இத்த கைய பயிற்சியினால் ஆய்வாளர்கள் தமது தரவுகளை முறையாகப் பயன்படுத்தி நிறைவான மற்றும் செம்மை யான ஆய்வுகளை அளித்திட இயலும்.

## 6.2 பகுப்பாய்வு

சேகரிக்கப்பட்ட தரவுகளைப் பகுத்துத் தொகுத்த பின் ஓர் ஆய்வாளர் மேற்கொள்ளும் அடுத்த முக்கிய மான பணியே பகுப்பாய்வு (analysis) எனப்படு கிறது. இதை மேற்கொள்வதற்கு அடிப்படையாக அமைவது ஆய்வு அணுகுமுறையாகும் (research methodology). ஒவ்வொரு அணுகுமுறையிலும் கொள்கைகளும் கோட்பாடுகளும் (principles and concepts) சொல்லப்பட்டிருக்கும். இவற்றின்கீழ் உத்திகளும் (techniques) சோதனைகளும் (tests) இடம் பெற்றிருக்கும். சிலவற்றைக் கண்டறிய சில கருதுகோள்களும் (hypotheses) வலியுறுத்தப் பட்டிருக்கும். இவையனைத்தையும் ஓர் ஆய்வாளர் பகுப்பாய்வு செய்யும்போது கடைப்பிடிக்கவேண்டும் - கவனத்தில் கொள்ளவேண்டும்.

சில கொள்கைகளையும் கோட்பாடுகளையும் பயன்படுத்தும்போது அதற்கேற்ப தரவு அமைந்துள் ளதா என்பதைப் பகுத்துத் தொகுக்கப்பட்ட தரவுகளைக் கண்டதும் ஆய்வாளரால் சொல்லிவிடமுடியும். அதே போன்று யூகங்கள் சரியானவையா என்று கண்டறிவ தற்கு ஏற்ற தரவும் கொடுக்கப்பட்டுள்ளதா என்பதனை யும் கண்டுகொள்ள முடியும். சொல்லப்பட்டுள்ள சோத னைகளை நடத்துவதற்கேற்ற தரவுகள் கிடைத்துள்ள

எவா என்பதனையும் ஆய்வாளரால் உணர்ந்து கொள்ளமுடியும். ஆகவே முழுமையான பகுப்பாய்விற்கு முன்னர், tentative analysis என்று சொல்லப்படும் - தற்காலிகப் பகுப்பாய்வினை ஆய்வாளர் முதலில் மேற்கொள்ளவேண்டியது இன்றியமையாததாகிறது. இத்தகைய பகுப்பாய்வினை மேற்கொள்ளும் போது தரவின் நிறை-குறை தெரிவதோடு சரியான தரவு எது என்பதும், பகுப்பாய்விற்கு ஏற்ற தரவு எது என்பதும் தெளிவாகும். ஆகவே இதனடிப்படையில் ஓர் ஆய்வாளர் தமது தரவு தொகுத்தல் - பகுத்தல் பணியில் ஏற்பட்டுள்ள தவறுகளைத் திருத்திக்கொள்ளவும் மீண்டும் களப்பணி செய்து தரவுகளை நிறைவானதாக ஆக்கிக்கொள்ளவும் வழி ஏற்படும். அதோடு முழுமையான பகுப்பாய்வினைச் செம்மையாகச் செய்து எதிர்பார்த்த முடிவுகளை (expected outcome) அடையவும் முடியும். அதாவது ஆய்வின் குறிக்கோளை அடைவதற்கு இத்தகைய பகுப்பாய்வு முறை சிறப்பானதாக அமையும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக்கள் பகுப்பாய்வு மேற்கொள்ளும் நிலையில் ஏற்படும் பாங்கினை எடுத்துக்காட்டும்[3] :

## i) தாலாட்டுப் பாடல் : அமைப்பு - பொருள் விளக்கம் பெறுதல்

### தாலாட்டு : அமைப்பு

i) இசைக்குறிப்புச் சொற்கள்
ii) இசைக்கான அசைச்சொற்கள்
iii) பிறசொற்கள் : i) விளிச்சொற்கள்
ii) பிறசொற் பயன்பாடு

எ. கா. இசைக்குறிப்புச் சொற்கள்

| | |
|---|---|
| ஆராரோ | ரூரிரோ |
| ஆரிரரோ | ரூரிரரோ |
| ராராரோ | ரீரீரீ |
| ராரிரரோ | ஓ |
| ராரீ | லுலுலாயி |

போன்றவை

ii) விளிச்சொற்கள்

| | |
|---|---|
| கண்ணே | சொர்ணமே |
| நான் பெத்த | சுந்தரியே |
| பொன்னு | போன்றவை |
| என் சின்னையா | |
| எங்கட்டிக் கரும்பே | |
| நித்திலமே | |
| கண்மணியே | |
| பசுங்கிளியே | |
| என் ராசா | |
| கண்ணே நீ | |

iii) பிறசொற்கள்

1) உறவுமுறைச் சொற்கள்

| | | |
|---|---|---|
| மாமா | அப்பன் | |
| மகன் | பாட்டனார் | |
| தம்பி | அத்தை மவன் | |
| ஆத்தாள் | அப்பா | |
| தாய் | சித்தப்பா | போன்றவை |

2) குழந்தைக்குரிய கருவிகள் பற்றிய சொற்கள்

தங்க ஆனை
தங்க சேனை போன்றவை

3) பிற (வழக்குச் சொற்கள் போன்றவை)

மேலு
கொண்டாடுவார்
ஆரும்
அடிச்சானோ
ஆனைகளும்
பொங்கலு போன்றவை

தாலாட்டு : பொருளமைப்பு

1. குழந்தையைப் பற்றியன

i) குழந்தையில்லாத போது ஏற்பட்ட துன்பங்கள்

ii) குழந்தையை வருணித்தல்

iii) குழந்தையின் ஒளிமயமான எதிர்காலத்தைப் பற்றி எண்ணிப்பாடுதல்

iv) குழந்தையின் அழுகைக்கான காரணம் வினவல்

v) குழந்தை பிறந்ததன் காரணங்களைச் சொல்லுதல்

2. குழந்தைக்குரிமையான கருவிகள் பற்றியன

i) குழந்தைப் பொருட்களின்

-அழகு, உயர்வு, தேவை

ii) குழந்தைக்குப் பரிசுப் பொருட்களை அளித்தவர்களைப் பாராட்டுதல்

(அவர்களது கொடை, வளம், துணிவு, சிறப்பு போன்றவை)

3. குழந்தைகளின் உறவினர் பற்றியன

i) உறவு முறை
ii) அவர்களது தொழில்
iii) அவர்களது குடும்பச்சிறப்பு

4. இயற்கை வருணனை

i) நாடு
ii) மலை
iii) ஆறு
iv) தோட்டம்
v) வயல்
vi) காலம்
vii) இடம்

போன்றவை

இவ்வாறு தொகுத்து வகுக்கப்பட்ட தரவுகளை அடிப்படையாகக் கொண்டு பகுப்பாய்வு மேற்கொள்ளப் படுகிறது.

தாலாட்டுப் பாடல் : பகுப்பாய்வு
(அமைப்பியல் அணுகுமுறையில்)




1. கருத்து வெளிப்பாட்டமைப்பு
2. உரைக்கோவை வளம்
3. சொல்வளம் : —எளிமை
   —இனிமை
   —பொதுமை
   —ஆற்றல்
4. உறவுமுறைச் சொற்பயன்பாடும் - கருத்தமைப்பும்
5. செயல்கள்
6. சிறப்புச் சொற்பயன்பாடு

## ii) கதைப்பாடல்-ஆய்வு

காமன் கதைப்பாடல் அமைப்பு-கருத்துப் புலப்பாடு இவற்றைக் கண்டறிய கீழுள்ளவாறு அணுகுமுறைகள் பயன்படுத்தப்படுவதற்கேற்ப தரவுகளின் தொகுப்பும் பகுப்பாய்வும் அமையும்[4] :

1. கதைப்பாடல் : வழக்காறு

வடிவங்கள்
பொருள்
நடை
தொடர்புடைய பிற நாட்டுப்புறவிலக்கியக் கூறுகள்
துணைக் கதைகள்

2. கதைப்பாடல் - கருத்துப் புலப்பாடு

மொழிவழி
எடுத்துச் சொல்லும் முறைவழி
எளிமையாக்கம்
பரவலாக்கம்

3. கதைப்பாடல் : வரலாறு

தோற்ற காலம்
காலந்தோறும் மாற்றம்
பொருள் மாற்றம்
அமைப்பு மாற்றம்
இன்றைய நிலை : வழக்காறு

கொள்கைகள், கோட்பாடுகள், உத்திகள் மற்றும் சோதனைகள்

i) அமைப்பு : மொழியமைப்புக் கோட்பாடுகள் (அமைப்பு+வெளிப்பாடு)

விளக்க மொழியியல் கொள்கைகள்
வரலாற்று மொழியியல் கொள்கைகள்
பொருள் மாற்றம் தொடர்பான கொள்கைகள்

ii) பயன்பாடு : சமுதாய மொழியியல் கோட்பாடுகள்

எளிமை
நிலைபேறு
கருத்தமைவு - வெளிப்பாடு
சமுதாய மற்றும் மொழிக்கூறுகளின் ஒப்புமை
மெய்ப்பாடு

iii) சமுதாயநிலை - சூழல் போன்றவை

1. நம்பிக்கைகள்
2. பழக்க வழக்கங்கள்
3. சமுதாயச் சூழல்கள்
4. சமுதாயக் கட்டுக்கோப்பு
5. சமுதாய நெறிமுறைகள்

வெளிப்பாடு

1) நீதிநெறிகள்
2) தத்துவங்கள்
3) வாழ்வியல் கூறுகள் போன்றவை

## அடிக்குறிப்புகள்

1. Study of Social Dialects in Tamil, pp. 15-18.
2. Sociolinguistic Study of Multilingualism, pp. 3-4.
3. தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள், பக். 55-80
4. காமன் கதைப்பாடல் - ஓர் ஆய்வு, பக். 75-93

இயல் - 7

# முடிவுரை

நாட்டுப்புறவியல் ஆய்வு நெறிமுறைகளை எடுத்தியம்பும் நோக்குடன் எழுதப்பட்ட இந்நூலின் இரண்டு, மூன்று, நான்கு என்ற மூன்று இயல்கள் நூலின் பெரும்பகுதியாகவும் மையப்பகுதியாகவும் அமைந்துள்ளன. இவ்வியல்கள் செய்திகளை விரிவாகவும், செறிவாகவும், நிறைவாகவும், ஆய்வுச் சிந்தனையைத் தூண்டும் வகையிலும் ஆய்வின் வளர்ச்சிக்கு ஏற்ற முறையிலும் அமைந்து விளங்குகின்றன.

இரண்டாம் இயலாகிய நாட்டுப்புறவியல் மூன்று பிரிவுகளாகப் பிரித்து விளக்கப்பட்டுள்ளது. நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள், மந்திரங்கள்-நம்பிக்கைகள்-சடங்குகள் போன்றவையே இம்மூன்று பிரிவுகளாகும். எளிமை கருதியே இவ்வாறு பிரிக்கப்பட்டுள்ளது. முதற் பிரிவாகிய இலக்கியங்களில் இயல் விளக்கத்தோடு, இலக்கியங்களை வகைப்படுத்தியும் குறிப்பிடப்பட்டுள்ளது. நாட்டுப்புறங்களில் அழியாது மரபுவழி இன்னும் வாழ்ந்துவரும் நாட்டுப்புறக் கலைகளான பொய்க்குதிரை, பொம்மலாட்டம் போன்றவற்றைப் பற்றிய விளக்கங்கள் இரண்டாம் பிரிவில் இடம் பெற்றுள்ளன. மூன்றாம் பிரிவில் மக்களிடையே நிலவிவரும் நம்பிக்கைகள், அவர்களிடையே காணப்படும்

மந்திரங்கள், சடங்குகள் போன்றவற்றைப் பற்றிய சிறு விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. மேலும் இவ்விய லில் நாட்டுப்புற இலக்கியப் பண்புகளுடன், மக்களின் பண்பாட்டுக் கூறுகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. நாட்டுப்புறங்களில் கொண்டாடப்பட்டு வரும் இன்றிய மையா விழாக்கள், அவற்றின் காரணங்கள் போன்ற வையும் கூறப்பட்டுள்ளன. விளையாட்டுகளும், மருத் துவமும் மக்கள் வாழ்வில் இன்றைய நிலையில் பெரும் பங்கு வகிப்பதால் அவற்றைப் பற்றிய விளக்கம் ஓரளவு விரிவாகவே தரப்பட்டுள்ளது. நாட்டுப்புற விளையாட் டுகள் விளையாடுவோர் - வயதடிப்படை, பாலடிப்படை மற்றும் தனிநபர், இருவர், குழு என்றும் இடம், காலம் என்பதுடன் இன்றைய பாகுபாடான அக, புற விளையாட்டுகளின் அடிப்படையிலும் பிரித்து விளக்கப் பட்டுள்ளன. அதுபோன்றே நாட்டுப்புறங்களில் அன்றி லிருந்து நடைமுறையில் இருந்துவரும் நாட்டுப்புற மருத்துவத்தின் பாங்கினையும் சிறப்பியல்புகளையும் இவ்வியல் ஓரளவிற்கு வெளிக்கொணர்ந்து நிற்கிறது. மேலும் நாட்டுப்புறவியலின் சமுதாயப் பங்கு, பணி இன்றியமையாமை போன்றவை விளக்கப்பட்டிருப்ப தோடு, அமைப்பியலாய்வு வழி நாட்டுப்புறவியலின் சிறப்பியல்புகள் சுட்டப்பட்டுள்ளன. தமிழகக் கதைப் பாடல்களும் அயல்நாட்டுக் கதைப்பாடல்களும் எவ் வாறு அமைப்பிலும் கதைக்கருக்கூற்றிலும் ஒன்றுபட் டுள்ளன எனவும் விளக்கப்பட்டுள்ளது.

இயல் மூன்றில் ஆய்வின் இன்றைய நிலையும் ஆய்வின் வகைகளும் குறிப்பிடப்படுகின்றன. நாட்டுப் புறவியலாய்வின் இன்றியமையாமை, தேவை போன் றவை எடுத்துக்கூறப்படுவதுடன், இன்றைய சமுதா யத்திற்குப் பயன்படும் வகையில் மொழியியல், உள வியல், வரலாற்றியல், அமைப்பியல், மானிடவியல்,

சமுதாயவியல், போன்ற இயல்களின் அடிப்படையிலும் குறிப்பிட்ட கால அடிப்படையிலும் ஆய்வு அணுகு முறைகள் விளக்கப்பட்டுள்ளன. மேலும் நாட்டுப்புற வியலுக்கான கொள்கைகள், கோட்பாடுகள் போன்ற வையும் இதில் விளக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் சிந்தனை வளர்ச்சியைத் தூண்டும் சமுதாயப்பணியி னையும் பயனையும் பெறமுடியும். மேலும் நாட்டுப்புற வியலுக்கான அடிப்படைத் தேவைகள், இன்றியமை யாமை போன்றவற்றை வளர்ப்பதன் மூலம் பல்துறை வளர்ச்சியினைப் பெறமுடியும். மேலும் கருத்து வெளிப்பாட்டிற்குத் தேவையான பரவலாக்கம் பற்றி யும் இவ்வியலில் பேசப்படுகிறது. கல்வி வளர்ச்சியின் இருநிலை பற்றிய விளக்கம் பன்நோக்குப் பார்வையில் சுட்டப்படுகிறது. இவற்றோடு ஆய்விற்கான அடிப் படைத்தேவைகள் பற்றிய விளக்கமும் தரப்பட்டுள்ளது.

நான்காம் இயல், களப்பணி என்பதன் விளக்கத் தையும் களப்பணியின் தேவை, இன்றியமையாமை போன்றவற்றையும் விளக்குகிறது. மேலும் களப்பணி யின் அடிப்படை, களப்பணிக்கு வேண்டிய சூழல், களப்பணியின்போது சேகரிக்கப்பட வேண்டிய தகவல் கள், அத்தகவல்கள் பெறும் மூலங்கள் போன்ற கூறு களை முறையாக விளக்கிக் கூறுகின்றது. களப்பணி அமைய வேண்டிய இடம், சூழல், தகவலாளி தேர்ந் தெடுப்பு முறைகள் போன்ற கூறுகளும் மேற்கொள்ளப் படவேண்டிய உத்திகளும் விளக்கப்பட்டுள்ளன. நேரடி யாகக் களப்பணி மேற்கொள்வதன் மூலம் கிடைக்கும் தரவுகளின் அளவையும் தரத்தையும் எடுத்துக் கூறுகின் றது இவ்வியல். இதற்கான முறைகளாக உற்று நோக்கல் முறை, நேர்காணல் முறை போன்றவற்றை யும் விளக்குகின்றது.

ஐந்தாம் இயல் களப்பணி செய்து தரவு திரட்டு வதற்குத் தேவையான இன்றியமையாத கருவியாகிய வினாப்பட்டியலைக் கொடுத்துள்ளது. இம்மாதிரி வினாப்பட்டியல் விரிவாகவும் களப்பணி செய்வோருக்கு உறுதுணையாகவும் அமையும் நிலையில் தயாரிக்கப் பட்டுள்ளது. இவ்வினாப்பட்டியலில் முதல் பகுதி அடிப்படைச் செய்திகளைக் கொடுக்கும் வினாக்களைக் கொண்ட பகுதியாக, அதாவது பெயர், வயது, தொழில், கல்வித்தகுதி, சமுதாயப்பிரிவு என்ற பொதுத் தகவல்களைச் சேகரிக்கும் முறையில் அமைக்கப்பட்டுள் ளது. ஆய்விற்குத் தேவையான கருத்துக்கள், செய்தி கள் போன்றவற்றைப் பெறுவதற்கு ஏற்ற வகையில் அமைந்த வினாக்கள் இரண்டாம் பகுதியாகவும் அமைக் கப்பட்டுள்ளது. இவ்விரண்டாம் பிரிவில் இலக்கியம், கலை, நம்பிக்கை என்று முன்னர்க்கூறப்பட்ட முப்பிரிவு அமைப்பிலேயே வினாக்கள் முறையாகத் தொடுக்கப் பட்டுள்ளன. இவ்வினாப்பட்டியல் தேவைக்கேற்ப ஆய்வாளர் மாற்றியமைத்துக் கொள்ளும் வகையில், நிறைவானதாக அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக் கது. களப்பணிக்குச் செல்வோர் இவ்வினாக்களுக்குப் பெறும் பதிலிலிருந்து தாங்களே மேலும் வினாக்களை வருவித்துக் கொள்ளக்கூடிய முறையில் வினாப்பட்டியல் அமைந்துள்ளதும் குறிப்பிடவேண்டிய செய்தியாகும்.

ஆறாம் இயலில் தரவுகளைத் தொகுத்தல் - வகுத்தல் முறைகளும், பகுப்பாய்வும் விளக்கப்பட்டுள் ளன. இவ்வியலில் தரவுகளில் எவற்றை எப்படிப் பதிவு செய்யவேண்டும், எவற்றை எழுதிக்கொள்ள வேண்டும், பதிவு செய்யப்பட்ட தரவுகளை எவ்வாறு பகுப்பும் - தொகுப்பும் செய்து அமைக்கவேண்டும் என் பன போன்றவை விளக்கப்பட்டுள்ளன. மேலும் சில

எடுத்துக்காட்டுகளின் மூலம் அதாவது பாடல்கள், கதைப்பாடல்கள் போன்றவற்றில் சில பாடல்களை எடுத்துக்கொண்டு, அவற்றை எவ்வாறு பகுத்துத் தொகுக்கவேண்டும் என்பதும் விளக்கப்பட்டுள்ளது. இதுபோன்ற எளிய ஆனால் இன்றியமையாத விளக்கங்களின் மூலம் பகுப்பாய்வு முறை தெளிவுபடுத்தப் பட்டுள்ளதால் இந்நூலினைக் கற்போர் பயனடைய வாய்ப்பு அதிகமாக உள்ளது.

இந்நூலின் முதல் ஆறு இயல்களில் சொல்லப் பட்டுள்ள கருத்துக்கள், விளக்கப்பட்டுள்ள செய்திகள், வெளிப்படுத்தப்பட்டுள்ள கோட்பாடுகள், எடுத்தாளப் பட்டுள்ள நெறிமுறைகள் போன்ற பலவும் நாட்டுப்புற வியல் பற்றிய கருத்துக்கோவையாகவும், நாட்டுப்புற வியலாய்வைப் பற்றிய உரைக்கோவையாகவும் அமைந்து நாட்டுப்புறவியலாய்வினை வரன்முறைப் படுத்திக்கொள்ளவும், நெறிப்படுத்திக்கொள்ளவும், வளப் படுத்திக்கொள்ளவும் சில வழிமுறைகளை வகுக்க உதவு கின்றன என்றாலும் இன்று ஆங்காங்கே நடைமுறை யில் பின்பற்றப்பட்டு வரும் வழக்கிலிருந்து வரும் கொள்கைகள், கோட்பாடுகள், நெறிமுறைகள், உத்தி கள், சோதனைகள் போன்றவை அனைத்துமே இங்கு சொல்லப்படவில்லை. சில விடுபட்டிருக்கலாம்; சில முழுமையாக எடுத்துச் சொல்லப்படாமலிருக்கலாம். எனினும் நாட்டுப்புறவியலாய்வின் இன்றைய தேவையை முன் நிறுத்தியும் மனதிற்கொண்டும் சில அணுகுமுறைகள் மற்றும் நெறிமுறைகள் இங்கே தெளிவாகவும் முறையாகவும் அதே நேரத்தில் எளிமை யாகவும் விளக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

களப்பணி, வினாப்பட்டியலமைப்பு, தகவலாளி கள் தேர்ந்தெடுப்புமுறை, முன்னோட்டாய்வு போன் றவை சில இயல்களில் அவற்றின் தேவை, இன்றி யமையாமை கருதி தெளிவுபட விளக்கப்பட்டுள்ளன. ஆங்காங்கே சொல்லப்பட்டுள்ள விளக்கங்களில் எடுத் துக்காட்டுகளும் தரப்பட்டுள்ளன. இவற்றிற்கிடையே காணப்படும் தொடர்புகள் போன்றவையும் ஒன்றின் விளக்கம், மற்றொன்றிற்கு எந்த அளவிற்குத் தேவை யானது என்பதும் இதிலே எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. நாட்டுப்புற இலக்கியங்கள், கலைகள் போன்றவற்றை எடுத்துக்காட்டுக்களாக ஆங்காங்கே காட்டியுள்ளது இத்தொடர்பு முறைகளைப் புரிந்து கொள்வதற்கும், புரிந்துகொண்டு அவற்றிற்கேற்ப ஆய்வுப்பணியை அமைத்துக்கொள்வதற்கும் மிகுந்த துணைசெய்யும் என நம்பலாம்.

நாட்டுப்புறவியலாய்வு ஒரு பெருங்களம். அதில் எத்தனையோ சிறு ஆய்வுக்களங்கள் இருப்ப தைக் காண்கிறோம். சிறு ஆய்வுக்களங்களாக அவை இருந்தாலும் அவற்றில் ஆழமான ஆய்வுகளை மேற் கொள்ளவேண்டிய கட்டாயம் இன்று ஏற்பட்டு வருகி றது. ஆழமான ஆய்வு எந்தவொரு துறையின் வளர்ச் சிக்கும் மேம்பாட்டிற்கும் இன்றைய நிலையில் மிகவும் தேவையானதாகும். இதைக் கருத்திற்கொண்டு நாட் டுப்புறவியலாய்வு வகைகளும் அணுகுமுறைகளும் அமைக்கப்பட வேண்டும். அவ்வாறு அமைக்கப்படுவ தோடு அவை முறையாக மேற்கொள்ளப்படவும் வேண் டும். முறையாக மேற்கொள்ளப்படுவதற்கு ஏற்ற வகையிலே இன்றைய ஆய்வு நெறிமுறைகளில் மாற் றங்கள் செய்யப்படவேண்டும். அத்தகைய மாற்றங்கள் சமுதாயக் கண்கொண்டும் சமுதாய வளர்ச்சியை மைய

மாகக்கொண்டும் ஏற்படுத்தப்படுதல் வேண்டும். அவ்வாறு மாற்றங்களும் செம்மையாக்கமும் ஏற்படும் நிலையில் நாட்டுப்புறவியலாய்வு முடிவுகள் சமுதாயத்திற்கும் அதன் வளர்ச்சிக்கும் மறைமுகமாகவாவது வழிகோலுவதாக நிச்சயம் அமையும்.

ஆகவே எதிர்கால ஆய்வுகள் இத்தகைய நோக்கில் அமைய நாட்டுப்புறவியல் ஆய்வாளர்கள் தத்தம் பணிகளைத் தன்னம்பிக்கையோடும் உறுதியோடும் மேற்கொள்ளவேண்டியது மிகவும் அவசியம். தன்னம்பிக்கையும் உறுதியும் வளர இதுபோன்ற நூல்கள் உதவும் எனப் பெரிதும் எதிர்பார்க்கலாம்.



# துணை நூல்கள் - கட்டுரைகள் : பட்டியல்

## I தமிழ்


அகத்தியலிங்கம், ச. (1983) ' நாட்டுப்புறவியல் ', நாட்டுப் புறவியல் 1.1-8. இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம் : அண்ணாமலைநகர்.

(1984) ' நாட்டுப்புற வழக்குகள் ', நாட்டுப்புறவியல் 1.67-76. இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம் : அண்ணாமலை நகர்.

அண்ணாதுரை, கு. (1985) ' பெரிய மலையாளிகள் பழமொழிகளும் நம்பிக்கைளும் ', நாட்டுப் புறவியல் 2.161-68. இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம் : அண்ணாமலைநகர்.

அண்ணாமலை, மு. (1984) நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், மருதமலையான் பதிப்பகம் : சென்ன்ன்.

அப்துல் ரஹ்மான், திரீ. யெம். (1984) அலாவுதீனும் அற்புத விளக்கும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் : சென்னை.

அருள்சாமி, மு. சு. (1980) ஈசாப் நீதிக்கதைகள், வானதி பதிப்பகம் : சென்னை.

அறிவுநம்பி, அ. (1986) தமிழகத்தில் தெருக்கூத்து, அமுதன் நூலகம் : காரைக்குடி.

ஆறுமுகம் புலவர், பூ. (1981) தோட்டுக்காரி அம்மன் கதை, திங்கள் சந்தை செந்தாமரை அச்சகம் : அகத்தீசுவரம்.

இராசகோபால், கோ. வி. (1985) காமன் கதைப்பாடல் - ஓர் ஆய்வு, மாருதி பதிப்பகம் : சென்னை.

இராமசாமி, மு. (1983) தோற்பாவை நிழற்கூத்து, மதுரை காமராசர் பல்கலைக் கழகம் : மதுரை.

இராமசாமிப் புலவர், சு. அ. (1957) தென்னாட்டுப் பழங்கதைகள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் : சென்னை.

இராமநாதன், ஆறு. (1978) தமிழில் புதிர்கள்-ஓர் ஆய்வு சமுதாய சிற்பிகள் வெளியீட்டகம்: புவனகிரி.

(1986) நாட்டுப்புறக் கதைகள், மணிவாசகர் பதிப்பகம் : சிதம்பரம்.

(1988) வரலாற்று நிலவியல் ஆய்வு முறை - அறிமுகமும் ஆய்வுகளும், தமிழ்ப் பல்கலைக்கழகம்: தஞ்சாவூர்.

கனகராச்சு, அ. (1987) — அம்மாப்பாடல் அமைப்பியல் ஆய்வு,
அம்பிகா பதிப்பகம் : புதுச்சேரி.

கேசவன், கோ. (1985) — கதைப்பாடல்களும் சமூகமும்,
தோழமை வெளியீடு : கும்பகோணம்.

(1988) — நாட்டுப்புறவியல் ஒரு விளக்கம்,
புதுமைப் பதிப்பகம் : திருச்சி.

கைலாசபதி, க. (1979) — சமூகவியலும் இலக்கியமும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், பிரைவேட் லிமிடெட் : சென்னை.

(1983) — இலக்கியச் சிந்தனைகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், பிரைவேட் லிமிடெட் : சென்னை.

கோ. பெ. நா. (1986) — பர்லைமலைப் பாடல்கள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், பிரைவேட் லிமிடெட் : சென்னை.

கோமதிநாயகம், தி. சி. (1979) — தமிழ் வில்லுப்பாட்டுகள்,
தமிழ்ப் பதிப்பகம் : சென்னை.

கோவிந்தன், வை. (1986) — தமிழ்நாட்டுப் பழங்கதைகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் : சென்னை.

சக்திக்கனல் (1985) — அண்ணன்மார் சுவாமி கதை,
விஜயா பதிப்பகம் : கோயம்புத்தூர்.

சக்திவேல், சு. (1983) நாட்டுப்புறவியல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம் : சிதம்பரம்.

சண்முகசுந்தரம், சு. (1975) நாட்டுப்புறவியல், மணிவாசகர் நூலகம் : சென்னை

(1980) நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு, மணிவாசகர் நூலகம் : சிதம்பரம்

(1981) நாட்டுப்புறவியல் சிந்தனைகள், மணிவாசகர் நூலகம் : சிதம்பரம்

(1984) தாலாட்டுப்பாடல்கள், பூம்புகார் பிரசுரம் பிரஸ் : சென்னை.

(1985) தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள், மணிவாசகர் பதிப்பகம் : சிதம்பரம்.

(1986) திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, காவ்யா : பெங்களூர்.

சந்திரசேகரன் இரா. (1977) 'நாட்டுப்புறப்பாடல்களும் சமூகப் பிரச்சனைகளும்', 'சென்னை பச்சையப்பன் கல்லூரி மலர், சென்னை.

சரஸ்வதி வேணுகோபால் & இராமசுவாமி, மு. (1979) — கள ஆய்வில் சில அனுபவங்கள், தாமரை வெளியீடு : மதுரை.

சரஸ்வதி வேணுகோபால் (1981) — தமிழக நாட்டுப்புறவியல், தாமரை வெளியீடு : மதுரை.

சாமி, பி. எல். (1983) — தமிழ் இலக்கியத்தில் நாட்டார் பண்பாடு, வானதி பதிப்பகம் : சென்னை.

சுந்தரம், மெ. (1983) — 'குலவிளக்கு', நாட்டுப்புறவியல், 1.33-40. இந்திய நாட்டுப்புறவியல் கழகம் : அண்ணாமலைநகர்.

சுப்பிரமணியன், ச. வே. (1979) — மிழ்நாட்டுப்புறவியல் ஆய்வு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: சென்னை.

சுப்பிரமணியம், சி. எஸ். (1984) — கிரேக்க நாடோடிக் கதைகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் : சென்னை.

ஞானசேகரன், தே. (1987) — மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள் பார்த்திபன் பதிப்பகம் : சென்னை

ஞானமூர்த்தி, தா. ஏ. (1988) ' நாட்டுப்புற இலக்கியம் ', நாட்டுப்புறவியல், 1.9-17. இந்திய நாட்டுப்புற வியல் கழகம் : அண்ணாமலைநகர்.

தசரதன், ஆ. (1988) அழிப்பாங்கதைப் பாடல்கள், (சுவடிப்பதிப்பு ஆய்வு நூல் வரிசைகள்–1) பயோனியர் புக் சர்வீசஸ் : சென்னை.

துர்க்காதாஸ்சாமி, எஸ். கே. (1983) தமிழ்நாட்டுப் பழமொழிகள், வானதி பதிப்பகம் : சென்னை.

தெய்வசிகாமணி, நெ. சி. (1983) வேதாளம் சொன்ன புதிர் கதைகள், ஸ்டார் பிரசுரம் : சென்னை.

(1977) தொல்காப்பியர் - பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் : சென்னை.

நடராசன், தி. (1976) குருசாமி கதை, (நாட்டுப்புறக்கதைப் பாடல், சர்வோதய இலக்கியப் பண்ணை: மதுரை.

977) வன்னியடி மறவன் கதை, வெங்கடேஸ்வர் பிரஸ் : மதுரை

(1978) கட்டபொம்மு கும்மிப்பாடல், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் : மதுரை.

(1979) நாட்டுப்புறச்சிறுவர் பாடல்கள், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் : மதுரை.

நடராசன், வை. தி. (1975) அயோத்திகதை (இராமாயணம்) நாட்டுப்புறக்கதைக் காவியம், இராஜேஸ்வரி வெளியீடு : நாகர்கோவில்.

நவநீதகிருஷ்ணன் (1975) கண்ணகி கதை (வில்லுப் பாட்டு), கழக வெளியீடு : சென்னை.

நெல்வாய்சங்குப்புலவர் (1983) மதனகாமராசன் கதைகள், பைலட் பப்ளிகேஷன்ஸ் : சென்னை.

பரமசிவானந்தம், அ. மு. (1980) தமிழ்நாட்டு விழாக்கள், தமிழ்க்கலைப் பதிப்பகம் : சென்னை.

பாலசுப்பிரமணியன், இரா. (1986) கணியான்கூத்து, சத்யா வெளியீடு : பாளையங்கோட்டை.

பாலசுப்பிரமணியம், இரா. (1986) **தமிழர் நாட்டு விளையாட்டுகள்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: சென்னை.

பெருமாள், ஏ. என். (1983) **வெள்ளைக்காரன் கதை,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: சென்னை.

(1984) **தமிழர் இசை,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: சென்னை.

(1987) **நாட்டுப்புறவியல் சிந்தனைகள்,** ஐந்திணைப் பதிப்பகம் : சென்னை.

பெருமாள், அ. கா. (1986) ***நாட்டார் கதைகள்,*** சோபிதம் : நாகர்கோவில்.

முத்துச்சண்முகன் & அசோகன், வி. (1981) ***நொண்டி நாடகங்கள்,*** முத்துப்பதிப்பகம் : மதுரை.

முருகானந்தம், ச. (1987) ***நாட்டுப்புறப்பாடல்கள் (நாட்டார் பாடல்கள்),*** தமிழ்ப் புத்தகாலயம் : சென்னை

முல்லை முத்தையா, பி. எஸ். (1985) ***1000 விடுகதைகள்,*** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் : சென்னை.

(1987) *தெனாலிராமன் விகடக் கதைகள்,*
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் : சென்னை.

முத்தையா, இ.
(1986) *நாட்டுப்புற மருத்துவ மந்திரச்சடங்குகள்,*
அன்னம் வெளியீடு : சிவகங்கை

ராஜநாராயணன், கி.
(1985) *தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள்,*
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் : சென்னை.

ருக்மணி, கி.
(1988) *பேயோட்டும் உடுக்கடிப் பாடல்கள்-ஓர் ஆய்வு,*
சமந்தா பதிப்பகம் : க. புதுப்பட்டி

சோமலெ
(1974) *தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,*
நேஷனல் புக் டிரஸ்ட் : புதுதில்லி

லூர்து, தே.
(1981) *நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்,*
பாரிவேள் பதிப்பகம் :
திருநெல்வேலி.

(1981) *நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்-1,*
பாரிவேள் பதிப்பகம் :
திருநெல்வேலி.

(1986) *நாட்டார் வழக்காற்றியல் கள ஆய்வு,*
பாரிவேள் பதிப்பகம் :
திருநெல்வேலி

(1988) *நாட்டார் வழக்காறுகள்,*
மணிவாசகர் பதிப்பகம் :
சென்னை.

லேனா தமிழ்வாணன்
(1985) *தமிழகப் பழக்க வழக்கங்களும் அவற்றின் காரணங்களும் பயன்களும்,*
மணிமேகலை பிரசுரம் :
சென்னை.

(1986) *தமிழகத் தாலாட்டுப் பாடல்கள்,*
மணிமேகலை பிரசுரம் :
சென்னை.

வலம்புரி அண்ணாமலை
(1981) *இராஜாதேசிங்கின் கதை,*
அன்பு பப்ளிகேஷன்ஸ் :
சென்னை.

வளவன், சா.
(1985) *நாட்டுப்புறவியல் கட்டுரைகள்,*
மைதிலி பதிப்பகம் : சென்னை

வானமாமலை, நா.
(1971 அ) *வீரபாண்டி கட்டபொம்மு கதைப்பாடல்,*
(நாட்டுப்புறப்பாடல் வெளியீடு-1)
மதுரைப் பல்கலைக்கழகம் :
மதுரை.

(1971 ஆ) *காத்தவராயன் கதைப் பாடல்,* (நாட்டுப்புறப்பாடல் வெளியீடு-3) மதுரைப் பல்கலைக்கழகம் : மதுரை.

(1972) *கான்சாகிபு சண்டை,* (நாட்டுப்புறப்பாடல் வெளியீடு-5) மதுரைப் பல்கலைக்கழகம் : மதுரை.

வெங்கட்சுவாமிநாதன் (1985) *பாவைக்கூத்து,* அன்னம் வெளியீடு : சிவகங்கை.

வேலுசாமி, நா. (1980) *கரகஆட்டக்கலை,* தேன்மொழி நூலகம் : மதுரை.

வேலுப்பிள்ளை, சி. கே. (1983) *மலைநாட்டு மக்கள் பாடல்கள்,* கலைஞன் பதிப்பகம் : சென்னை

ஜான்ஆசிர்வாதம் (1985) *தமிழர் கூத்துகள்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: சென்னை.


## II ENGLISH


Alan Lonax (1915) *Folk Song Style and Culture,* Transaction Books: New Jersey.

| | |
|---|---|
| Dan Ben Amos (1982) | *Folklore in Context,* (Essays) South Asian Publishers : New Delhi. |
| Helen Hemingway Benton (Pub) (1973) | *Encyclopaedia Britanica-7,* (Macropaedia knowledge in Depth), University of Chicago. |
| (1973) | *The New Encyclopaedia Britanica-15,* (Macropaedia, knowledge in Depth), University of chicago. |
| 1973 | *Encyclopaedia Britanica-IV,* (Micropaedia) University of Chicago. |
| Jaggi, O. P. (1982) | *History of Science Technology and Medicine in Indian Folk Medicine-3.* Atmaram & Sons : Delhi. |
| Jawaharlal Handoo (1977) | *A Bibliography of Indian Folk Literature,* (CIIL Folklore Series-2) Central Institute of Indian Languages : Mysore. |
| (1983) | *Folklore of Rajasthan,* (CIIL Folklore Series-6) Central Institute of Indian Languages : Mysore. |

(1989) — *Folklore an Introduction,* (CIIL Folklore Series-7) Central Institute of Indian Languages : Mysore.

Jogesh Das (1972) — *Folklore of Assam,* (Folklore India Series) National Book Trust of India: New Delhi.

Karunakaran, K. & Sivashanmugam, C. (1981) — *Study of Social Dialects in Tamil,* All India Tamil Linguistics Association : Annamalainagar.

Karunakaran, K. (1983) — *Sociolinguistic Patterns of Language Use*, AITLA: Annamalainagar.

Karunakaran, K. Thayalan, V. & Meenakshisundaram, S. (1986) — *Questionnaire for the Study of Multilingualism,* Bharathiar University : Coimbatore.

Karunakaran, K. & Thayalan, V. (1987) — 'Folklore Research for Modern Communication', *Journal of the Bharathiar University (Arts)-2,* pp. 127-131

Karunakaran, K. Sivashunmugam, C. & Perumalsamy, P. (1989) — *Questionnaire for the Socio linguistic Survey of Tamil and Telugu Speech Varieties in the Western Districts of Tamil-nadu*, Bharathiar University: Coimbatore.

Karunakaran, K. Jawaharlal Handoo (eds) (1988) — *Folklore of India*, (Commoness and Comparisons), Bharathiar University : Coimbatore.

Lalitha Handoo (1988) — *Folklore and Myth*, (CIIL Folklore Series-8), Central Institute of Indian Laungages : Mysore.

Peter J. Claus Jawaharlal Handoo & Pattanayak, D. P. (1987) — *Indian Folklore II*, (CIIL Folklore Series-6), Central Institute of Indian Languages : Mysore.

Ramachandra Rao, S.K. (1980) — *The Folk origins of Indian Tempels*, IBH Prakashara : Bangalore.

Sakthivel, S. (1976) — *Folklore Literature in India*, Meena Pathippakam : Kothaloothu.

Shanmugam Pillai, M. & Erica A. E. claus (1981) — *Folk Beliefs of the Tamils,* Muthu Pathippakam : Madurai.

Sreedhar, M. V., Dua, H. R. & Rajashree Subbayya, K. S. (1984) — *Questionnaire Bank for Socio-linguistic Surveys in India,* Central Institute of Indian Languages : Mysore.

Subramanian, P.R. (1988) — 'Safe-Unsafe-Safe A structural Frame in the Folk Games', *Folklore of India,* (Commonnes and Comparisons) pp. 9-19, Bharathiar University : Coimbatore.

Subramanian, S. V. & Veerasami, T. V. (1981) — *Cultural Heritage of the Tamils,* International Institute of Tamil Studies : Madras.

Ved-Prakash Vatuk (1979) — *Studies in Indian Folk Traditions,* Ramesh Jain, for Manohar Publication : New Delhi.

